# இடமதிப்பு



ம.ரா.போ.குருசாமி



விற்பனை உரிமை
மெர்க்குரி புத்தகக் கம்பெனி
ராஜ வீதி - கோயமுத்தூர் - 1.

படையல்

நெருக்கடியில் உதவிய
முதல்வர்

திரு. போ. ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்களுக்கு

# சிறு குறிப்பு

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து முப்பத்தாரு, முப்பத்தேழோ—சரியாக நினைவில்லை. அப்போது 'தட்ச யக்ஞம்' என்று ஒரு திரைப்படம் வந்தது. நான் உயர்நிலைப் பள்ளி மாணவன். மதுரையில் அந்தப் படத்தைப் பார்த்தேன். படத்தின் கலைத்தரம் பற்றி அந்தக் காலத்தில் ஒன்றும் தெரியாது. ஆனல், அன்று அந்தத் திரைப் படத்தில் கண்ட சிவன் கூத்து இன்னும் என் உள்ளத்தில் கிளர்ச்சி ஊட்டுகிறது... பிறகு கல்லூரியில் படிக்கும்போது ஒரு சிந்தனை எழுந்தது: உயிருலக இயக்கங்களுக் கெல்லாம் அடிப்படை எது? அங்கு ஏற்படும் பிறழ்ச்சிகளுக்கு என்ன காரணம்? இந்தச் சிந்தனை பல ஆண்டுகள் என்னுளே கிடந்தது. அந்தச் சிந்தனையின் விளைவு தான் 'ஊழி'. அதே சிந்தனை இனியும் வேறு வடிவங்கள் கொள்ளக்கூடும்.

1944—டாக்டர் மு. வ. அவர்களுக்கும் எனக்கும் மிக வேண்டிய நண்பர் ஒருவர்; அப்போது மணப் பருவத்து முறுக்கேறிய காளை. முதற் காதலின் 'தோல்வி'யால் மிகவும் அதிர்ச்சி அடைந்தார் அந்த நண்பர். அவருடைய உள்ளத்தைக் கவர்ந்த பெண், தன் இதயத்தையும் அவருக்குப் பறிகொடுத்தாள்.

ஆனாலும், காதல் முற்றவில்லை; மணம்பெறவில்லை. இளம் பருவத்துக் காளைக்கு இந்த அதிர்ச்சியிலிருந்து மீள்வது எளிதாக இல்லை...பிறகு ஒரு தெளிவு பிறக்கவும் நண்பருக்கு வழி ஏற்பட்டது...'நண்பரின் உள்ளத்துக் கிளர்ச்சிகளைக் கதையாக்கு' என்று மு. வ. சொன்னார். எழுதி முடித்து அவரிடம் படித்துக் காட்டினேன். நான் படித்துமுடித்த பிறகு தாமும் ஒன்று எழுதி யிருப்பதாகச் சொல்லிப் படித்தார். இரண்டுக்கும் மூலம் ஒன்று; கிளைத்த முறை வேறு. அவர் எழுதிய கதை 'எவர் குற்றம்' என்ற தலைப்பில் விடுதலையா என்ற நூலில் இடம் பெற்றுள்ளது. நான் எழுதிய 'வாழ்க்கைத் துணை' இந்த நூலில் இடம் பெற்றுள்ளது.

திறனாய்வுக் கருத்துக்களைக் கதை வடிவிலே கொடுக்க நினைத்து எழுந்தவை இரண்டு கதைகள். 'தோல்விதானா' என்பது ஒன்று; 'சுடலையாண்டி' என்பது மற்றொன்று. (இந்தச் 'சுடலையாண்டி' யைப் படித்தவுடன் மு. வ. அவர்கள் உள்ளம் பலவகை என்ற இலக்கிய ஆராய்ச்சிக் கட்டுரை எழுதினார்.)

* * *

இப்படி ஒவ்வொரு கதையும் தோன்றிய விதத்தைச் சொல்வது என் நோக்கமன்று. இங்கே குறிப்பிட்ட நான்கு கதைகள் சற்றே போக்கு மாறியவை; சற்று நிதானத்தோடு படிக்கவேண்டிய அமைப்புக் கொண்டவை.

மற்றவை பெரும்பாலும் அன்றாட வாழ்க்கையிலே எழக்கூடிய சிந்தனைகளின் விளைவுகளே.

இந்தக் கதைகள் முன்னரே தமிழ் முரசு, தமிழ் நாடு (வார இதழ்), தென்றல் (மாத இதழ்), சுடர், கலைக் கதிர் முதலிய இதழ்களில் வெளிவந்துள்ளன. இவற்றை முதலில் வெளியிட்டு ஊக்கிய இதழாசிரியர்கட்கு நன்றி தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்தக் கதைகளை நூல் வடிவில் தொகுத்து வெளியிட உதவிய நண்பர்களுக்கு நன்றி உரியது.

ம. ரா. போ. குருசாமி




## உள்ளே ....

## பிற நூல்கள்

| | | |
|---|---|---|
| சிலப்பதிகாரச் செய்தி | ... | 2.50 |
| வித்தகர் வாழ்க்கை | ... | 2.00 |
| வாழ்வும் வழியும் | ... | 2.00 |
| பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை (மொ.பெ.) | | |
| மண்ணிலும் விண்ணிலும் (மொ.பெ.) | | |
| டால்ஸ்டாய் கதைகள் (மொ.பெ.) | | |




# இடமதிப்பு

திவான் பகதூர்-சக்கரவர்த்தி ஐயங்காருக்குத் தலைகால் புரியவில்லை. தம்மையும் ஒரு கூட்டத்துக்கு வரும்படி அழைத்து, அந்தக் கூட்டத்துக்குத் தலைமை தாங்கும்படியாகவும் கேட்டுக் கொண்டார்கள் என்று சொன்னால், அவர் ஏன் மகிழமாட்டார்!

வெள்ளைக்காரன் என்றைக்குக் கப்பல் ஏறினானோ அன்றைக்கே அவருடைய பெருமையெல்லாம் மலை ஏறிவிட்டது. "நேற்றைய பயல்களெல்லாம் கதர்ச் சட்டை போட்டுண்டு பெரிய மனுஷ்யன்னுட்டு வந்துடரான்கள்" என்பது தான் இப்போதைய அரசியல் தலைவர்களைப்

பற்றி அவருடைய தீர்ப்பு. “கண்ணிய மென்றால் இந்தப் பசங்களுக்குத் தெரியுமா? தண்ட வாளத்தைப் பேர்த்தவன்களெல்லாம் தண்டல் காரன்களாக மாறிவிட்ட காலமிது........” என்று இந்த வகையாக உள்வீட்டி விருந்து உரக்கப் பேசுவார். ‘மதுரை மெயில்’ படிக்கும்போது தான் மேற்கண்டவாறான கருத்துரைகளை அவர் வெளியிடுவார். அவருடைய ‘பழைய’ பிரமுக வாழ்க்கையின் ஆட்டங்களெல்லாம் ‘ஆத் துக்காரி’யிடம் அளக்கும் அளப்புக்களோடு ஒடுங்கிவிட்டன. சோம்பேறி நாற்காலியும் ஊஞ்சலும்தான் அவருக்கு அடைக்கலம் தரு கின்றன. தம் அறையிலே மாட்டியுள்ள தம் முடைய படத்தையே அவ்வப்போது பார்த்துப் பெருமூச்சு விடுவார். அதைப் பார்த்துக் கொண்டு அசையாமல் ஆடாமல்—வைத்த கண் வாங்காமல்—நின்றுவிடுவதும் உண்டு. அந்தச் சரிகைத் தலைப்பாகை, கரும்பட்டுக் கோட்டு, சரிகை அங்கவஸ்திரம், மெல்லிதாக நெற்றியி னூடே செங்குத்தாக நிற்கும் அந்தச் சிவப்புக் கோடு........இவையெல்லாம் கதையாய்ப் பழங் கனவாய்ப் போய்விட்டன. இந்தக் கோலத் தைக் காணவேண்டுமென்று அவருக்கே அள விறந்த வேட்கை. ஆனால், வீட்டுக்குள்ளேயே இந்தக் ‘கோலங்காண்படல’த்துக்கு இடமிருக்க முடியாதே! முன்னெல்லாம் பொதுக்கூட்டத் துக்குத் தலைமை தாங்குவோரே பணம் செல வழித்துக் கூட்டம் போடுவதுண்டு. அந்த வழக் கமும் இப்போது போக்கொழிந்து விட்டது.

இந்த நிலையிலே—பாவம் ஐயங்கார் அந்தப் படத்தை, ஏதோ நெருக்கடி காரணமாகத் துறவி யாகிவிட்ட ஒருவர் தம் பூர்வாசிரமப் படத்தைப் பார்ப்பதுபோல், பார்த்துப் பார்த்து ஏங்குவார்—இது வழக்கம்.

கவர்னர் துரைகளோடு குலுக்கி அலுத்த கரம் இன்று கவனிப்பாரில்லாமல் சோர்ந்து கிடந்தது. ஆங்கிலம் பேசிப் பேசிக் களித்த வாய் இன்று அழைப்பாரில்லாமல் மூடிக்கிடந் தது. பழைய பட்டுக் கோட்டு, பெட்டிக்குள் பூச்சிக்கு விருந்தளித்து வீணுகிக் கிடந்தது.

* * *

**பா**ரதியக் கல்லூரியின் தத்துவக் கழகத் தில் திவான்பகதூர் சக்கரவர்த்தி ஐயங்கார் தலைமை தாங்க ஏற்றுக்கொண்டார். அக் கழகத்தின் செயலாளன் சுந்தரம் வந்து அழைத்தபோது அவரால் நம்பவே முடிய வில்லை.

"என்னையா அழைக்கிறீர்கள்? நானெல் லாம் பழைய பேச்சாளி. இப்போதைய போக் குக்கும் என் காலப் போக்குக்கும்......."

"பழமை என்றால் அதற்கொரு தனிச் சிறப்புண்டல்லவா? பெருங்காயம் இருந்த பெட்டி மணத்தை விட்டுவிடுமா? புதுமை வெறி யர்களுக்குப் பழமையின் சாரம் சிறிதாவது தெரிந்தாலல்லாமல் வாழ்வில் விமோசனம் ஏற்

படாது. அதனல் தாங்கள் மறுக்காமல் கட்டா யம் வந்தேயாக வேண்டும்........"

"என்னமோ, இந்தக் காலத்துப் பிள்ளை களில் உன்னைப் போலவும் இளைஞர்கள் இருக் கிருர்கள் என்பதைக் காணும்போது........"

"பெரியவாள் அப்படி யெல்லாம் என்னைப் புகழக்கூடாது. தங்களைப் போலொத்த அறி ஞர்கள் எங்கள் தத்துவக் கழகத்தில் பேசினல் எவ்வளவோ பயன் உண்டு........"

"எனக்கென்ன தத்துவம் தெரியும்? அந்த விஷயமே கொஞ்சங்கூடத் தெரியாதே!"— இதைச் சொன்னபோது திவான்பகதூருக்கே கொஞ்சம் சங்கடமாகத்தான் இருந்தது. "அப் படியா? தத்துவமே தெரியாமல் நீங்கள் எப் படிப் பேசமுடியும்?" என்று கேட்டுவிட்டு, வந்தவன் எழுந்து விர்ரென்று போய்விட்டால் என்ன செய்வது? கைக்கெட்டியது வாய்க்கெட் டாமல் போய்விடுமே!

ஆனல், சுந்தரம் அப்படிப் போய்விடுவ தாகத் தெரியவில்லை.

"தங்களுக்குத் தத்துவம் தெரியாது என்று சொல்லி என்னை ஏமாற்ற முடியுமா? தங்கள் மகள் சுபத்திரை என்னுடன் படிக்கிருர் என்ப தைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். தங்களுக்குத் தத்துவத்தில் விருப்பமும் பயிற்சி யும் இல்லாமலா சுபத்திரையைத் தத்துவ வகுப்பில் சேர்த்திருப்பீர்கள்?"

" அடடே! என் பெண்ணைக்கூட உனக்குத் தெரியுமா? சரிசரி. நான் மாட்டேன் என்றால் இனிமேல் விடவா போகிறாய்?........ம்ம் அன்றைக்கு யார் பேசப் போகிறார்கள்? பொருள் என்ன?"

"இரண்டு மாணவர்கள்தான் பேசுவார்கள். 'தத்துவமும் சீர்திருத்தமும்' என்பது பொருள்."

இதைக் கேட்டபோது திவான்பகதூருக்குச் சிறிது ஏமாற்றந்தான். யாராவது பெரிய மனிதர் பேசினால் தமக்குப் பெருமையா யிருக்கும். பெரிய மனிதர் யாரும் இல்லை யென்பதற்காக வரமாட்டேன் என்றா சொல்வது? பிறகு இவரை யார் வந்து அழைக்கப் போகிறார்கள்? இருந்தாலும் தம் எண்ணத்தைக் குறிப்பாகச் சொல்லிவிட நினைத்தார் திவான் பகதூர்.

" ஏன், யாராவது ஒரு எம். எல். ஏயைப் பிடிக்கக்கூடாதோ? என்னைப் போல ஓய்ந்து கிடக்கிற பேர்வழிகளுக்கு ஏன் தொந்தரவு?"

சுந்தரம் ஒன்றும் சளைத்துவிட வில்லை. "எம். எல். ஏக்களை யெல்லாம் கூப்பிட்டால் எங்களுக்கு ஏதாவது பயன் இருக்கவேண்டாமா?" என்றான்.

" அப்படியானால் அவர்களால் ஏற்படாத பயன் என்னால் ஏற்படும் என்று என்னைப் புகழ்கிறாய், இல்லையா?"

"முகஸ்துதியா? இல்லவே இல்லை. உண்மையாகவே தாங்கள் வருவதால் எவ்வளவோ பெரிய பலன் உண்டு......."

இளைஞர்கள் முன்னுக்குவரவேண்டியதைப் பற்றியும் சமூகம் சீர்திருந்த வேண்டியதைப் பற்றியும் தற்கால இளைஞர்களைவிடப் படுதீவிரமாக நெடு நேரம் பேசினார் ஐயங்கார். இளைஞர்களைப்பற்றி அவர் மிகவும் உயர்வான எண்ணம் கொண்டிருந்தாரென்று எண்ண வேண்டாம். இளைஞர்களென்றாலே தறிதலைகள் என்பது அவருடைய நினைவு. ஐயங்கார் ஒரு சர்வாதிகாரியாக இருந்தால் சீர்திருத்தம் என்ற சொல்லைக் கூட ஒழித்துவிடுவார். பின் ஏன் சுந்தரத்திடம் அப்படிப் பேசினார் என்று கேட்கிறீர்களா? அதுதான் விசேஷம். சுந்தரம் வரவில்லையென்றால் பட்டுக் கோட்டுக் கெட்டுக் குட்டிச் சுவராய்ப் போய் விடாதா?

'பட்டுக் கோட்டுக்கு இனிமேல் சுக்கிர தசைதான்' என்று ஐயங்கார் மனம் எக்களிப்புக் கொண்டது. அதே சமயத்தில் அதே சுக்கிர தசை ஐயங்காரின் குடும்ப வாழ்க்கையை வக்கிர திசையில் இழுத்துச் சென்றுகொண்டிருந்தது.

* * *

"என்ன சுந்தரம்! என் யோசனை எப்படி? எங்கள் அப்பாவை ஏமாற்ற நான் சொன்ன யுக்திக்கு என்ன பரிசு தருவீர்கள்?"

"உன் பேர் சுபத்திரையல்லவா? சுபத்தி ரையை அருச்சுனனேடு அனுப்ப அந்தக் காலத் தில் கண்ணன் என்று ஒருவன் தேவை. இப் போதோ, சுபத்திரையே கண்ணனுகவும் இருக் கிருள்........"

"சரிசரி, அப்படிஇ மெதுவாக நீங்கள் அருச்சுனனுக மாறிவிட வேண்டாம்! என்னமோ சொல்வார்களே—ஆற்று மணலை எண்ணினு லும் எண்ணலாம்........"

"நடக்க முடியாததுபற்றி ஏன் பேசுகிருய்? நீ என்ன அப்படி ஏமாந்தவளா? என்னை அக்கம் பக்கம் திரும்பக்கூட விடமாட்டாய் போலிருக்கிறதே — அதிருக்கட்டும் உங்கள் அப்பா என்ன பேசுவார்?"

"என்னத்தைப் பேசுவார்! ஐயோ பாவம்! அந்தக் காலத்தி லெல்லாம் யாராவது எழுதிக் கொடுப்பார்கள். இவர் பெருமையாய்ப் படித்து விட்டு வருவார். இப்போதுமட்டு மென்ன? நான்தான் எழுதிக்கொடுக்கப் போகிறேன். அவ்வளவுதான் என்று நினைக்க வேண்டாம். ஒரு குறும்பும் செய்யப் போகிறேன். பாருங் கள் வேடிக்கையை........"

—இது தியாகராயநகர்ப் பனகல் பார்க்கில் காற்றுவாக்கில் மிதந்துவந்த உரையாடல்.

*    *    *

'மாலை ஐந்து மணிக்குக் கூட்டம். திவான் பகதூர் நான்கு மணிக்கெல்லாம் வந்துவிட்டார். "இண்டியன் பங்ச்சுவாலிட்டி என்று வெள்ளைக் காரன்கள் கேலி பண்ணுகிற மாதிரி நாம் நடக் கக் கூடாதல்லவா?" என்று யாரும் கேளாமலே சொல்லிக்கொண்டார். சுபத்திரைக்கும் சுந்த ரத்துக்கும்மட்டுமே அவர் ஏன் முன்கூட்டியே வந்துவிட்டார் என்று தெரியும்.

ஐயங்காருக்கு ஒரே கொண்டாட்டம். தம் முடைய வாழ்வின் அந்திக் காலத்தில் மீண்டும் உதய காலத்தின் ஒளியைக் காணமுடியும் என்று நினைத்ததே கிடையாது. எது இயற்கை யில் நடவாதோ அது நடப்பது கண்டு அவருக்கு ஒரே வியப்பு. ஆனல், அவர் கண்ட உதயம் வேறு வாழ்க்கையைச் சேர்ந்தது. அது அவ ருக்குத் தெரியாது. மகிழ்ச்சியின் போதையிலே நிகழ்ச்சிகளை ஆராயும் அறிவு பறந்துவிட்டது.

கூட்டம் ஒன்றுமில்லை. ஏதோ ஒப்புக்கு என்று சொல்வதுபோல் பத்துப் பேர் கூடியி ருந்தார்கள். திவான்பகதூருக்கு அவமான மாகத்தான் இருந்தது. தம்மைப் போல் ஒரு 'பெரிய' மனிதன் இவ்வளவு சின்னஞ்சிறு கூட் டத்திலா பேசுவது! இருந்தாலும் அவர் அதை வெளியே காட்டிக்கொள்ளவில்லை.

"பத்துப் பேராக இருந்தாலும் அறிவிலே சிறந்த உங்களிடையே பேசும் வாய்ப்புக் கிடைத் ததைப் பெரும் பேருகக் கொள்ளுகிறேன்.

உயர்ந்த நிலையினதாகிய தத்துவத்தில் மனம் செலுத்துவது என்றால் எளிய காரியமா? சிலருக்குத்தான் அது முடியும். உலகத்திலேயே சிலர் தான் இருப்பார்கள். அப்படிப்பட்ட பொறுக்கி எடுத்த அறிஞர்களிடையே நான் பேசுகிறேன் என்றால் அதற்கு நான் எவ்வளவோ புண்ணியம் செய்திருக்க வேண்டும்........" என்று முன்னுரையாகப் பேசிக்கொண்டார்.

'லேடீஸ் அன் ஜெண்ட்டில் மென்' என்று தொடங்கி மடமட வென்று படித்து முடித்தார். அங்கே இருந்தது ஒரே ஒரு 'லேடி' தான்—சுபத்திரை. இருந்தாலும் எழுதியபடியே படித்துப் படித்துப் பழக்கமானவர்; சுபத்திரை எழுதியிருந்ததைப் படித்துவிட்டார்.

* * *

"என்ன சுபத்திரை! இப்படித் தான'டி என் மானத்தை வாங்குவாய்? சீர்திருத்தத்தைப் பற்றிய உன் கருத்தையெல்லாம் என் தலையிலே சுமத்திவிட்டாய்!"

"அதனால் என்ன'ப்பா? காலத்துக்குத் தக்கபடி மாறிக்கொள்ள வேண்டாமோ? நான் எழுதிக் கொடுத்ததிலே அப்படி என்ன தப்பு இருந்தது?"

"என்ன தப்பா? எல்லாம் சுத்த அபத்தம். இப்படியெல்லாம் எழுதினவள் என்னிடத்திலே முன்னடியே சொல்ல வேண்டாமோ? கலப்பு

மணம், கழுதை மணம், மண்ணுங்கட்டி, தெருப் புழுதி-இப்படி என்னென்னவோ இழவெல்லாம் எழுதித் தொலேத்திருந்ததே! எவனுவது பெரிய மனுஷன் கேள்விப்பட்டால் என்னைப் பிராம ணன் என்றுகூட மதிக்கமாட்டானே ......"

"மண்ணுங்கட்டி, தெருப் புழுதி யெல்லாமா அதிலே இருந்தது? என்னப்பா இது, இப்படிச் சொல்றயே?"

"பின்னே என்ன'டி? திவான்பகதூர்ப் பட்டத்தைப் பற்றி வேறே என்னென்னவோ எழுதித் தொலேத்திருந்தாய். என்ன பாடுபட்டு வந்த பட்டம் தெரியுமா? தண்டவாளம் பெயர்த்து, தந்திக் கம்பி அறுத்துவந்த பட்ட மென்று நினைத்தாய்?"

"சேச்சே! இல்லவே இல்லே; தங்கக் கம்பி யாய் இழுத்த இழுப்புக்கெல்லாம் இழுபட்டு, வால்பிடித்து வளைந்து கொடுத்து வாங்கிய பட்ட மல்லவா அது? நியாயந்தான். அது போனல் மனசுக்குக் கஷ்டந்தான்......."

"என்ன'டி அது? என்னையே கேலி பண்ணு கிருய்?"—இது கூட்டம் முடிந்து வீட்டுக்கு வந்த பின் தந்தையும் மகளும் பேசிக்கொண்டது.

* * *

இன்னெரு நாள் சுந்தரம் திவான் பகதூரிடம் வந்தான். ஐயங்கார் உள் அறையில் இருந்தார். வெளியே வராந்தாவில் இருந்த சுபத்திரையிடம் பேசிக்கொண் டிருந்தான்.

உள்ளே யிருந்த சக்கரவர்த்தியின் காதில் கேட்கும்படியாகவே பேசிக்கொண்டார்கள்.

"சுபத்திரை! உங்களால் ஒரு காரியம் ஆகவேண்டும். ஒய். எம். என். ஏயில் என் நண்பன் செயலாளனுக இருக்கிறுன். அவன் உங்கள் அப்பாவை எப்படியாவது பேச அழைக்க வேண்டுமென்று என் உயிரை வாங்குகிறுன். இது சம்பந்தமாக...."

"மிஸ்டர் சுந்தரம்! எங்கள் அப்பா உங்களைப்போல இளம் பிள்ளையா என்ன? வயசான காலத்திலே இப்படியெல்லாம் அலைய முடியுமா?"

உள்ளேயிருந்த ஐயங்காருக்கு ஆத்திரம் பொத்துக்கொண்டு வந்தது. 'என்னடா'து! இப்படியும் ஓர் அசட்டுப் பெண் உண்டா? பிரசங்கத்துக்கு யாராவது அழைக்கமாட்டார்களா என்று நான் ஏங்கிக் கிடக்கிறதென்ன, இந்தப் பெண் இப்படி உளறுகிறதே!.......' என்று உள்ளுக்குள் எண்ணி வெதும்பினுர். வெளியே மேலும் பேச்சுத் தொடர்ந்தது—

"அன்றைக்கு நம் கல்லூரியில் அவர் பேசிய பேச்சு இருக்கிறதே, அடடா! என்ன அருமை, என்ன அருமை! அதைக் கேட்டதனுல் தான் என் நண்பன் ஒரேயடியாய் என் உயிரை வாங்குகிறுன்."

இதைக் கேட்ட பிறகும் திவான்பகதூருக்கு உள்ளே இருக்கமுடியுமா? அவருடைய 'பெரிய

மனுஷத்தனம்' அவரை வெளியே இழுத்து வந்துவிட்டது.

'இந்த அசடு ஏதாவது சொல்லி அந்தப் பையனை அனுப்பிவிட்டால் என்ன ஆவது?' என்று எண்ணிய எண்ணம் அவரை வெளியே இழுத்து வந்து விட்டது.

சுந்தரம் பெரிய கும்பிடாகப் போட்டு வைத் தான். பிறகு என்ன? பழைய கதைதான்.

ஐயங்கார் "பட்டுக் கோட்டுக்கு இனிமேல் சுக்கிரதசைதான்" என்று எண்ணிக்கொண் டார். ஆனல் அதே சுக்கிரதசை சுந்தரத்தைச் சுபத்திரையின் அருச்சுனஞக மாற்றிவந்ததை அவர் அறியவில்லை.

பட்டுக் கோட்டுக்கு அடிக்கடி வேலை ஏற் பட்டது. ஐயங்கார் இன்பபுரிப் பயணத்தில் ஈடுபட்டார்.

சுந்தரம் அடிக்கடி சக்கரவர்த்தி ஐயங்கார் வீட்டுக்கு வந்தான். சக்கரவர்த்திக்குப் பின் வாரிசாக ஆவதற்குரிய ஏற்பாடு ஒழுங்காக அவருக்குத் தெரியாமலே-நடந்துவந்தது.

* * *

சிறிது காலம் சென்றது. ஒரு நாள் சுபத் திரையைக் காணேம். மூன்று நாட்கள் கழிந்தன.

ஒரு கடிதம் வந்தது. என்ன அதில் இருந் திருக்கும்? தெரியாதா?

மருமகனேடு மகளே வரவேற்ருர்; வேறு வழி இல்லே.

மறுநாள் செய்தித் தாள்களில் 'சீர்திருத்தத் திருமணம்' என்ற தலேப்பில் பின்வரும் செய்தி வந்தது:

> "திவான்பகதூர் சக்கரவர்த்தி ஐயங்கார் தம் ஒரே மகளான செல்வி சுபத்திரையைச் சந்தான கிருஷ்ண நாயுடுவின் மகன் செல்வன் சுந்தரத்துக்குத் திருமணம் செய்து கொடுத்தார். திவான்பகதூரின் சீர்திருத்த நெறியை எல்லோரும் போற்றுகிருர்கள்."

* * *

இரண்டு நாள் கழித்துத் திவான்பகதூர் வீட்டில் ஒரே கூட்டம். மணமக்களுக்குப் பாராட்டுக் கூட்டம் ஏற்பாடாகி யிருந்தது. திவான்பகதூரின் பட்டுக் கோட்டுக்கு மீண்டும் சுக்கிரதசைதான். பாராட்டுக் கூட்டத்தில் மணமக்களே யாரும் பாராட்டியதாகத் தெரியவில்லே. திவான்பகதூரின் பரந்த நோக்கத்தையும் சீர்திருத்த மனப் பாங்கையுமே எல்லோரும் பாராட்டினுர்கள். பட்டுக் கோட்டுக்குள் படபடத்துக் கொண்டிருந்த நெஞ்சை அறிந்தவர்கள் யாருமில்லே. சரிகைத் தலேப்பாகைக்குக் கீழ், சரிகை அங்கவஸ்திரத்துக்குமேல் ஒளி வீசிய பற்களேயே எல்லோரும் பார்த்தார்கள்.

பந்தலின் ஒரு மூலேயில் இரண்டு இளேஞர்கள் அமர்ந்திருந்தார்கள். சீர்திருத்தத் திருமணச் செய்தியை ஒருவன் படித்தான். மற்ற

வனும் அதைப் பார்ப்பதற்காகப் பத்திரிகையை வாங்கினன். செய்தியைப் படிக்கப் படிக்க அவன் கண்கள் விரிந்தன.

"என்ன'டா! இப்படி விழிக்கிருய்?"

"திவான்பகதூர் வீட்டுச் செய்திக்குப் பக்கத்திலே இன்னெரு செய்தி வந்திருக்கிறது. அதைப் படித்துப் பாரேன்........"

அவன் குறிப்பிட்ட செய்தி இதுதான்:

> "திப்பம்பட்டி, ஏப்ரல்...
>
> இவ்வூர்ச் சுப்பண்ணக் கவுண்டரின் தோட்டக்காரனுன முனியனின் மகளைக் கடத்திச் சென்றதாகச் செங்கன் என்ற இளைஞனைப் போலீசார் கைது செய்திருக்கிருர்கள். பிரஸ்தாபப் பேர்வழியுடன் முனியன் மகள் வள்ளி ஓடிப்போய் விட்டதாக இரண்டு நாட்களுக்கு முன்னர் வெளி வந்த செய்தி நேயர்களுக்கு நினைவிருக்கலாம்."

இதைப் படித்த பிறகு:

"இதிலே என்ன'டா பெரிய ஆச்சரியத்தைக் கண்டுவிட்டாய்?"

"இல்லை, திவான்பகதூர் பங்களாவிலே நடந்த காரியந்தானே திப்பம்பட்டிக் குடிசையிலும் நடந்திருக்கிறது! இதைச் சீர்திருத்தம் என்று போற்றுவானேன்? அதை மட்டும் 'ஓடி விட்டாள்' என்று சொல்லிப் பழிப்பானேன்?"

> "குறளை நீ படித்ததில்லையா? இல்லாரை எல்லாரும் எள்ளுவர்; செல்வரை எல்லாரும் செய்வர் சிறப்பு"

# ஊழி

நீலகிரி எக்ஸ்பிரசில் மூன்ரும் வகுப்பு டிக்கட் வாங்கும் பேர்வழிகள் மூச்சுத் திணறிச் சாவதற்கும் தயாராக இருக்கவேண்டும் என்பதை அறிந்திருந்தும், பேராசிரியர் ஞானமணி ஏதோ ஒரு அசட்டுத் துணிச்சலில் கோயம்புத்தூருக்கு மூன்ரும் வகுப்பிலேயே போவது என்று முடிவு செய்துவிட்டார். எப்போதும் அவர் இரண்டாம் வகுப்பிலோ அதற்குமேல் உள்ள 'அமரர்' வகுப்பிலோதான் போவது வழக்கம்........

இப்போது சிறிது நாட்களாக அவர் மூளையிலே மூளை கிளப்பிச் சிந்தனையைக் குழப்பி

வந்தது ஒரு கேள்வி. உலகத்தை இயக்குவது எது—அறிவா? உணர்ச்சியா?

தத்துவப் பேராசிரியராகிய ஞானமணிக்கு இந்தக் கேள்வி எழுந்திருக்கவேண்டியதில்லை தான். அத்வைதம், த்வைதம், விசிஷ்டாத் வைதம்........என்று சில சொற்களை வைத்துச் சொற்சிலம்பம் ஆடிக்கொண் டிருந்தால், அதுவே அவர் வாழ்க்கைக்குப் போதுமானது தான். அவருடைய 'டான' வேலைக்கு இதற்கு மேல் வேண்டியதில்லை; சொற்சிலம்பத்திலே நம் பேராசிரியர் சளைத்தவருமல்ல. அவருடைய பேச்சுக்களைக் கேட்டால், "இவர் கவிஞரா? அல்லது தத்துவப் பேராசிரியரா?" என்ற ஐயம் எழுவது இயற்கை. "வயிற்றுப் பிழைப்பால் தத்துவப் பேராசிரியன்; வாழ்க்கை அமைப்பால் கவிதை உள்ளத்தவன்" என்று அவர் தமக்குத் தாமே அடிக்கடி சொல்வதுண்டு. இயற்கையி லேயே கவிதை மனம் படைத்த அவருக்கு ஆதியிலே தத்துவப் பாடம் படிப்பது சங்கட மாகத்தான் இருந்தது. உலக பந்தங்களுக்குள் சிக்கித் திணறிக்கொண் டிருப்பதை அவர் விரும்பவில்லை. இருந்தாலும் அவருடைய தகப் பனர் சந்திரசேகர சாஸ்திரியார் கடுமையான பேர்வழி; கண்டிப்பும் கடுகடுப்பும் நிறைந்த குரலில் "டேய்! நீ என்ன பெரிய ஷெல்லி என்று நினைத்துக்கொண்டாயோ! போடா மடையா! ஒழுங்காய்ப் படிச்சு நாலு காசு சம்பாதிக்கத் தெரிஞ்சுக்கோ, அதுபோதும்" என்று சொல்வி

விட்டார். இன்று வாழ்க்கைச் சாலையிலே வசதி யாகப் பிரயாணம் செய்துகொண் டிருக்கும் இந்த நாளில்கூட அந்தக் குரலை நினைத்துக் கொண்டால் பேராசிரியரின் உள்ளத்துக் குள்ளே ஒரு நடுக்கம் ஏற்படத்தான் செய்யும்.

சந்திரசேகர சாஸ்திரியார் தெரிந்து சொன்னரோ, தெரியாமல் சொன்னரோ— ஒன்றுமட்டும் நிச்சயம். அவர் கண்டிப்பாய் நடந்துகொண் டிராவிட்டால் உலகம் மற்ருெரு ஷெல்லியின் துயர வரலாற்றை உருவாக்கித் தான் இருக்கும். உணர்ச்சியின் துடிப்பு ஒவ்வொன்றையும் ஞானமணியின் உடம்பும் உள்ளமும் தெளிவாய்ப் புரிந்து கவ்விக் கொள்ளும். உணர்ச்சியின் துடிப்பைவிட அவ ருடைய துடிப்புச் சற்று மிதமிஞ்சி இருக்குமே தவிரக் கீழிறங்கி விடாது.

கல்லூரியில் தத்துவம் படித்தார்; கல்லூரிப் பேராசிரியராகித் தத்துவம் கற்பிப்பதையே தொழிலாகவும் கொள்ள நேர்ந்தது. கிட்டத் தட்டப் பத்து ஆண்டுகள் வறண்ட தத்துவ நூல் களிலேயே சிக்கித் திணறிய பிறகும்கூட அந்தப் பிறவி மனம்—கவிதை வெறியிலே களிக் கூத் திட்டுத் தன்னையே விழுங்கிவிடும் அந்த மனம்— தன் சக்தியை இழந்துவிட வில்லை. தத்துவப் புதருக்குள்ளே திக்குமுக்காடியும் அந்தக் கலை மான் தன் வெறியோட்டத்தை நிறுத்தவில்லை யென்ருல்—தன் இயல்பிலே வளரவிட்டிருந் தால்—! தமிழ்ப் புலவர்கள் வரிசையிலே

கடலுள் தன்னை முழுக்கடித்துச் செத்த சுயம் பாகமான ஒரு கவிஞனுக்காகத் தமிழன்னை கண்ணீர் சொரியநேர்ந்திருக்கும்—வேறென்ன?

அவருக்குக் கருவிலேயே இருந்த இந்த ஷெல்லித்தனம்தான் ஒரு கேள்வியை எழுப்பி விட்டது; உலகத்தை இயக்குவது எது-அறிவா? உணர்ச்சியா?

கவிதைமனம் "சந்தேகம் என்ன, உணர்ச்சி தான்" என்றது. அறிவையே அலசுகின்ற தத்துவ மூளையோ, "உணர்ச்சியாவது, மண்ணு வது! அறிவான ஒழுங்குதான் உலகத்தை இயக்குகிறது. இந்த உலகம் மட்டுமா, எல்லா அண்டங்களுமே அறிவுக்குக் கட்டுப்பட்டே இயங்குகின்றன" என்றது.

கவிதை சளைக்குமா? தத்துவம்தான் இளைத்ததா? இரண்டுக்கும் நடந்த போராட்டத் திலே—பாவம்—பேராசிரியர் பாடு திண்டாட்ட மாக இருந்தது. எங்கே போனாலும், எவரோடு பேசினாலும் இதே விசாரம்தான். முதல் வகுப் பிலே பிரயாணம் செய்தால் 'கொள்முதல் எப்படி? சரக்கின் விலையை ஏற்ற வழி என்ன? அரைகுறைப் பிரமுகர் ஒருவர் அமைச்சருக்கு நடத்திய தேநீர் விருந்தின் அந்தரங்க நோக்கம் என்ன'—இதுபோன்ற விவரங்கள்தாம் தெரிய முடிந்தது. இரண்டாம் வகுப்பிலோ இரண்டுங் கெட்ட பேர்வழிகளே போனார்கள். உச்ச நிலையில் இருக்கும் உலகியலும், ஓய்ந்து கிடக்கும்

தத்துவ விசாரணையும் கலந்த கலப்படமான பேச்சுத்தான் இடைத்தர இரண்டாம் வகுப்பிலே அவர் கேட்டது. 'சரி, இந்தத் தடவை மூன்றும் வகுப்பிலே பிரயாணம் செய்து பார்ப்போம்' என்று எண்ணி மூன்றும் வகுப்பு டிக்கட்டே வாங்கச் சொல்லிவிட்டார்.

"என்ன, அத்திம்பேரே! கோயம்புத்தூரிலே இறங்கும்போது சட்டினியாய் இறங்கிவிட யோசனையோ! உலகம் அவ்வளவுக்கா புளித்துப் போய்விட்டது?" என்று கேட்டும் பார்த்தான் ஆத்மநாதன். பேராசிரியருக்கு அவன் சொல்வது நியாயமென்று ஒரு கணம் பட்டாலும், அவருடைய மனமும் மூளையும் செய்துவிட்ட சூழ்ச்சியால் மூன்றும் வகுப்புப் பிரயாணம் உறுதியாயிற்று.

ஆத்மநாதன் உலகம் அறிந்த ஆசாமி. பேராசிரியரின் குணம் அவனுக்குத் தெரியும். நெருக்கடியிலும் சிலர் வசதியாகக் குறட்டைவிட்டுத் தூங்கிக்கொண்டு போவதுண்டல்லவா? அந்த ரகசியம் அவனுக்குத் தெரியும். எவனே ஒரு கூலியாளிடம் ஒரு முழு ரூபாயைத் தூக்கி எறிந்தான். அவ்வளவுதான். சாமான்களை வைப்பதற்குரிய இடம் பேராசிரியரின் 'பர்த்' ஆகிவிட்டது.

சென்ட்ரல் ரயில் நிலையத்தில் பேராசிரியரை எவ்வளவோ எச்சரிக்கை செய்துதான் அனுப்பினன் ஆத்மநாதன். "அத்திம்பேரே!

தூக்கம் வரதோ இல்லையோ, தேமேன்னு மேலே ஏறிப் படுத்துக்கணும். அப்புறம் இப்புறம் அசைந்தீரோ, கெட்டது காரியம்!" என்று உபதேசம் செய்து, அவரை மேலே ஏற்றியும் விட்டான்.

தூக்கத்தை வரவழைப்பதற்கு நமக்கெல்லாம் தத்துவ நூல் ஒன்றைத் தொட்டால் போதும். ஆனல், தத்துவப் பேராசிரியரை அதெல்லாம் என்ன செய்துவிட முடியும்! ஒரு பத்திரிகையின் ஆண்டு மலரைக் கையிலே எடுத்துக்கொண்டுதான் மேலே தொற்றி ஏறினர். ரயில் புறப்படுமுன் அவர் மனம் படாதபாடு பட்டுவிட்டது. கீழே மனிதர்கள் நிற்கக்கூட முடியாமல் திணறிக்கொண் டிருக்க, தாம்மட்டும் மேலே சுகமாக - கிடந்த திருக் கோலத்தில் - நீட்டி நிமிர்ந்து படுப்பதா என்று எண்ணி இரங்கும் அவர் மனம். அதே மனம், 'நாம் இறங்கிவிட்டால், இத்தனை பாடுபட்டு இடம் தேடித் தந்த ஆத்மநாதன் மனம் வருத்தப் படாதா' என்னும் கேள்வியைக் கிளப்பிவிடும். இப்படித் திணறிக்கொண் டிருப்பதிலேயே அவர் மனம் காலத்தை விழுங்கிக்கொண் டிருந்தது. 'சரி, ரயில் புறப்படட்டுமே, அப்புறம் கீழே இறங்கினல் போச்சு' என்று அவர் மூளை இரண்டு கட்சிகளையும் சமாதானப்படுத்திற்று.

ஒரு வழியாக, ரயில் புறப்பட்டது. 'அப்பாடா' என்ற பெருமூச்சு எல்லாப் பிரயாணிகளுக்குமே ஏற்பட்டது. ஏதோ

விடுமுறை போலிருக்கிறது. கல்லூரி மாணவர்களின் கூட்டம் ஒன்று அந்த மூன்றும் வகுப்பு வண்டியை ஆக்கிரமித்துக்கொண் டிருந்தது. அவர்கள் போட்ட கூச்சல் அடடா! வாத்தியாரால் தாங்க முடியவில்லை. 'ஷட் அப்' என்று வாயெடுத்தவர் தாம் ரயிலில் இருப்பதை நினைத்து மூடிக்கொண்டார்.

ரயில் கொஞ்ச தூரம் போனதும் இறங்கலாம் என்று பார்த்தார். என்ன வியப்பு! கூட்டமே இல்லை! இருந்த கூட்டமெல்லாம் ரயில் புறப்பட்டதும் இறங்கிவிட்ட அதிசயம் புரியவே இல்லை. தாம் இறங்க வேண்டியதில்லை என்ற மகிழ்ச்சி இருந்தாலும், தம் ஆராய்ச்சிக்கு வழி இல்லாமல் போய்விட்டதே என்று ஒரே வருத்தம்! 'இந்தக் கல்லூரிப் பையன்களிடத்திலே யிருந்து என்னத்தைத் தெரிந்துகொள்ளப் போகிறோம்' என்று எண்ணிய வாத்தியாரின் மனம், அலுப்புத் தட்ட ஒரு 'உச்'சுக்கொட்டி ஓய்வெடுக்க ஆரம்பித்து விட்டது.

தலைமாட்டிலே நசுங்கிக்கொண் டிருந்த ஆண்டு மலரை அவர் கரம் எடுத்துப் புரட்டத் தொடங்கிற்று. கண் நெட்டோட்டம் விட்டது. நோட்டம் பார்ப்பதிலே அவ்வளவாக அவர் அறிவு அக்கறை காட்டவில்லை. 'சரி, இப்படியே தாங்கவேண்டியதுதான்' என்று எண்ணிக் கொண்டே பேராசிரியர் ஞானமணி கிடத்திய தம் உடம்பைத் திருப்பிக் கொண்டார்.

பத்திரிகையின் ஆண்டு மலரில் ஒரு பக்கத்திலே இருந்த ஒரு படம் திடீரென்று ஏனோ அவர் கருத்தைக் கவர்ந்தது. அது ஒரு அரசியல் தலைவரின் படம். அதன் கீழே இருந்த சில வரிகளைப் படித்தார். இலக்கண வரம்புகளை யெல்லாம் கேலி செய்துகொண் டிருந்த அந்த வரிகள் அவர் மனத்தையும் மூளையையும் வேலை வாங்க ஆரம்பித்துவிட்டன. அந்த வரிகளிலே,

ஊழிச் சிவன்கண்டீர்
உருகாத நெஞ்சுரத்தான்
நெஞ்சுரமும் வெஞ்சரத்தை
வெல்கின்ற வெவ்வுரையும்
வெவ்வுரையைச் செயலாக்கும்
வினைத்திறத்தின் வித்தகமும்
வித்தகத்தை வியனுலகம்
விழிபிதுங்கிக் கண்ணுேக்கக்
கொள்ளையதி காரக்
கொடுமுடியின் வீற்றிருப்பும்
கொண்டிங்கே பேரழிவுக்
கூத்தாடு கின்ருன்யார் ?

என்ற ஒரு கேள்வி உருவெடுத்திருந்தது. ‘இதென்ன, நாம் உலகத்தை இயக்குவது எது என்ற நினைவிலே ஈடுபட்டிருக்க, எவனோ ஒருவன் உலக அழிவிலே சிந்தனையைச் செலுத்தி யிருக்கிருனே!’ என்று குறுக் கோட்டமாக ஒரு வியப்புக்குறி எழுந்து அந்த வினவை நோக்கிப் பாய்ந்தது. ‘சரி, இந்தக் கேள்வியில்தான் நம் விடை இருக்கிறதோ

என்று பார்க்கலாமே!' என்று அவருடைய தத்துவம் தன்னுடைய கருத்து வலையும் கையுமாக ஆழமாக இறங்கிவிட்டது.

என்னதான் ஆழ்ந்த ஆராய்ச்சியாக இருந் தாலும், மூன்றும் வகுப்பு வண்டி ஆடுகிற ஆட்டத்திலும் கல்லூரி மாணவர்கள் விவாதம் என்ற பேரால் போடுகின்ற கூச்சலிலும் ஆராய்ச்சியாவது, தூக்கமாவது!

ஆண்டு மலரில் ஒரு கணம்; மாணவர் பேச்சிலே ஒரு கணம்; வசதிக் குறைவான படுக்கையிலே உடம்பைச் சமனப்படுத்தி நிறுத்த முயலுவதிலே ஒரு நிமிஷம்—இப்படி யாகப் பேராசிரியரின் பயணம் நடந்து கொண்டிருந்தது. கொஞ்ச நேரம், எழுந்து உட்கார்ந்து செலுத்திய கண்ணோட்டத்தில் எப்படியோ ஒரு குடும்பத்தவரும் அந்த மாணவர் களின் தயவால் உள்ளே இடம் பெற்றிருப் பதைக் கண்டார். மாணவர்கள் பேசிக் கொண் டிருந்த பேச்சிலும் கவனம் போகாமல் இல்லை. அங்கே ஒண்டியிருந்த குடும்பத்துப் பெரியவர் கொஞ்சம் தடபுடலாக அலட்டிக்கொண் டிருந்த வாலிபனைப் பார்த்துக் கேட்டார் :

"ஏனப்பா! நீங்களெல்லாம் படித்த பிள்ளைகளாய் இருக்கிறீர்களே—இந்த மாதிரி அக்கிரமம் செய்யலாமா? அடுத்த வண்டி யிலே மனிதர்களெல்லாம் புளிச் சிப்பம்போல அடைந்து கிடக்கிறார்களே........"

அந்த வருங்காலத் தலைவருக்கு இது பொறுக்கவில்லை. "என்ன'ங்க! அதெல்லாம் புத்தர் காலத்து நியாயம். நம்ம காலத்துக்கு ஈவு இரக்கம் இதெல்லாம் இருந்தால் வாழ முடியுமா?"

மாணவமணிகள் இங்கிருந்து ஆரம்பித்தன, தங்கள் 'கருத்து நிறைந்த' விவாதத்தை. பேராசிரியருக்குத் தம்மை ஆசிரியர் என்று எண்ணிக்கொள்வது வெட்கமாக இருந்தது; படுத்துவிட்டார். ஆண்டு மலர்தான் இருக்கிறதே! ஆனல், மாணவர்களின் கூச்சல் அவருக்கு முழு விடுதலை அளித்துவிட்டதாகச் சொல்ல முடியாது. ஒவ்வொரு தொடரும் வாக்கியமுமாக அவருடைய அனுமதிக்காகக் காத்திராமலே மூளையை எட்டிப் பிடித்தன.

"ஏன்'டா, நீதான் கலிகால அரிச் சந்திரனோ?"

"அவ்வளவு இரக்கப்பட்டால் அடுத்த ஸ்டேஷன்லே இறங்கி அவாளோட நீயும் ஏறிக்கோ."

"அவரு காந்திக்கு அடுத்த சோட்டா காந்தி'டா! சத்திய நெறியாம், மண்ணுங் கட்டியாம்........"

"ஆமா, பின்னே அதுக்குக் குறையலாமா...."

—வண்டியிலே மற்றவர்களை ஏறவிடாமல் செய்தது தப்பு என்று ஏதோ ஒரு அப்பாவி

சொன்னதால் பிறந்த மதிப்புரைகள்தாம் இவை என்று பேராசிரியரின் மூளை தீர்ப் பளித்தது. அப்புறம் பேச்சை விட்டுவிட்டுச் சுயமாகவே பின்ன ஆரம்பித்து விட்டது தத்துவ மூளை.

"ஆமா, எதிர்காலப் பொறுப்பு இதோ, இந்த வாலிபர்களிடம்தானே இருக்கிறது! துளி கூட இரக்கமே காணுேமே! சூழ்ச்சித் திறத் தாலே வையத்தைப் பாலிப்பதுதானே இவர்கள் எண்ணம்! படித்த படிப்பும் வளர்த்த அறிவும் ஈர நெஞ்சை உலர்த்திவிடத்தாஞ!....அடடே, இதென்ன இந்த மலரில் எவனே சாக்ரடீசைப் பற்றி எழுதியிருக்கிருன் போல இருக்கிறதே.... ....என்ன எழுதியிருக்கப் போகிருன் மடையன் ..............." என்று சிந்தனை கூடு விட்டுக் கூடு பாய்ந்தது.

கட்டுரையைப் படிக்கவில்லை; புரட்டினர். எங்கோ நடுவிலே சில வரிகள் பாட்டைப்போலக் காணப்பட்டன.

அறிவின் சுடர்கண்டீர்
அனைத்துலகும் முன்னேறச்
சுடரேற்றி இருளகற்றி
ஒளிபரப்பும் பெரும்பணியைத்
தொன்மையாம் காலத்தே
தொடங்கிவைத்த தூயவனும்
அன்னவனை—அருமணியை—
அறிவொளியைப் பாதகர்கள்.........

அதற்குமேல் படிக்கவில்லை பேராசிரியர். தத்து வத்தின் வரலாற்று முறையான வளர்ச்சியைப் படித்திருந்த நினைப்புகளின் ஒத்துழைப்பைப் பெற்று எண்ணம் வளர்ந்தது.

சாக்ரடீசைக் கொன்றது யார்? யாராக இருந்தால் என்ன? அவர்கள் முக்கியமான வர்கள் அல்ல. அவர்களை இயக்கிய சக்தி எது?....ஏதோ ஒரு வெறி—தன்னலம் போன்ற ஒரு சக்தி..........சக்தி.......சக்தி..........அப்படி யென்றால்.......சக்தி : வெறி—வெறி : சக்தி.... .......சரிதான் — அறிவுருவமான சாக்ரடீசை உணர்ச்சியின் முருகி எழுந்த நிலையான ஒரு வெறி கொன்றுவிட்டதா.......ஆக, அறிவை உணர்ச்சி அழிக்கிறது என்று ஆகுமோ.......”

எண்ணம் தடைப்பட்டது. வண்டி ஏதோ ஒரு நிலையத்தில் நின்றது. மாணவர்கள் தங்கள் ‘பணி’யை ஆரம்பித்தார்கள். யாரும் தங்கள் வண்டியில் ஏறாமல் பார்த்துக்கொள்வதற்காக, ‘அந்த வண்டிக்குப் போங்கள்,’ ‘கடைசி வண்டி காலி,’ ‘இந்த வண்டி ரிசர்வ் செய்தது’—என்று சொல்லிப் போலீஸ்காரர்களைப்போல் திசை காட்டிக்கொண் டிருந்தார்கள். ‘அறிவு வளர் வதன் விளைவு இதுதான்’ என்று எடை போட்டுக்கொண் டிருந்தது ஞானமணியின் உணர்வு. அறிவு முனைந்து எழுமானால் ஆதிக்க ஆசையாய்—தன்னல வெறியாய்—சூழ்ச்சித் திறமாய் அமையும் என்று சூத்திரம் வகுத்தது அவர் இதயம். சூத்திரம் கண்ட மனத்தில்

'அறிவினுன் ஆகுவதுண்டோ பிறிதின் நோய் தன்நோய்போல் போற்ருக் கடை' என்ற குறள் மின் வெட்டிற்று.

பேராசிரியருக்குக் கொஞ்சம் விளக்கம் ஏற்பட்டதுபோல் இருந்தது. "ஆம். அறிவு இதயத்தோடு ஒட்டினுல்தான்........"

வண்டி புறப்பட்டுவிட்டது. மாணவர்கள் பேச்சையே கேட்கலாம் என்று ஆண்டு மலரை ஒதுக்கிவிட்டார்; கண்ணை மூடித் தூங்குவது போல் இருந்தார்.

மாணவர்கள் பேச்சு ஒரு பெருங் கதம்பப் பாதையிலே திரும்பியது. அரசியல் தலைவர்கள், ஆசிரியர்கள், மாணவர் தலைவர்கள், கல்லூரி யிலே காதல், தமிழ்ப் படங்கள், இங்கிலீஷ் டான்ஸ், இந்திப் பாட்டு........வரையறையே கிடையாது.

ஒன்றுமட்டும் பேராசிரியருக்குப் புரிந்தது. அறிவைப் பயன்படுத்தி மற்றவர்களை ஏமாற்றித் தாங்கள் மட்டும் சுகமாகப் பிரயாணம் செய்யும் மாணவர்கள் உணர்ச்சியிலும் இமயச் சிகரத் தையே பிடிப்பவர்களாகத்தான் இருந்தார்கள். ஆண் பெண் தொடர்பு பற்றிய விஷயங்களைப் பேசுவதில் கூட ஒளிவு மறைவு இல்லாமல்தான் பேசினுர்கள். அவர்களுடைய பேச்சுக்களில் ஒன்றிரண்டு மாத்திரம் பேராசிரியரின் மூளை யைத் தாக்கி, நெஞ்சையும் கவர்ந்தன.

"சக்தியாம் சிவமாம்.......சக்தி இல்லாமல் சிவனில்லையாம் என்று அந்த வாத்தியார் சொன்னாரே, அதென்ன'டா கோபு?"

"சக்தி சிவம் என்பதெல்லாம் வெறும் புராணமடா. பெண் ஆண் என்று சொல்வதற்குத்தானடா அப்படிச் சொல்கிறார்கள்...."

"சக்தி என்றால் எனர்ஜி என்றுதானேடா அர்த்தம்? பெண்ணைப்போய் எனர்ஜி என்று சொல்வானேன்......."

"அது கிடக்கட்டுமப்பா—புராணங்களிலே சக்தி என்றால் பார்வதி என்கிறார்களே—அது ஏன்—"

"பார்வதியும் பரமசிவனுமாக இருப்பது எதற்காக...."

இதற்குமேல் அவர்கள் பேசிய பேச்சுக்கள் மேலே படுத்திருந்த திருவாளர் தத்துவத்துக்குப் பிடிக்கவில்லை. ஒவ்வொரு சிவபெருமானும் தன் தனக்குரிய பார்வதி எப்படியிருப்பாள் என்று பேசத் தொடங்கிவிட்டான். 'ஒரு குடும்பம் அந்த வண்டியிலே இருக்கிறது, இளம் பெண்கள் இரண்டு பேர் இருக்கிறார்கள்' என்றெல்லாம்கூட அந்த இளைஞர்கள் எண்ணியதாகத் தெரியவில்லை. உணர்ச்சியின் உச்சநிலையிலே கிடந்து துள்ளிக்கொண்டிருந்த இரண்டொரு வாலிபர்கள் அந்தப் பெண்களை ஒரு மாதிரியாகப் பார்த்ததைப் பேராசிரியர்

நல்ல வேளையாகப் பார்க்கவில்லை. அவர் அறிவு சொல்லிற்று: "பார்த்தாயா, உணர்ச்சியைக் கட்டில்லாமல் விட்டுவிட்டால் இதுதான் நிலைமை. மட்டு மரியாதை ஒன்றுமே கிடையாது. இதில் மட்டுமா? அன்பு அன்பு என்று சொல்லுகிறார் களே அதுவும் இதுபோலத்தான். அன்பு என்ன வேண்டு மானாலும் செய்யும். தன்னையே கூட அழித்துக்கொள்ளும். வள்ளுவர்கூடச் சொல்லவில்லையா—அன்பிற்கும் தாழ் உண்டா —அதனால்தான் உலகமே அழிகிறது. ஒரே மாதிரியான ஒழுங்கு இல்லாமல் போவதே இந்த உணர்ச்சி—சக்தி...........இதனால்தான். ஆண் டவனின் வடிவம் அறிவு. ஞானமூர்த்தி என்று சொல்வார்க ளல்லவா?...............காந்தியைக் கொன்றது எது? வெறி-உணர்ச்சி இல்லையா? வேறென்ன வேண்டும்......."

இதயமும் என்னவோ பதில் சொல்லிப் பார்த்தது; எடுப்பாக இல்லை. பேராசிரியர் ஞானமணிக்கு எப்போதுமே ஒரு அநுபவம். இந்த விவாதம் வளர வளர அறிவு வெல் வதையும் உணர்வு தோற்றுப்போவதையுமே கண்டிருக்கிறார். இந்த அனுபவம் அவரோடு நின்றிருந்தால் 'அறிவே எல்லாம்' என்று முடிவு செய்திருப்பார். அவருடைய மனைவி கருணாம்பிகையின் அனுபவம் இதற்கு நேர் மாறானதாக இருந்தது. கருணாம்பிகை பேராசிரி யரிடம் தத்துவம் பயின்ற மாணவி. மாணவி மனைவியானாள். ஷெல்லித்தனம்தான் இந்த

முடிச்சுக்குக் காரணம். அவளிடம் தம் தத்துவ விசாரத்தைப்பற்றி அடிக்கடி அளவளாவிப் பேசுவார். அவள் சொல்வாள்: "என் அனுபவம் வேறு மாதிரி இருக்கிறது. இதைப்பற்றி நினைக்க நினைக்க உணர்வு ஓங்குகிறது; அறிவு மங்குகிறது." இந்த இரண்டு அனுபவங்களையும் கொண்டு அவர்கள் ஒரு முடிவுக்கு வந்தார்கள். "எவரிடத்தில் எது குறைவோ அதை அவர்கள் மனம் நாடுகிறது."

பேராசிரியருக்கு உள்ளூர அறிவிலே வேட்கை; அம்மையாருக்கு உணர்விலே ஒரு தேட்டம்........

தூக்கம் வந்துவிட்டது; என்னதான் வசதிக் குறைவாக இருந்தாலும் தூக்கம் விடுகிறதா? கொட்டாவி விட்டுப் புரண்டு கொடுத்தார். அவர் வாய் எப்படியோ 'ஊழிச் சிவன் கண்டீர்' என்று புலம்பிற்று ...ஆண்டு மலரைப் புரட்டி அந்தப் பாட்டை மறுமுறை படிக்க முனைந்தார்....ஊழிச் சிவன்....நெஞ்சு உரம்.... அறிவு—சூழ்ச்சி—கல்லூரி மாணவர்—ரயில்.... ........ஒரே சுழற்சி........

*

**எ**ங்கேயோ ஒரு நாடகம் நடக்கிறது. தக்கனுடைய வேள்வியை நாடகமாக நடிக்கிறார்கள்.

தாக்ஷாயணியிடம் எவ்வளவோ மன்றாடிப் பார்க்கிறார் சிவபிரான். தந்தை வீட்டு யாகத்

துக்குப் போய்த்தான் தீர வேண்டும் என்று பிடிவாதம் செய்கிறாள் பார்வதி.

சிவன்: பாரி, உணர்ச்சி உன் இயல்பு. உன் இயக்கமே அண்டங்களின் இயக்கம். இருந்தாலும் நான் கூறும் அறிவுரையைப் புறக்கணிக்காதே. அறிவை விட்ட உணர்வு தானும் அழியும்; மற்றவர்களையும் அழித்து விடும்.

பார்வதி: என் தந்தை—என்னை உருவாக்கி உமக்கு உறுதுணையாக்கிய தந்தையின் வேள்வி விழாவை நாம் காண வேண்டாமா?

சிவன்: நான் சொல்வதைக் கேள். அழைப்பில்லாமல் போகலாமா? அறிவுக்குப் பொருந்தாத செய்கை அவமானத்தை யல்லவா தரும்?

பார்வதி: அறிவுக்குப் பொருந்தாது பொருந்தாது என்று அன்பை ஏன் புறக்கணிக்கிறீர்கள்? என் தந்தை இல்லை என்று ஆகி விடுமா? மகள் என்ற பாசம் இல்லாமல் போய் விடுமா?

சிவன்: பார்வதி, உயிர்களின் இயக்கமான சக்தியாகவே நீ இருந்தும் பயனில்லை. உன்னைப் பெற்றெடுத்த தக்கனே உன்னைப் போலவே அறிவைப் புறக்கணித்து—என்னை அவமதித்து வெறி பிடித்து அலைகிறான்....... நீயும் உணர்ச்சியே வடிவாய்.......

பார்வதி : போதும் ; அறிவைச் சுடுகாட்டில் விடுங்கள். நான் போகிறேன். தாய் என்ற நிலையில் நானே உணர்ச்சியாய்ச் சக்தியாய் இயங்குவதை........

சிவன் : வெறியாட்டம் காணத் துணிந்து விட்டாய். போ, பேதையே! போ. நீ போ போ. அங்கே போனபின் அறிவை நினைந்து ஏங்கு.... அறிவின்றி அழிவு........உணர்ச்சியின் முனைப்பிலே அதுவும் அதன் வடிவாகிய நீயும் அழிய வேண்டியதுதான்.

பார்வதி : இது உணர்ச்சியின் முனைப்பா? உங்கள் அறிவின் தடிப்பா? நீங்கள் உணர்ச்சிக்கு மதிப்பளித்து என்னுடன் வந்தால்....

சிவன் : அவமதிப்புப் போதும் போ—நீ. உணர்ச்சிக்கும் உனக்கும் இன்று ஓர் ஊழிக் கூத்து ஆடித் தீர்க்கிறேன்.

*　　　*　　　*

—பார்வதி வெறிகொண்ட வேகத்தில் தக்கனேடு வாதிக்கிருள். பயன், அவமதிப்பு. அறிவை எண்ணி ஏங்குகிருள் ; ஐயன் வரவுக்குத் துடியாய்த் துடிக்கிருள். அவன்—அறிவுருவான சிவன்—ஞானமூர்த்தி—வரவில்லை. அழுகிருள். உணர்ச்சி வீறிட்டெழுகிறது ; அந்த எழுச்சியிலேயே தன் அழிவையும் காணுகிறது.

பார்வதி பிணமாகிருள். சக்தி ஒடுங்கிற்று ; உயிர்கள் ஒடுங்கின. உணர்ச்சி அற்ற

அறிவுக்கும் வெறி பிடிக்கிறது. பார்வதியின் பிணம் சிவன் தோளிலே துவண்டு கிடக்கிறது. அண்டச் சுடுகாட்டிலே —அத்தனையும் சூனிய மான அந்தப் பாழிலே அவன்—அறிவுருவான ஆண்டவன்—ஆடிக்கொண் டிருக்கிறன். திசை கள் நடுங்க—ஒவ்வொரு எட்டிலும் இடிமுழக்கும் மின்னொளியும் கிளம்ப ஆடிக்கொண் டிருக்கிறன் சிவபிரான். அழிவு—அழிவு. உணர்ச்சி அழிந் தது. ஊழி—ஊழி...............எங்கிருந்தோ ஒரு குரல் கேட்கிறது: "ஊழிச் சிவன் கண்டீர்."

*

பேராசிரியர் விழித்துக்கொண்டார். 'ஊழிச் சிவன் கண்டீர்........' என்று அவர் வாய் முணு முணுத்தது. கீழே பார்த்தார். இளஞ்சிங் கங்கள் ஒடுங்கித் தூக்கத்திலே நிலையும் கிடையும் மாறித் தடுமாறிக் கிடந்தன. அவர் தூக்கம் தொலைந்தது. மூளைக்கு முன் இல்லாத சுறு சுறுப்பு வந்துவிட்டது; இதயத்துக்கு அதை விட.........

சிவபிரான் ஊழிக்கூத்தா ஆடினர்?....... எட்டுவகைத் தாண்டவங்கள் என்று சொல்வார் களே........'லய சிவன்' என்றுகூட ஒரு தொடர் உண்டல்லவா? உலகெல்லாம் ஒடுக்கி அறிவு வடிவாய் நின்று ஆடுகின்றவன்தானே லய சிவன்.......

விவேகாநந்தரின் 'அன்னை காளி' என்ற பாட்டு அவர் நினைவில் எழுந்தது. பாரதியார்

அவர் மன அரங்கிலே தோன்றி 'அன்னை! அன்னை! அன்னை! அவள் ஆடுங்கூத்தை நாடச் செய்தாள் என்னை' என்று முழக்கம் கொடுத்தார்.

வெடிபடும் அண்டத்து இடி பல தாளம் போடும்படியாக அன்னை ஆடும் ஆட்டமும் உண்டு என்று நினைந்தார் பேராசிரியர். தக்ஷிணேசுவரம் ஆலயத்துக்கு முன் ஒரு முறை போனபோது காளியின் உருவம் அவருக்குப் பெரு வியப்பை அளித்தது. சிவபிரான் தலை மீது அன்னை காளியின் நடனம்! வங்காளத்திலே பெரு வழக்காயுள்ள ஒரு படத்தை மயிலாப்பூர் ஸ்ரீராமகிருஷ்ண மடத்திலும் பார்த்திருக்கிறார். செத்துக் கிடக்கும் சிவபெருமானின் சடலத்தின்மீது அன்னை காளி வெறியாட்டம் கொண்டு ஆடுவதாக அந்தப் படம் காட்சியளித்தது. அப்போது புரியாதது இப்போது விளங்கிற்று.

அறிவின் வீக்கத்திலே உணர்வு பிணமாகிறது; இது லயசிவனின் தாண்டவம்—தக்க யாகத்திலே ஆடியது. உணர்ச்சி பாரித்துப் பெருகிய நிலையிலே அறிவை விழுங்கி ஆடுகிறது. இங்கும் ஊழிதான்.

"உணர்வு எல்லை மீறி வளர்கிறது; அறிவை அழிக்கிறது. அறிவு அழிந்தபின் அதை நாடி அலைந்து அலமந்து அழிவுக் கூத்தாடுகிறது உணர்வு.

அறிவு வரைகடந்து வளர்கிறது; உணர்வை அழிவுத் திசையிலே திருப்புகிறது. உணர்வு அழிந்தபின் அதை நாடி அலைந்து அலமந்து அழிவுக் கூத்தாடுகிறது அறிவு.

அறிவின்றி உணர்ச்சி ஊழிக் கூத்து இயற்றுகிறது.

உணர்ச்சி இல்லாத நிலையில் அறிவு ஊழிக் கூத்து இயற்றுகிறது.

ஒன்றை விட்டு மற்றொன்று எல்லை மீறி வளர்கிறது. அப்போது ஊழி பிறக்கிறது.

ஊழியின் தத்துவம் இதுதான்.

ஒன்றை ஒன்று வெல்லப் பார்த்து, ஒன்று வென்று, மற்றது தோற்றால் எல்லாம் அழிய வேண்டியதுதான்.

உணர்வின்றி அறிவில்லை; அறிவின்றி உணர்வில்லை.

சக்தி—சிவம் இரண்டும் அமைதி பெற—ஒருங்கே வீற்றிருக்கும் கோலமே உயிர்களின் வளமும் வாழ்வும்.

உணர்ச்சி மீறினால் வெறி—அங்கே காளியின் கூத்து.

அறிவு மீறினால் வெறி—அங்கே சிவனின் கூத்து.

உலக அழிவுக்குக் கற்பனை சுட்டிக் காட்டிய எல்லைதான் இந்த இரண்டு நடனத் திருக்கோலங்கள்."

—இப்படியாகப் பேராசிரியர் குறிப்பெழுதி வைத்துக்கொண்டு, மீண்டும் படுத்துவிட்டார். பெரிய உண்மையைக் கண்டுவிட்ட எக்களிப்பிலே தூக்கம் எங்கே வருகிறது!

"இதோ பார். மகிழ்ச்சி எல்லை மீறிவிட்டதால் தூக்கம் வரவில்லை. உணர்ச்சியால் ஏற்படுகிற சிறு தொல்லை இது.......இப்படியே ஒவ்வொரு நிகழ்ச்சியையும் அலசிப் பார். சக்தியும் சிவமும் தாண்டவம் ஆடுவது தெரியும். அறிவும் உணர்வும்தான் உலகத்தை இயக்குகின்றன. ஒன்றை விட்டு ஒன்று பிரியாது; பிரிந்தால் ஊழி......."—என்று முன் வழக்கமில்லாத புதுப் பாடம் படிக்க ஆரம்பித்தது பேராசிரியரிடம் உதயமான புதுவிளக்கம்.

உண்மையைக் கண்டுவிட்ட மகிழ்ச்சியிலே மனம் மகிழ்ந்து கிடக்க, அந்த உண்மைக்கு உருவம் கொடுப்பதிலே மீண்டும் மீண்டும் அறிவு ஈடுபட-பொழுது புலர்ந்தது; கோவை நெருங்கிற்று. பேராசிரியர் கருத்துக் கோவையோடு கீழே இறங்கி நடந்தார்.

# நெருக்கம்

கல்லூரியிலிருந்து களைத்துவந்த பேராசிரியர் கமலநாதனுக்கு ஒரே கோபம். "வா என்று கேட்க நாதியுண்டா இந்த வீட்டிலே? என்றைக்குத்தான் இந்த வீட்டிலே விடிந்து தொலையுமோ, தெரியவில்லையே!...." என்று சற்று உரக்கப் பேசிக்கொண்டு கோட்டைக் கழற்றி ஒரு மூலையில் கிடந்த நாற்காலிமீது எறிந்தார். ஒரு சாய்வு நாற்காலியை இழுத்துப் போட்டு அதிலே உட்கார்ந்து, "உஸ்ஸ்....அப்பாடா! எல்லாம் நம் தலைவிதி! யாரைப்போய் நொந்து என்ன பண்ண?" என்று சொல்லிக் கொண்டே பூட்சைக் கழற்றி இன்னொரு மூலையில் எறிந்தார்.

வேலைக்காரன் காப்பி கொண்டுவந்தான். அவனை எரித்துவிடுவதுபோல் பார்த்தார்.

"ஏன்'டா, சனியனே! காப்பி, நீ கொண்டு வராதே, கொண்டுவராதே என்று எத்தனை தடவை'டா சொல்லித் தொலைவது? உன் மூஞ்சியும் நீயும்! போடா....போ...."

"அம்மா....வந்து....உங்ககிட்ட........"

"என்னடா, வந்து....போயி....அம்மாவுக்கு என்னடா வந்துவிட்டது இப்போ? ஊரிலே காலரா கீலரா ஒன்றுமில்லையே...."

"இல்லிங்க, அம்மா லேடீஸ் கிளப்புக்குப் போறதா உங்ககிட்டே...."

"துரைசானியம்மா அங்கே போவதாகச் சொல்லச் சொன்னார்களா....அவர்கள் அங்கே போகவே, தாங்கள் காப்பி போட்டீர்களாக் கும்....உங்களைச் சொல்லி என்ன'டா பண்ண? காப்பியை மேசைமேலே வைத்துவிட்டு எங்கே யாவது போய்த் தொலை...."

கமலநாதன் எழுந்து தம் வீட்டுத் தோட்டப் பக்கமாக இருந்த ஜன்னல் அருகில் போய் நின்றார். ஜன்னலில் கிடந்த சீப்பை அவர் கரம் எடுத்தது. வலக் கையில் இருந்த சீப்பின் பற்களை இடக்கரத்தின் கட்டை விரலால் நெருடி னார். அவர் இவ்வுலகத்து நினைவிலே இல்லை.... எங்கோ நெடுந் தொலைவில்—எப்போதோ நிகழ்ந்த ஒரு பழங்காலத்தில்—அவர் மனம் ஈடு பட்டதை அச்செயல் காட்டிற்று. 'ட்ர்ர்....ட்ர்ர்' என்று மீட்டப்பெற்ற இந்தச் சீப்பின் சுதியிலே இழைந்தது அவருடைய பெருமூச்சு. ஏதோ

எண்ணத்தால் கவரப்பட்டவர் போலச் சீப்புப் பற்களின்மீது தம் விரல் இயங்குவதைக் குனிந்து பார்த்தார். விரலோடு கண் ஒன் றிற்றே தவிர, கருத்து அங்கே இல்லை. 'ட்ர்ர் ....ட்ர்ர்' என்ற அந்தச் சுதிக்கேற்ற இதய ஒலியை—கனவுப் பாடலை—அவருடைய அறிவு எழுப்பிவிட்டது. நினைவு அலைகளிலே தோய்ந்து —அந்த அலைகளின் எழுச்சி தாழ்ச்சிகளிலே மிதந்து மிதந்து கமலநாதன் எங்கேயோ போய்க் கொண் டிருந்தார். கட்டைவிரல் சீப்பின் பற்களை நெருடிக்கொண்டே யிருந்தது. கமல நாதனை கட்டைவிரல் எழுப்பிய சுருதியோடு இழைந்து — இதய இசையோடு கலந்து எங்கேயோ........

*　　　*　　　*

"என்ன கமலநாதன்! ஆழ்ந்த சிந்தனையோ? தேர்வு வருகிறதே என்ற நினைவா?"

"ம்ம்....என்ன?"

"என்ன'ப்பா! நீயே இப்படித் தேர்வை நினைத்து உருகினுல் நாங்களெல்லாம் என்ன ஆவது?...."

"அஅ!" என்ன கேட்டாய்? தேர்வா? அதெல்லாம் ஒன்றுமில்லையப்பா?

"பின்னே என்னவாம்?...."

"சஞ்சீவி! 'பாரதி அறுபத்தாறு' படித் திருக்கிருயா?...."

“அதற்கென்ன வந்தது? தேர்வுக்கு அதுவா வேண்டும்? நீ படிக்கிற தத்துவத் தேர்வுக்கும் பாரதி அறுபத்தாறுக்கும் என்னப்பா தொடர்பு?”

“இல்லை, படித்திருக்கிருயா என்று கேட்டேன், வேறு ஒன்றுமில்லை....வந்து....”

“ஏன், என்னப்பா? என்ன சமாச்சாரம்? என்னவோ மாதிரி பேசுகிருயே! ஏதாவது இருந்தால் என்னிடம் சொல்லேன்....என்னிடம் கூடவா....”

“சஞ்சீவி! உன்னிடம் சொல்லக்கூடாததோ, மறைக்க வேண்டியதோ ஒன்றுமில்லை. என்ன அருமையான பாடல்கள் தெரியுமா?—உலகத்தைச் சரியானபடி உணர்ந்து பாடினவன் பாரதி. அதிலும் இன்றைய தமிழ் நாட்டைச் சாருயப் பிழிந்துதான் வைத்திருக்கிருன். என்னமாய்ப் பாடுகிருன்........நீதான் பாரேன்....

நாடகத்தில் காவியத்தில் காதலென்ருல்
நாட்டினர்தாம் வியப்பெய்தி நன்ரு மென்பர்
ஊடகத்தே வீட்டினுள்ளே கிணற்ருேரத்தே
ஊரினிலே காதலென்ருல் உறுமுகின்ருர்
பாடைகட்டி அதைக்கொல்ல வழிசெய் கின்ருர்
பாரினிலே காதலெனும் பயிரைமாய்க்க
மூடரெலாம் பொருமையினுல் விதிகள்செய்து
முறைதவறி இடரெய்திக் கெடுகின்ருரே.

என்ன....சஞ்சீவி! பாட்டு எப்படியிருக்கிறது? இந்தத் தமிழ் நாடு உருப்படுமா?........"

"கமலநாதன்! உன் விஷயம் என்னவோ எனக்கொன்றும் புரியவில்லை. அன்றைக்கு உன் டைரியிலே 'பூத்த சோதி வதனம் திரும்பு மேல் புலனழிந்தொரு புத்துயிர் எய்துவேன்' என்று எழுதிவைத்திருந்தாய். இன்றைக்கு என்னமோ மனத்தையே பறக்க விட்டுவிட்டு ........ம்ம்..........என்ன'ப்பா, உன் போக்கு ஒன்றுமே புரியவில்லையே?........"

"சஞ்சீவி! என் மனம் சரியாயில்லை. ஊருக்கே போய்விடலாமா என்றுகூட எண்ணு கிறேன். பரீட்சையாவது ஒன்றுவது! மனித னுக்கு நிம்மதியில்லை யென்றல் இதெல்லாம்.... வீண்தானே!...."

"இதோ பார், கமலநாதன்! என்னவென்று விஷயத்தைச் சொல்லாமல் புதிராகப் பேசிக் கொண்டே போனல் அர்த்தமென்ன?...."

"என்னல் ஒன்றும் சொல்ல முடியவில்லை, சஞ்சீவி. மனம் சரியாயில்லை. எல்லாம் நம் முடைய ஆசிரியரைக் கேள், சொல்லுவார்."

இந்த உரையாடல் நடந்து எவ்வளவோ காலம் ஆகிவிட்டது. இன்று ஏனே அது கமல நாதனுடைய நினைவிலே எழுந்தது. சஞ்சீவியும் தாமும் தத்துவப் பட்டம் பெறப் படித்த காலம் —தேர்வு—கஷ்டப்பட்டுப் படித்தது—இதெல் லாம் பின்னணியாக அமைய அந்த உரையாடல்

மட்டுமே மிகவும் முன்னின்று அவர் நினைவுத் திரையில் ஆதிக்கம் செலுத்திற்று. ஓங்கி நின்று நினைவில் எழுந்த அந்த உரையாடல் கமலநாதனுடைய வாழ்க்கையில் உண்மையிலேயே மிகவும் முக்கியமானதுதான்.

* * *

சஞ்சீவிக்குக் கமலநாதனுடைய போக்கு ஒன்றும் புரியவில்லை. பேயடித்த மாதிரியாக வெறிச்சென்ற பார்வையோடு—எதிலும் ஊன்றிய கவனமில்லாமல்—வெறும் இயந்திரம்போல் இயங்கிவந்த போக்கு மிகவும் வருத்தத்தை விளைத்தது. தன்னுடைய தத்துவப் பேராசிரியர் திரு. வரதப்பரைச் சென்று கண்டான். "காணாத கனவு காணுகிறான் உன் நண்பன். கவிதையுலகில் கண்ட காதலை, கல்லாய் மண்ணாய்க் கிடக்கிற இந்த உலகத்திலும் காண நினைக்கிறான். காணமுடியாது என்று உணர நேர்ந்தபோது கவலைப்படுகிறான். உலகம் வேறு; உணர்வு வேறு"—இது அந்தப் பேராசிரியரிடமிருந்து சஞ்சீவிக்குக் கிடைத்த விளக்கம்.

சஞ்சீவிக்கு ஒரே கோபம். "இதென்ன, சார், புதுப்பாடமாய் இருக்கிறதே! உணர்வால்தான் இந்த உலகமே இயங்குகிறது என்று சொல்லிக் கொடுத்த பாடம் கல்லூரிக்குமட்டுந்தானா? இங்கே இப்படிச் சொல்லுகிறீர்களே—! உலகம் வேறு—உணர்வு வேறு....! இதென்ன,

சார், பெரு மயக்கமாக அல்லவா இருக்கிறது....”

“சஞ்சீவி! இதிலே மயக்கம் ஒன்றும் இல்லை. இது பெரிய புதிர். மனித அறிவுக்கு எட்டாத புதிர் என்று சொல்ல முடியாது. ஆயினும் புதிர்தான். சிக்கலைத் தீர்த்துவிடலாம். ஆனல், இன்று, இந்த நாட்டில் இல்லை. இனி, எப்போதோ—என்றோ — உதயமாகப் போகிற—புதிய தமிழகத்திலே வேண்டுமானல் இந்தச் சிக்கலும் புதிரும் இல்லாமலிருக்கலாம். ஆனல்—இன்று—இருள் சூழ்ந்த இந்தத் தமிழ் நாட்டில்—உலகம் வேறு, உணர்வு வேறுதான். காதல் என்பது காவியச் சரக்கு. இந்த நிலையில் உன் நண்பன் காணும் கனவு வெறும் கோட்டை —ஆகாயக் கோட்டை. தமிழ்நாட்டு நிலை தெரியாமல் அவன் அலமருகிருன். பாரதி பாட்டைக் கேட்டதில்லையா? ‘நாடகத்தில் காவியத்தில் காதலென்ருல்........’ பாட்டுத் தெரியுமல்லவா? காதல் என்பது ஆருவது பாதகம் என்று எண்ணுகிறது இன்றைய தமிழர் மனம். கலப்பு மணம் என்பது கழுவாயில்லாத பெரும் பாவம் என்றெண்ணுவது இன்றைய தமிழ்த் தாயர் இயல்பு. இந்நிலையில் கமலநாதன் மனக்கவலைப் பட்டால் நாம் என்ன செய்ய முடியும்....?”

“சார், நீங்கள் சொல்வதுபோலவே அவனும் பாரதி பாட்டைப் புலம்பிக்கொண்டு கொண்டுதான் இருக்கிருன். ஆனல்....”

“அதே பாட்டைத்தானு சொல்லுகிருன்?”

"ஆம்."

"பின்னே கவலை ஒன்றுமில்லை. அந்தப் பாட்டு அவன் உள்ளத்தில் இடம் பெற்ருல் போதும். நாளடைவில் அறிவு தெளியும். நாட்டு நிலைதான் தன் மனத்தை மாய்த்ததற்குக் காரணம் என்று தெளிவான்...."

"ஆனல், நான் சொல்லுவதை நீங்கள் முழுவதும் கேட்கவில்லையே! மனத்தெளிவை யூட்டும் என்று நீங்கள் சொல்லுகிற பாட்டே அவன் மனத்தைக் கலக்குகிறது; மூளையைக் கலக்குகிறது. அவன் பேய் கொண்டவன்போல—பித்தேறியவன் போல—போல் என்ன—பித்தேறியவனுகவே—இருக்கிருன், சார். ஏதாவது வழி தேடித்தான் ஆக வேண்டும். இல்லையென்ருல் என்ன ஆகுமென்று சொல்ல முடியாது......."

* * *

என்ன ஆகுமென்று முன்கூட்டித் தெரிந்து விட்டால் மனிதனே தெய்வ மாகிவிடுகிருன். அது தெரிந்துவிட்டால் வாழ்க்கையிலே வெறி இருக்க முடியாது. இன்பத்தை எதிர்நோக்கும் மனிதனுக்கு எதிர்காலம் தெரியக்கூடாது. தெரிந்தால் இன்பம் என்பதற்கு ஒன்றும் தனியான சிறப்பு இருக்கமுடியாது. கமலநாதன், சஞ்சீவி இவர்கள் யாவரும் சாதாரண மனிதர்கள்; எதிர்காலம் தெரியாத மனிதர்கள். எனவே, இன்பம் வந்தபோது நன்ருய்த்

திளைத்து மகிழ்ந்தார்கள். துன்பத்துள் துன்பம் உழன்ற கமலநாதனுக்குத் திருமணம் இன்பத்துள் இன்பமாய் அமைந்தது; கண்டு மகிழ்ந்தான் சஞ்சீவி. அன்று, பேராசிரியரோடு பேசிய காலத்திலே கமலநாதன் வாழ்க்கையிலே இத்தகைய மகிழ்ச்சியைக் காண முடியும் என்று அவன் எதிர்பார்க்கவில்லை. ஆகையால் தான் "என்ன ஆகுமென்று தெரியாது" என்று சொன்னான்.

பேராசிரியர் வரதப்பனுக்கும் மகிழ்ச்சி தான். ஆனால், சஞ்சீவியின் மகிழ்ச்சி வேறு; அவர் மகிழ்ச்சி வேறு. சஞ்சீவியின் மகிழ்ச்சி வெறும் மகிழ்ச்சி—நண்பன் இன்பத்தை எதிரொளி செய்யும் மகிழ்ச்சி. கதிரவன் ஒளியால் ஒளிரும் மதி போன்றது அவன் பெற்ற மகிழ்ச்சி. ஆனால், பேராசிரியர் மகிழ்ச்சி அறிவறிந்த மகிழ்ச்சி. கமலநாதனின் கலங்கிய நிலை—பின் தெளிவு—நாளடைவில் வந்துற்ற மண மகிழ்வு—இப்படியாகக் கமலநாதனுடைய வாழ்விலே மனித இயல்பு, தமிழின நிலை இவற்றை ஆய்ந்து தெளிந்து, அத் தெளிவால் பிறந்த மகிழ்ச்சிதான் பேராசிரியரின் மகிழ்ச்சி.

இனிமேலாவது கமலநாதன் மகிழ்ச்சியோடு இருப்பான் என்று சஞ்சீவி ஐயமில்லாமல் மகிழ்ந்தான். "கமலநாதா, கமலினி வந்தாயிற்று; இனி, கலக்கமும் கவலையும் இல்லை"—என்று தன் மகிழ்ச்சியைச் சொல்லியும் காட்டினான்.

"விழைவு என்பது இயற்கையுணர்வு; ஆனால் மிக மெல்லிது; எளிதிலே அழிந்துவிடக் கூடியது. அந்த உணர்வை அடிப்படையாக வைத்து ஒரு பெரிய மாளிகை எழுப்பவேண்டும். இந்தக் காரியம் மிகவும் கஷ்டமானது. 'ஒருவர் பொறை இருவர் நட்பு' என்பதை மறவாதே. இதுதான் இருவரிடையே உள்ள விழைவைக் காதலாக மாற்றக் கூடிய ஆற்றல் வாய்ந்த மந்திரம். விழைவு வெறும் வித்து; காதல் பெரு மரம். வித்திலிருந்து மரம் தோன்றி வளர்ந்து விரிய வேண்டும். இடையே முறிப்புகளும் பல நேரிடலாம். எல்லாக் காலத்திலும் வழிகாட்டும் மந்திரம் இதுதான்: ஒருவர் பொறை இருவர் நட்பு"—இது பேராசிரியர் வரதப்பரின் அறிவுரை.

கமலநாதனுக்கு வாய்த்த மனைவி நல்லவள் தான். அவருக்குப் பிடித்தமானவள்தான். அவரே தேர்ந்தெடுத்தார் என்று சொல்ல முடியாது; என்றாலும் தாம் அவளைப் பெற்றதிலே பெரு மகிழ்ச்சிதான். ஆடம்பரமற்ற குடும்பத்திலே—ஆரவாரமற்ற வகையிலே வளர்ந்து வந்த அங்கயற்கண்ணி தன் வாழ்க்கைக்கு ஏற்ற துணையாக இருப்பாள் என்று அவர் எண்ணினார். 'மனைவி படித்தவள்' என்ற நினைவும் கமலநாதனுக்கு மகிழ்ச்சியை ஊட்டிற்று.

கமலநாதன் இன்பப் பயணம் தொடங்கினார். அமைதியாய்த் தொடங்கினார். அமைதியாய் வந்த அங்கயற்கண்ணி அவருக்குத் தக்க

துணையாய் அமைந்தாள். ஆனல், அதெல்லாம் சில ஆண்டுகளே. அதன் பிறகு, கமலநாதன் விரும்பிய அமைதி வீட்டில் இல்லே. ஆடம்பர வாழ்வையே அங்கயற்கண்ணி விரும்புகிருள் என்பதைக் கண்டார்; கலங்கிஞர். முதலில் இன்பங் கண்டவர் துன்பத்தையும் அனுபவித்தார். "வெளியார் மதிக்க வேண்டாமா" என்ற சாக்கிலே வேண்டாத ஆடம்பரங்களிலே தன் மனத்தைச் செலுத்தினுள் அங்கயற்கண்ணி. அவருடைய தத்துவ மனம் ஆராயத் தொடங்கிற்று. "பெற்ருேர் உரிமை தராமல்—கட்டுப்பாடு செய்து வளர்த்திருக்கிருர்கள். உரிமையின்றி நசுங்கிக் கிடந்த அடிமை மனம் இங்கே ஆடுகிறது" என்று அவர் மனம் சொல்லிற்று. காரணம் கண்டதால்மட்டுமே அமைதி கிட்டவில்லே. தன் நிலேயைச் சஞ்சீவிக்கு அறிவித்தார். அவன் வருந்தினன். நண்பர் மகிழ்ந்தால் மகிழ்கிருன்; வருந்தினல் வருந்துகிருன். இவ்வளவுதான் சஞ்சீவியால் முடிந்தது. கமலநாதனுக்கு ஒரே வெறுப்பு; எதைப் பார்த்தாலும் சலிப்பு. இந்நிலேயில்தான் மேலே கண்ட காப்பிக் கதை நடந்தது.

காப்பி ஆறி அலர்ந்து கிடந்தது—யார் குடிக்க? எவர் எடுக்க?

சஞ்சீவியின் நினேவெழுந்தது. அவனும், தாமும் பேசிய உரையாடல் நினேவிலெழுந்தது. எல்லாம் சீப்பின் 'ட்ர்ர்' ஒலியிலேதான். பாரதி பாடல் இன்றும் அவர் நெஞ்சைக் கலக்

கிற்று. 'நான் நினைத்தபடி அவளைத் திருமணம் புரிந்திருந்தால்........' என்ற எண்ணத்துக்கு வடிவம் கொடுக்க முயன்று ஒரு பெருமூச்சுப் பிறந்தது.

"நன்றாயிருக்கிறது........" என்ற குரல் கேட்டுக் கமலநாதன் தம் நினைவு பெற்றார்.

அங்கயற்கண்ணி வந்துவிட்டாள். "ஆண் பிள்ளைகள் காரியமே இப்படித்தான். ஆமாம், காப்பி கிடந்து ஆறி அலர்ந்து போகிறதே! இதைக் குடிக்காமல் அப்படி என்ன குடிமுழுகிப் போகிற யோசனை, தெரியலையே! உங்கள் 'வாத்தியார்' காகிதம் எழுதியிருக்கிறார், பார்த் தீர்களோ?"

காகிதம்....! ஆசிரியர் காகிதம்! அங்கயற் கண்ணி பேசுவதைக் கேட்டுக்கொண் டிருந்த கமலநாதனுக்கு அப்போதுதான் செவிப்புலன் வேலை செய்யலாயிற்று.

"காகிதமா? எங்கே? பார்க்க'லையே!"

அவள் கடிதத்தைக் கொடுத்தாள். கமல நாதன் பிரித்துப் பார்த்தார். "மறக்க வேண் டாம். ஒருவர் பொறை இருவர் நட்பு—இது தான் மந்திரம். நெருங்கிப் பழகுவதால் நெருக்கடி ஏற்படும். அப்போது மந்திரத்தை மறக்க வேண்டாம்"—இவ்வளவுதான் கடிதம்.

## சமூகத் துரோகி?

கதிரவன் மறைந்தான்; வானத்தின் மேற்குத் திசை உலகினர் மனத்தை ஈர்த்தது—செக்கர் வானம், மாலைக் காலத்தை அணி செய்தது. மலையடிவாரத்தில் மேயச் சென்ற மந்தைகள் ஊர் திரும்பின. மாட்டோடு மல்லுக் கட்டி நாளெல்லாம் உழைத்த உழவர்களும் வீடு திரும்பினர். அவர்கள் மேனியில் வடிந்த வியர்வை யெல்லாம் இரத்தம்தான் என்பதைச் செக்கர் வானம் காட்டிற்று என்று உணர்ந்து விட்ட கொக்குகள் நிற்க மனமில்லாமல் கரங்களால் மார்பிலடித்துக்கொண்டு முடிவு தெரியாத இடத்தை நோக்கி விரைந்துகொண்டிருந்தன.

ஊர்ப்புறத்தே நெடுஞ்சாலையில் தள்ளாடி நடமாடும் ஒருவன் நகர்ந்து நகர்ந்து கிராமத்துக்குள் வருகிறான். கைகள் ஊஞ்சலாடுகின்றன; தோள்பட்டையோடு பிணைக்கப்படாமல் இருப்பதுபோலத் தொள தொளவென்று ஆடுகின்றன. கால்கள் பின்னிப் பின்னி அவன் சடலத்தை ஆட்டிவைக்கின்றன. குடிவெறியாக இருக்கலாமோ? இல்லை.

அவனைக் கடந்து வந்த ஓர் இடையன்,

கஞ்சிக் கவலை ஐயா
கடன்காரன் தொல்லை ஐயா
நெஞ்சுத் துயரமையா
நொந்தகுடி ஆனேனையா

என்று பாடிக்கொண்டு போகிறான். இடைச் சிறுவனுக்கென்ன கவலை? எருமை மாட்டு முதுகு மீது அமர்ந்துசெல்லும்போது, குதிரைச் சவாரி செய்யும் அரசிளங்குமரனாகவே தன்னைப் பற்றி எண்ணிக்கொள்ளுகின்றான். உழைப்பற்று உணர்வற்று உணர்விழந்து தள்ளாடும் கந்தனைப் பார்த்தபோது பாடிய அதே வாய், சென்னையிலிருந்து விடுமுறைக்குக் கிராமத்தை நாடி வந்திருக்கும் பண்ணையார் மகன் சந்திரனைக் கண்டதும்,

சாலையிலே போறவரே
சந்திரரே என் கொழுந்தா—நீரு
இங்கிலீசு படிக்கப்போயி—நான்
என்ன சொல்லிக் கூப்பிடட்டும்

என்று நையாண்டியாகப் பாடுகிறது. கவலை கவடுகளற்ற அவன் உள்ளத்திலே சாலையில் போகிறவர்கள் அத்தனை பேரும் இடம் பெறு கிறார்கள். கந்தனுக்கு உதவ அவனிடம் காசும் இல்லை; சந்திரனிடம் சென்று பேசிக்கொண் டிருக்க அவனுக்குச் சந்தர்ப்பமும் இல்லை. என்றாலுங்கூடக் கந்தனைக் கண்டவுடன் அவன் உள்ளக் கண்ணாடியில் ஒரு துன்ப உருவம் நிழலிடுகிறது; துயர உணர்வு பாடலாய் மலர் கிறது. சந்திரனைக் கண்டவுடன் அதே கண்ணாடி யில் அவனுடைய இளமைத் துடிப்பும், அவன் பருவ விளையாட்டும் நிழலிடுகின்றன. உடனே இடைச் சிறுவனுடைய உள்ளத்திலே ஒரு காதல் கதை உருவாகிறது. பாட்டுப் பிறக் கிறது; பாடுகிறான். கவலையற்ற வாழ்வு!

கந்தனுக்கு நாளைக்கு வரப்போகும் நிலையும் தெரியாது; சந்திரன் எங்கே காதல் நாடகம் ஆடினான் என்பதும் தெரியாது. உருவத்தைப் பார்த்து உள்ளத்து நிலையைச் சித்திரம் தீட்டும் கவிஞன் அவன் — வெறும் நாட்டுப்புறத்து இடையன்தான்.

சரி, கந்தனைப் பார்ப்போம். தள்ளாடித் தள்ளாடி எவ்வளவுதான் நடக்க முடியும்? அதோ, ஒரு மரத்தடியில் அமர்ந்து அடி மரத் தில் சாய்ந்துவிட்டான்.......

* * *

“ தற்கொலை முயற்சி, பெரும் பாவமான காரியமாகும். தற்கொலை செய்துகொள்ளுகிறவர்கள்தாம் பேய்களாகத் திரிகிறார்கள். ஆண்டவனுடைய விருப்பத்துக்கு எதிராகத் தங்களை மாய்த்துக்கொள்ளுகிறவர் படுநரகில்....” என்று புராணப் பிரசங்கி விளாசு விளாசென்று விளாசிக்கொண் டிருக்கிறார். ஏதோ கதையின் நடுவிலே தற்கொலைபற்றிய பௌராணிகரின் விளக்கம். பேயுலக ஆராய்ச்சி செய்துவிட்டது போலப் பேசுகிறார்! தற்கொலை செய்துகொள்ளாமல் உலகத்து மக்களை யெல்லாம் மனித உருவிலிருந்தே பிடித்தாட்டும் பேய்கள் எத்தனையோ உண்டு என்பதைமட்டும் விளக்க அவருக்கு மனமில்லை. மனிதப் பேய்களைப் பற்றிச் சொன்னால் எத்தனையோ இடத்துப் பொல்லாப்பு.

சென்னையிலும் இத்தகைய புராணப் பிரசங்கங்கள் நடப்பதுண்டு. இரவு ஒன்பது மணிக்குக் கதை தொடங்கும். பதினொன்று, பன்னிரண்டு மணி வரையிலும் கதை நடக்கும். ‘சத் விஷய’ங்களில் ஆர்வங் கொண்டவர்கள் அங்கே கூடியிருப்பார்கள். கதை நடக்கும்; வெறும் கதையல்ல. சரித்திரம் சொல்லும் போதே சாத்திரம் வரும். அதுமட்டு மல்ல. மறுமையில் வீட்டின்பம் எய்தவேண்டு மாயின் என்னென்ன செய்யவேண்டு மென்ற அறிவுரைகளும் பிறக்கும். அந்தக் கூட்டத்தாருக்கு அவை வேண்டியவைதாம்.

நாட்டுப் புறத்திலிருந்து பிழைப்பை நாடிச் சென்னைக்கு வந்த கந்தனுக்கு அங்கே என்ன வேலை? அவனும் ஒரு பக்கத்தில் நின்று கேட்டுக்கொண் டிருந்தான். திடீரென்று நடுவே புறப்பட்டுப் போகலானான். அப்போது கூட்டத் திலிருந்து எழுந்து ஓடப் பார்த்த ஒரு சிறுவனை அவன் பாட்டி இழுத்துவைத்து, "புண்ணியக் கதை கேட்க வந்து, நடுவிலே போகலாமோ? பாவமாச்சே" என்று முணு முணுத்தாள்.

கந்தனுக்கு அதெல்லாம் தெரியாது. ஏதா வது இரண்டு காசு கிடைக்காதா என்று எண்ணி அங்கே வந்தான். சத் விஷயங்களில் சத் ஜனங்களோடு கலந்து மோட்ச சாம்ராஜ்யத்தை அடைய எண்ணிய அந்தக் கூட்டத்தில் அவனுக்குப் பிச்சை இடுவார் யாரும் இல்லை; புறப்பட்டுவிட்டான்.

வாழ வகையில்லாத அவனுக்கு வானுலக வழி புரியவில்லை. கதை கேட்டதால் ஒரே பலன் மட்டும் ஏற்பட்டது. தற்கொலை என்ற எண் ணத்தை அந்தப் 'புண்ணியவான்'தான் கந்தன் மனத்தில் உண்டாக்கினார்.

தற்கொலை

தற்கொலை

தற்கொலை—அதை ஏன் பாவச் செயல் என்று சொல்ல வேண்டும்? "ஒவ்வொரு மனிதனும் சமூகத்துக்குச் சேவை செய்யவே

இறைவனுல் படைக்கப்படுகிருன். எனவே பிறந்துவிட்ட எவனுக்கும் தற்கொலே செய்து கொள்ள உரிமை கிடையாது..........." என்று கதைக்காரர் சொன்ன வாதம் அவன் மனத்தில் எழுந்தது.

அவனைப் பொறுத்தவரையில் சமூகத்துக்குப் பாடுபடத் தயார்தான். உழைப்புக்கு அஞ்சி ஒதுங்கும் இயல்போ, உழைப்பை மற்றவர் தோளிலே எறியும் 'பெருந் தன்மை'யோ அவனுக்குக் கிடையாது. உடல் உள்ளவரை, உடலில் வலிமை உள்ளவரை உழைப்பதற்கு அவன் தயார்தான். ஆனுல், அவனை ஏற்றுக் கொள்ள—இல்லே இல்லே—அவன் உழைப்பை ஏற்றுக்கொள்ளச் சமூகம்தான் தயாராக இல்லே.

'உழைத்தால் உணவு' என்கிறது சமூகச் சட்டம். அவன் உழைக்கத் தயார்; ஆனுல் உழைப்பில்லே. 'உணவும் கிடையாது' என்கிறது சமூகம். 'அதோ அந்த மாடி வீட்டார் மட்டும்... ....?' என்று ஒரு மெல்லிய குரல் அவன் மனத்திலே எழுகிறது. உடனே 'விதி' என்று ஒரு பெருங்குரல் எழுந்து அதை விழுங்கி விடுகிறது.

கந்தன் படித்தவனல்ல. 'சத் விஷயங்கள்' கேட்டவனுமல்ல. அவன் மனத்திலே இப்படியெல்லாம் கேள்விகள் எழுந்தன. பயன் என்ன? ஒரே குழப்பந்தான்.

'தற்கொலை! தற்கொலை!—அதை ஏன் பாவச் செயல் என்கிருர்கள்? தற்கொலை செய்கிறவன் சாமிக்குத் துரோகி என்கிருர்களே, ஏன்?'

* * *

**நீ**தி மன்றம்

சமூகத்திலே அநீதி நிகழ்ந்துவிடாமல் பாது காவல் புரிவதற்காக அரசாங்கத்தார் ஏற் படுத்திய நீதி மன்றத்திலே கந்தன் குற்றவாளிக் கூண்டிலே நிற்கிருன்.

சர்க்கார் தரப்பு வக்கீல் கையை வீசி வீசி வாதாடுகிருர். கந்தன் செய்தது தப்பு என்பதை நிறுவுவதற்காக அவர் இவ்வளவு அரும்பாடுபட வேண்டியதே இல்லை. இருந்தாலும் அவர் பெரிய வக்கீல். வெறும் சட்டம் பேசுவதோடு நிற்கலாமா?

"ஒவ்வொரு மனிதனுக்கும் சமூகத்தில் கடமை உண்டு. ஒவ்வொரு மனிதனும் சமூகத் தின் அங்கமாவான். எனவே, சமூகத்தின் அங்க மாகிய எந்த மனிதனும் தன் கடமையை ஆற்ருமல் தற்கொலை செய்துகொள்வதென்பதை அறி வுள்ள எந்த அரசாங்கமும் ஏற்றுக்கொள்ளாது. சுருக்கமாகச் சொல்லவேண்டு மென்ருல் தற் கொலை செய்பவன் ஒவ்வொருவனும் சமூகத் துரோகி ஆவான்."

இது சுருக்கந்தான். அந்தச் சட்டம், இந்தச் சட்டம் என்று சட்டப் பெயர்களோடு,

பள்ளிக்கூடத்தில் தமக்கு உதவி புரியாத கணக்குப் புத்தகத்தின் எண்களைப் பழிவாங்க நினைத்து அவற்றையும் சேர்த்து விளக்கினர்; விரிவாக விளக்கினர். ஒருவாருக அவராகவே முடித்து அமர்ந்துவிட்டார்.

நீதிபதி கந்தனைப் பார்த்துக் கேட்டார்:

"என்னப்பா, நீ ஏதாவது சொல்ல வேண்டுமா?"

"ஒண்ணும் இல்லீங்க"

"நீ செய்தது குற்றந்தானா?"

"ஆமாங்க"

"ஏன் செய்தாய்?"

"எனக்கு ஒண்ணும் புரியலீங்க. உழைச்சுப் பிழைக்க ஊரிலே வழி இல்லேண்ணு இங்க வந்தேனுங்க. இங்கேயும் அப்படித்தானுங்க...."

"அதெல்லாம் கேட்டதார்......."

"சரிதாங்க. வயித்துக்கு இல்லீங்க; கிடைக்கவும் வழி இல்லீங்க. சரிதான், இன்னமே இங்கே நமக்கு வேலை இல்லேன்னு...."

"தற்கொலை செய்துகொள்ளப் பார்த்தாயோ?"

"ஆமாங்க."

"ஏண்டா, உன் மனைவி மக்கள்...."

"ஐயோ சாமி, அந்த நெனவு எனக்கு என்னாத்துக்குங்க? பாசம் கிடக்குது பாதாளம் வரையிலும். இருந்தாலும் என்னங்க? பணமும் பருக்கையும் இல்லாதவனுக்கு அந்த நெனவெல்லாம் என்னத்துக்கு?"

"அவர்கள் பிழைப்பு என்ன ஆகிறது?"

"எம் பொளப்புத்தான் அவங்களுக்கும்."

"அட, பாவி...."

* * *

திண்ணென்ற சிறைக் கதவு மூடிற்று. கந்தன் கைதி. அவன் சிந்தனைக் கதவு திறந்தது. எழுந்தது ஒரு கேள்வி :

"சமூகத் துரோகி....! யார்? வக்கீல் ஐயர் சொன்னாரே! நானா துரோகி?"

சர்க்காருக்கு அவன் உயிர்மேல்தான் எவ்வளவு அக்கறை! சமூகத்துக்குத் துரோகம் செய்துவிடாமல் அவனைக் காப்பாற்றிவிட்ட சர்க்கார் மிகவும் திறமை உள்ளதுதான்!

கந்தன் அடைபட்டுக் கிடந்தான். அவனுடைய 'கூண்டில்' மேல் உத்தரத்தில் இரண்டு குருவிகள் பேசிக்கொண்டன. கந்தன் நினைத்தான் :

"வாழ வைக்கத்தான் வகையில்லே; சாக விடவும் இந்த மனிசருக்கு ஏன் மனமில்லே?"

# சில்லறையும் மொத்தமும்

**நா**ணயக்காரப் பிள்ளை என்ற பெயரில் வழங்கப்பெறும் சிறப்பு நெல்லை நகரில் ஒரு வருக்குத்தான் கிடைத்தது. மளிகைக் கடை வைத்து நிறையப் பொருள் சேர்த்துவிட்டார். எப்படியோ அவருக்கு நாணயக்காரப் பிள்ளை என்று பெயர் தோன்றிவிட்டது. அவருடைய இயற்பெயர் என்ன என்பது அயலூரா ணுகிய எனக்குத் தெரியவில்லை. எனக்குமட்டுந்தான் தெரியவில்லை என்பதில்லை. எத்தனையோ பேருக்கு அவருடைய உண்மைப் பெயர் தெரியாது.

உண்மைப் பெயர் தெரியாவிட்டால் என்ன? நாமும் அவரை நாணயக்காரப் பிள்ளை என்றே

வழங்குவோமே. அதனால் ஒன்றும் குடி முழுகிப் போகாது.

வீரராகவபுரத்தில் நாணயக்காரப் பிள்ளை கடை வைத்திருக்கிறார். வண்ணார் பேட்டையில் வீடு. நடுப்பகல் உணவுக்காக வீட்டுக்கு வருவார். சாலை வழியாக வருகிற வழக்கம் இல்லை. வீரராகவபுரத்துக்கும் வண்ணார் பேட்டைக்கும் நடுவே தண்பொருநை ஆறு தான். நாணயக்காரப் பிள்ளையைப் போன்ற வர்களுக்கு நல்லது செய்ய வேண்டுமென்று எண்ணித்தானோ என்னவோ, அந்தத் தமிழ் ஆற்றில் பெரும்பாலும் சிறிதளவே தண்ணீர் ஓடும். நாணயக்காரப் பிள்ளை சிந்துபூந்துறை வந்து, ஆற்று வழியாக வண்ணாரப்பேட்டை அடைவது வழக்கம். எப்போதாவது மழை பெய்து ஆற்றில் தண்ணீர் நிறைந்து வந்தால், "இந்தப் படுபாவிப் பயல்கள் நிறைந்த ஊரிலே மழை வேறு கேடா?" என்று 'திருவாய் மொழி' பாடிக்கொண்டே சாலை வழியாக நடந்து 'தொலைப்பார்.' ஆனால், ஆள் இறங்க முடியாது என்ற நிலை எப்போதாவதுதான் ஏற்படும்.

பொழுது விடிவதற்கும் மறைவதற்கும் நாள்தோறும் யாராவது கட்டளை இடுகிறார்களா? இயற்கை நியதி தன்பாட்டில் இயங்குகிறது. இந்த இயற்கை நியதிக்கும் நமது நாணயக்காரப் பிள்ளையின் வாழ்க்கை நியதிக்கும் மிகவும் ஒற்றுமை. கிழக்கு வெளுக்குமுன் எழுந்துவிடு வார். குட்டந் துறையில் குளிப்பார்; பேராச்சி

கோயிலை வலம் வந்து அவள் பொறுமையைச் சோதிப்பார். பிறகு வீட்டில் ‘பழையது விருந்து.’ அடுத்த வேலை ‘கடை திறப்பு.’ ஆற்று வழி தான் அவருக்கு எப்போதும் ஏற்பட்ட வழி. கடையில் அவர் அமர்ந்திருப்பதைப் பார்த்தால் திருநீற்றுப் பொலிவே ஓர் உருவம் பெற்று அமர்ந்திருக்கிறதோ என்றுதான் எண்ணத் தோன்றும். சிலருடைய ‘தயவை’ நாடி அவர் செலவழிக்கிற பணத்தை மறந்துவிட்டால், திருநீற்றுக்கெனச் செலவிடுவதுதான் ‘பிள்ளை’ வாளுக்குப் பெரிய செலவு. இந்த இரண்டு செலவினமுந்தான் அவருடைய வாணிக ‘இரகசியங்கள்’. நடுப்பகல் உணவுக்காக வீட்டுக்கு வருவார். வரும்போதும் போகும்போதும் பேராச்சியை விடமாட்டார்.

ஆறு, வீடு, கடை,—ஆறு, வீடு, கடை— இதுதான் அவர் நியதி; நிலைத்த நியதி. இந்த நியதிக்கிடையே சிக்கி மூச்சுத் திணறித் திண்டாடும் நிலை பேராச்சிக்குத்தான். இயற்கை நியதியில் அவ்வப்போது ‘கிரகணங்கள்’ ஏற்படுவதுபோலப் ‘பிள்ளை’வாளும் மேலதிகாரிகளைக் ‘கைக்குள் போட’ப் போவார். மற்றப்படி ஒரே ஒழுங்குதான். பொழுது விடிவதும் சாய்வதும் நிலைமாறினல் இவர் நியதியும் ஒருவேளை மாறலாம்.

ஒரு திங்கட்கிழமை. வழக்கம் போலச் சாப்பாட்டுக்காக நா....பிள்ளை வீடு நோக்கி வந்து கொண்டிருந்தார். பேராச்சி கோயிலுக்குப்

பக்கம் ஆற்று நடுவில் முருகன் கோயில் ஒன்று இருக்கிறது. அதன்முன் ஒரு சிறு கூட்டம்; கூட்டம் சிறிதானலும் ஒலி பெருகித்தான் இருந்தது. எல்லோரும் என்னென்னவோ பேசிக்கொண் டிருந்தார்கள். ஒருவர் சொன்னதை மற்றவர் கேட்கவில்லை; எல்லோருமே பேசினர்களே தவிரக் கேட்கவில்லை.

அது என்ன கூட்டமென்று அறியவேண்டுமென்று நம் பிள்ளைவாளுக்குக்கூட ஓர் ஆசை எழுந்துவிட்டது. அதாவது, ஒரு வால் நட்சத்திரம் வானில் புதிதாகத் தோன்றிவிட்டது என்றுதான் எண்ண வேண்டும். நியதி பிறழ்கிறது....

"என்ன தம்பி, அங்கே ஏன் கூட்டம் கூடி'ருக்கு? ஏதாவது கிழடு ஆத்திலே வாயைப் பிளந்திருச்சா?" என்று பக்கத்தில் சென்ற ஒருவரிடம் நா....பிள்ளை கேட்டார்.

"அதெல்லாம் ஒண்ணுமில்லை. ஒரு 'பொடிப் பய' துட்டைக் களவாண்டுக்கிட்டானும். புடிச்சிக்கிட்டாக. போலீசுக்காரரும் வந்தாச்சி. 'பய' மெத்தத் துணிச்சல்காரன்தான். வாயைத் தெறப்பனுங்கான்."

பிணங் கிடக்கும் இடத்தை யாரும் சொல்லாமலே தெரிந்துகொள்ளக் கூடிய வல்லமை பருந்துகளுக்கு உண்டல்லவா? அதுபோலத்

தான் போலீசுக்காரர் நிலையும். இங்கே ஒரு சிறுவன் காசு திருடிவிட்டான் என்பது எப்படித்தான் தெரிந்ததோ? கண் இமைக்கு முன் இரண்டு பேர் வந்துவிட்டார்கள். மூக்கு வியர்த்ததோ என்னவோ!

பையனுக்குப் பத்து வயது இருக்கும். களையான முகந்தான். வயிறுதான் ஒட்டிக் கிடந்தது. கண் பெரிய கண்; ஆனால் ஒளியிழந்த கண். வருத்தம் அவனை விழுங்கியிருப்பது தெரிகிறது. என்றாலும் ஒரு சொட்டுக் கண்ணீர் வர வேண்டுமே....! கிடையாது. அவன் இடுப்பில் இருந்த ஒரே வேட்டி இப்போது அவனுக்கு விலங்காக மாறிவிட்டிருந்தது. மானம் காக்கத் திருடினன்; மானம் பறந்துவிட்டது. இனி வேட்டி எதற்கு? மானங்கெட்ட சமூகத்தின் சாபக் கேடாக அவன் அங்கே நின்றான். நாகரிகச் சமூகத்தினை எள்ளி நகையாடவே ஏற்பட்ட படைப்பாக அவன் அங்கே நின்றான். படித்து வளர்ந்து சமூகத்தில் பெரிய மனிதனய் வாழ வேண்டிய அவன், மானம் இழந்து, ஆடை இழந்து—ஏன் அனைத்தும் இழந்து—அங்கே நின்றான். தண்பொருநை இந்த மானக் கேட்டைக் காண நாணி, ஒதுங்கி வளைந்து மௌனமாகச் சென்றுகொண் டிருந்தது. நெகிழ்ந்த மனம் சமூக வாழ்வுக்குச் சரியன்று என்று சொல்வதைப் போல ஆற்றை ஒட்டிப் பாறைகள்— திண்ணென்று கரடுமுரடாயிருந்த பாறைகள்— இருந்தன. அத்தகைய ஒரு பாறை

மீதுதான் சமூகத்தின் மானக்கேடு—சாபக் கேடு—நாடகமாக நடந்துகொண் டிருந்தது.

எல்லோரும் என்னென்னவோ பேசினர் கள். போலீசுக்காரர்களின் வெருட்டொலி ஓங்கிக்கொண்டே போயிற்று. ஒலி செயலாய் மாறிற்று. அடி, உதை என்ற வடிவில் போலீ சாரின் அதிகாரம் அங்கே நடனமாடிற்று. ஆனல், இந்த ஆரவாரங்க ளெல்லாம் அந்தச் 'சின்னப் பயலை' ஒன்றும் செய்துவிட வில்லை. வறண்டு கிடந்த அவன் கண்ணி லிருந்து ஒரு சொட்டு கண்ணீர்கூட வரவில்லை. வாய்திறந்து பேசவோ—இல்லவே இல்லை. சிறுவன் வன் கண்மையின் வடிவமாக அங்கே நின்றுகொண் டிருந்தான். சமூகத்தின் கேலிப் பிழைப்பைக் கேலி செய்வதுபோல் அங்கே அசைவற்று நின்றுகொண் டிருந்தான்.

ஆற்றில் குளிக்கப்போன ஒருவர் படிக் கட்டில் நான்கணக் காசை வைத்துவிட்டுப் போனராம். அதை அவன் எடுத்திருக்கிறன். பார்த்துவிட்டார்கள்.—பிறகு ஆரவாரங்களும் சடங்குகளும் ஒன்றன்பின் ஒன்ருய் வந்து விட்டன........இவ்வளவுதான் நடந்த நிகழ்ச்சி.

நாணயக்காரப் பிள்ளை பையனைப் பார்த் தார். நல்லவேளையாக அவரும் ஒரு போலீசுக் காரராக இல்லை. அப்படியானல் பாறைதான் அம்மி; பையன் துவையல்தான்.

"காலம் கெட்டுப் போச்சு. பிடிச்ச பிடிக்குப் பதில் சொல்லத் தெரியாத இந்தப் பொடியனுக்கு வந்த துணிச்சலைப் பாத்தியளா? காசை எங்கெதான் வைச்சிருப்பான்? சொன்னுை இல்லையா? முழிக்கிற முழியைப் பாரு, ஆந்தைமாதிரி. பிள்ளையைப் பெத்துவிட்டானே, அவனைச் சொல்லணும், பயல் என்ன பண்ணுவான்?"

—இது பிள்ளை' வாள் சொற்பொழிவு. பக்கத்திலிருந்தவர் ஒருவர் சொன்னுர்:

"என்னவே, ஊரிலே எத்தனையோ பேரு மொத்த மொத்தமாக் கொள்ளை யடிக்கலையா?-அதெல்லாம் மரியாதைக் கொள்ளை. அவுக செய்றதுக்கெல்லாம் என்னென்னமோ பேரு! இந்தப் பய' செய்ததுமட்டுந்தான் களவா? பாவம், பச்சை மதலை, எத்தனை நாள் பட்டினியோ, என்ன சங்கடமோ? இந்த நாலணுவை வெச்சு என்னென்ன செய்ய நினைச்சானே! அவன் தலைவிதி ஆப்பிட்டுக் கிட்டான். ஊரே இப்பிடித்தான். அண்ணுச்சி, போலீசுக்காரரே, உங்களைத்தானே! வயித்துக்கில்லாத கொடுமையிலே களவாண்டிருப்பான். பயலை போகச் செல்லுங்க"

—இது ஒருவர் பரிவுரை. என்ன.........! சிறுவன் கண்ணில் ஒரு சொட்டுக் கண்ணீர்........! அது வந்தேவிட்டது! இரக்கமும் இந்த உலகத்தில் உண்டா!

"எலே, மூதி, என்னலெ அழுதுக்கிடுதியே, அழுகை வேறயா? சீ மூதி, எங்கேலெ'காசை வச்சே"

—இப்படியாக நாடகம் நடந்துகொண்டிருந்தது. இதையெல்லாம் பார்த்துக்கொண்டிருக்க நம் பிள்ளை வா'ளுக்கு முடியுமா?

"அடி உதவுகிற மாதிரி அண்ணன் தம்பி கூட உதவ மாட்டான். பயலைச் சக்கையாப் போட்டு நாலு அறை வச்சாத் தானே கக்குவான். அடிமேலே அடி வைத்தால் அம்மியும் நகரும்"

என்று மேற்கோள்களுடன் முடிவுரை கூறி விட்டு நடந்தார்.

பேராச்சி கோயிலை வலம் வராமல் போகலாமா? "அம்மா, பேராச்சி! நாளை செவ்வாய்க் கிழமை. நாலு தேங்காய் விடலை எறிகிறேன். அந்தக் காரியம் மட்டும்...." என்று எதற்கோ நேர்ந்துவிட்டு வீட்டுக்கு வந்தார்.

அங்கே................?

பிள்ளையவர்களை வரவேற்க 'வாரண்டு' காத்திருந்தது.

என்னவோ கள்ள வியாபாரமாமே...........!

மறுநாள், செவ்வாய்க்கிழமை. பேராச்சிக்கு நான்கு தோங்காய் நஷ்டம்.

## தோல்விதானு?

அவன் சிற்பத் திறனின் எல்லை கண்டான். சிற்பக் கலைக்கு வரையறைகள் செய்த வல்லாளனுக விளங்கினுன். சிலையைக் கலையாக்கும் வித்தகர்க்கு அவன் இட்டதுதான் பிச்சை.

அவன் கை படைத்த அமரச் சிலைகள் எத்தனையோ............தெரியாது. ஆயிரக் கணக்கில் சிலைகளை அவன் படைத்துவிட்டான் என்று நாடெங்கும் பேசிக்கொண்டார்கள். ஆனுல், அவன் செய்தனவாக மக்கள் கண்டவை மிகமிகச் சிலவே.

அவன் கலைஞன். பிறர் யாருக்காகவும் அவன் வாழவில்லை. அவன் போக்கு ஒருவருக்கும் புரியாது. அவன் யாரிடமும் புகழை நாடிப்

போகவில்லை. எவரையும் நாடவேண்டுமென்ற எண்ணம் அவன் மனத்திலே அரும்பியது கூடக் கிடையாது. அவனைப் பொறுத்தவரையில் அவன் தன்னைக்கூடப் பொருட்படுத்தினுன் என்று சொல்லமுடியாது. கற்கள் உண்டு; சிற்றுளி பேருளிகள் உண்டு; அவன் கலைப் பித்தும், கற்பனைச் செல்வமும் உண்டு. அவனுக்கென்று ஒரு கூடம் உண்டு. மூதாதையர் விட்டுச் சென்ற சிறு வீடுண்டு; அதிலே ஒரு சிறு அறை; அது தான் அவனுக்கு உலகம்; அங்கே சில சிலைகள் —கலையின் அசையா அவதாரங்கள். அந்த அறையில் நுண்கலையானது கண்ணுக்குத் தெரியும்படி பருவுருவம் பெற்றுத் திருவோலக்கம் கொண்டிருந்தது.

புகழிலே நாட்டமில்லாத அவனை எந்தச் சமஸ்தானுதிபதியும் 'ஆஸ்தானச் சிற்பியாக' நியமிக்கவில்லை. ஆஸ்தானச் சிற்பிகள் எவரும் அவனை நாடி வரவுமில்லை. பயித்தியக்காரன் என்பது அவர்கள் முடிவு. ஏதோ, உள்ள திறமையை மற்றவர்க்குக் காட்டிப் புகழுடல் நிறுவி, பொன் பொருள் சேகரித்து, பொன்னும் புகழும் புடை சூழக் கலைமகளைச் சித்திரமாக்கும் 'பெருமை'யைப் பெரிதாக மதித்த அவர்கள் போக்கு வேறு; தன்னையே ஒரு பொருட்டாக மதிக்காமல், கலைத்தேவதைக்கு உள்ள பசியைத் தன் கற்பனையால் தீர்க்க முனைந்து, கனவுலகில் வாழ்ந்து, யாவும் மறந்து 'மயங்கி' இருக்கும் இவன் போக்கு வேறு.

அவர்களும் சிற்பிகள். இவனும் சிற்பி. ஆனல், அவர்கள் ஒரு போக்கு; இவன் ஒரு போக்கு.

* * *

மன்னன் ஒரு பௌத்தன். செல்வம் மலிந்த அந்த நாட்டிலே அவன் ஆதரவைப் பெருத துறை இல்லே. கலே என்ருல் மன்னனுக்கு மிகவும் பித்து என்று சொல்லிக்கொண்டார்கள். அவன் தந்த கொடைகளேக் கல்லில் செதுக்கிவைத்த சிற்பிகள், அவனுக்குச் 'சிற்பச் செல்வம்', 'கற்பனேக் களஞ்சியம்', 'கலேவெறி ஏறிய காவலர் ஏறு' என்றெல்லாம் பட்டங்கள் தந்தனர். மன்னனுக்கு மட்டற்ற மகிழ்ச்சி. புகழ் அவனே நாடிற்று; அவன் புகழை நாடினன். பொருளெல்லாம் அவன் ஆதிக்கத்துக்கு அடங்கியது; பொருள் புகழைத் தேடி வந்தது; புகழ் பொருள் வலேயில் சிக்கிற்று. கடைசியில் மன்னவனுடன் அரியாசனம் ஏறி விட்டது. அரசன் புகழாய்விட்டான். அரசன் ஒரு மனிதன் என்பதையே யாவரும் மறந்து விட்டார்கள். அப்படிப்பட்ட பண்பினன், இப்படிப்பட்ட சிறப்பினன் என்றெல்லாம் பண்பியாகக் கண்டார்கள். அவன் பண்புகளின் உறைவிடமாக இருந்தான்; அவன் அவனுக இல்லே.

அவனுக்கே ஒரொரு நாள் வியப்பாக இருக்கும். "நமக்கு என்ன தெரியும், நம்மை ஒரு கலேப் பித்தன் என்று சொல்லுகிருர்களே"

என்று அவன் நினைப்பான். ஆனல், இனி அவன் என்ன செய்ய முடியும்? அவன் ஒரு கலைப்பித் தன்தான்.

பொருள் அவனை ஒரு கலைப் பித்தனுக ஆக்கிவிட்டது.

*　　*　　*

வைகாசி விசாகம் வரப் போகிறது என்றல் அந்த நாட்டிலே ஒரே உற்சாகமாக இருக்கும். புத்தர் பெருமான் திருநாளாகிய அன்றைய நாளில் பெரிய திருவிழாக் கொண்டாடுவார்கள். மன்னவன் தன்னை மக்கள் தலைவனுகக் கருதாமல் தானும் மற்றவர்களைப்போல் புத்தர் பெருமானின் அடியவன் என்று நினைத்து நடக்கும் நாள் அந்த நாள்....

அந்த ஆண்டு நடைபெறப் போகும் விசாகத்திருநாளில் அந்த நாட்டுச் சிற்பி ஒவ்வொருவனும் புத்தர் பெருமானின் சிலை ஒவ்வொன்று செய்துகொண்டு வரவேண்டும். இது மன்னன் இட்ட கட்டளை. ஓராண்டுக்கு முன்னரே இடப்பட்ட இந்தக் கட்டளையை நிறைவேற்ற ஒவ்வொரு சிற்பியும் முனைந்து நின்றன்; அரும்பாடு பட்டான். மற்றச் சிற்பங்களைக் கவனியாமல் புத்த விக்கிரகத்தையே ஒவ்வொரு சிற்பியும் கவனித்தான். அரும்பாடு; பெரு முயற்சி.

தனிமையில் திளைக்கும் சிற்பிக்குப் ‘புத்தர் சிலை— வைகாசி விசாகம்—மன்னன் கட்டளை’

என்ற சொற்கள் எட்டின. மன்னவன் கட்டளை என்னவென்று தெரியாது; வைகாசி விசாகம் என்னவென்று தெரியாது.

புத்தர்—சிலை...............

புத்தர் சிலை...............

புத்தர் பெருமான் சிலை...........

இவ்வளவுதான் அவனுக்கு விளங்கிற்று.

புத்தர்—அவர் எப்படி இருந்திருப்பார்?

சித்தார்த்தராக--அரச குமாரராக--எங்கள் பெருமான் எப்படித் தோற்றம் அளித்திருப்பார்?

இந்தக் கேள்விதான் அவன் கற்பனையைக் கிளர்ந்தெழச் செய்தது. கற்பனை எத்தனையோ விடைகள் தந்தது.

ஒவ்வொரு விடையையும் நன்றாக எண்ணி எண்ணிப் பார்த்தான். கடைசியாகப் புத்தரைச் சித்தார்த்தராக்கும் முயற்சியில் தன்னை ஒப்படைத்தான்; தன்னை மறந்து ஈடுபட்டான்.

சிற்பக் கலையில் இணையில்லாத அந்தச் சிற்பி, சிலைக் கலையின் செங்கோலன், அவன் தோற்றான்—தோற்றுப் போனான்.

ஒரு முறையா? இரு முறையா? பலமுறை தோற்றுவிட்டான்.

அவன் யாருக்கும் தோற்கவில்லை. அவனுக்கு அவனே தோற்றான். அவன் படைத்த

கலை அவனுக்குத் திருப்தியளிக்கவில்லை. ஒவ்வொரு முறையும் அவன் மனம் 'நீ தோற்ருய்: உன் திறமை தோற்றது. நீ சிற்பியே அல்ல; உனக்கும் சிற்பத்துக்கும் வெகு தொலைவு' என்றுதான் சொல்லிற்று.

வைகாசி விசாகம் வந்துவிட்டது. அரண்மனையின் ஒரு பக்கத்தி லிருந்த கலைமன்றம் முழுவதும் புத்தர் பெருமானின் சிலைகளால் அணிபெற்று விளங்கிற்று. மன்றத்து வாயிலில்,

"வாடாப் போதி மரகதப் பாசடை
மரநிழல் அமர்ந்தோன் நெஞ்சம் யார்க்கும்
அருளின் தீந்தேன் நிறைந்துநனி நெகிழ்ந்து
மலரினும் மெல்லிது என்ப........."

என்ற வரிகள் அழகாக எழுதப் பெற்றிருந்தன. மன்றத்துள் நுழைவோர் யாவரும் அந்த வரிகளைப் படித்தே சென்றனர்; மலரினும் மெல்லிதான உள்ளத்தைத் திறம்பட வெளிப்படுத்திய சிற்பிகளின் திறமையைப் புகழ்ந்து கொண்டே ஒவ்வொரு சிலையாகப் பார்த்தனர். ஒன்றைவிட ஒன்று மேம்பட்டது என்றே தோன்றிற்று. அருளின் தீந்தேன் நிறைந்து வழியும் அந்தப் புத்த அமுது ஒவ்வொரு சிற்பியின் படைப்பிலும் நிறைந்திருந்தது.

அந்த மன்றத்தில் ஒரே குறை: அவன், புகழ் பெற்ற-அந்தச் சிற்பியின் சிலைமட்டும் அங்கே இல்லை.

ஏன் என்று ஒருவருக்கும் தெரியவில்லை. கடைசியில் மன்னவன் தன் ஏவலரைச் சிற்பியிடம் அனுப்பினன்.

அவர்கள் வந்து சொன்ன செய்தி மன்னனைத் திடுக்கிடச் செய்தது.

அவனே நேரே போய்ப் பார்த்துவரப் புறப்பட்டான். மன்னனுடன் வயது முதிர்ந்த அமைச்சரும் சென்ருர்.

சிற்பியின் வீட்டை அடைந்தனர். அவனுடைய கலைக் கூடத்தை நாடிச் சென்றனர்.

அந்தக் கூடத்தில் புத்தர் பெருமான் சிரங்கள் பல உருண்டு கிடந்தன. அருளொழுகும் வதனங்கள்—முடி தரித்த புத்தரின் திருவுருவங்கள்.

அவை ஒரு விளக்கமும் தரவில்லை. சிரசில்லாமல் பல உருவங்கள் அங்கே நின்றன. அந்த உருவங்கள் மன்னரின் கோலத்தில் அமைந்திருந்தன.

அரசனும் அமைச்சரும் கூடம் முழுவதும் சுற்றிப் பார்த்தனர். இதே மாதிரியான பல முண்டங்கள்—பல தலைகள்.

ஒரு மூலையில் சிற்பி மனமிடிந்து அமர்ந்திருந்தான். அரசன் வந்தது அவனுக்குத் தெரியாது; அமைச்சர் வந்ததும் தெரியாது.

அவனைத் தன் நினைவுக்குக் கொண்டுவர அமைச்சர் வெகு பாடு படவேண்டி யிருந்தது. அவன் முனகியதி லிருந்து வந்தவர்கள் தெரிந்து கொண்டது இதுதான் :

புத்தர் பெருமான் அரச போகத்தில் இருந்தபோது எவ்வாறு தோற்ற மளித்திருப் பாரோ என்ற எண்ணத்தைச் சிலையாக வடிக்க அவன் பல முறை முயன்ருன்.

ஆடை அணிகளால் மன்னராக ஆக்க முடிந்ததே ஒழிய, முகத்தில் அருள் பொழிய வாழ்ந்த புத்தரை, அரச போகத்தில் ஆழ்ந்த செல்வராகக் காட்ட அவனல் முடியவில்லை. ஒவ்வொரு முறையும் அரச கோலத்திலிருந்த ஒரு முனிவர் பெருமானைக் கண்டானே ஒழிய, தான் கற்பனை செய்துவைத்திருந்த அரச மகனைக் காண முடியவில்லை.

கடைசியில் என்ன? அவனுக்குத் திருப்தி யில்லை ; அவன் மனம் அமைதியடையவில்லை.

அமைச்சர் அரசனிடம் சொன்னர் : “புத்தர் பெருமான் பிறந்தபோதே புத்த ராகத்தான் பிறந்தார். சித்தார்த்தராக வளர்ந்த போதும் புத்தராகத்தான் வளர்ந்தார். அவர் அரசபோகத்தில் தம்மை மறந்து ஈடுபட்டு மூழ்கிப்போய் என்றுமே வாழ்ந்ததில்லை. கலை, என்றும் உண்மை யில்லாததைப் படைத்துவிட முடியாது. இல்லாததைப் படைக்க முயன்ற சிற்பி தோற்ருன் ; இவன்தான் சரியான

கலைஞன். ஏனென்றால் என்னதான் வலிய முயன்றும் உண்மையையே அவன் கைத்திறன் வெளிப்படுத்திற்று."

அமைச்சர் சமாதானம் கூறினர்; அரசன் ஏற்றுக்கொண்டான். ஆனல், சிற்பிக்கு இவர்கள் பேச்சு ஒன்றும் தெரியாது. அவனைப் பொறுத்தவரையில் தோற்றுவிட்டதாகத்தான் முடிவு செய்துவிட்டான். உளியைக் கையிலெடுத்த நாள் முதலாகத் தோல்வியை அறியாதவன் தோல்வியின் முதற் காட்சியால் சிலையாய்ச் சமைந்துவிட்டான்.

# சோறு போடும் சாமி

இராமன், பண்ணையார் வீட்டுத் தோட்டக்காரன். அவனைப் போல இன்னும் ஐந்து பேர் தோட்டத்தில் வேலை பார்க்கிறார்கள். சம்பளம் நான்கு ரூபாய். அவனுடைய மனைவி செல்லம்மாள் யாரோ ஒரு பெரிய மனிதர் வீட்டில் மேல் வேலைகளைப் பார்த்துவருகிறாள். அவளுக்கு மாதம் இரண்டு ரூபாய் கொடுக்கிறார்கள். இவர்களிருவருக்கும் அருமையாகப் பிறந்த பையன் வேலையா; அவனுக்கு வயது நான்காகிறது. இந்தக் குடும்பத்தின் மொத்த வரும்படி ஆறு ரூபாய். அவர்களுடைய வாழ்க்கை எப்படிக் கழியுமென்று பார்த்துக்கொள்ளுங்கள்.

செல்லம்மாள் தெய்வ பக்தி மிகுதியாக உடையவள். நாள்தோறும் விளக்கேற்றி வைத்து

வணங்குவாள். 'என்றைக்காவது சீதேவி கண்ணைத் திறந்து பார்க்கமாட்டாளா' என்று அவள் அடிக்கடி சொல்லிக்கொள்வாள். அவளுடைய ஆசையெல்லாம் அருமையான பிள்ளை வேலையன் துன்ப மில்லாமல் வளர்ந்து படித்துவிட வேண்டும். படித்துவிட்டால் சம்பாதிக்க ஆரம்பித்துவிடுவான். பிறகு கவலை ஏது........?

தினமும் தன் தாய் விளக்கைக் கும்பிடுகிறது எதற்காக என்று வேலையனுக்குத் தெரிந்துகொள்ள வேண்டு மென்று ஆவல். வெளிச்சங் கொடுக்கிற விளக்கைக் கும்பிடுவதன் அர்த்தமே அவனுக்கு விளங்கவில்லை போலும்!

"ஏம்மா, தினமும் விளக்கைக் கும்பிட வேணும்? பெரியவங்களைக் கும்பிட்டா 'நல்லாயிருக்கணும்' என்ருவது சொல்வாங்க. விளக்கைப் போயி யாராவது கும்பிடுவாங்களோ?"

"அடே வேலையா, அப்படியெல்லாம் சொல்லாதேடா கண்ணு. அது வெறும் விளக்குன்னு நெனச்சிக்கிட்டிருக்கே! சாமிடா! இப்படியெல்லாம் சொன்னல் கோவிச்சுக்குண்டா!"

"கோவிச்சுக்கிடுமா? விளக்கா கோவிச்சுக்கிடும்?........"

"வெளக்கில்லேடா, அது சாமிடா, சாமி. நாமெல்லாம் தினந்தினம் கும்பிட்டமின்ண

நமக்கு வேண்டிய தெல்லாம் கிடைக்கும். அதுக்குத்தாண்டா நான் தினந் தினம் விளக்கு லச்சுமியைக் கும்பிடுகிறேன்."

" ஆமா, நமக்கு வேணுமிங்கிற தெல்லாம் குடுக்கு மிண்ணயே. இந்தச் சாமி நமக்கென்ன குடுத்திருக்கும்மா ?"

" நமக்குக் கிடைக்கிறதெல்லாம் சாமி கொடுத்ததுதாண்டா, கண்ணு. சாமி யில்லே யிண்ணு சாப்பாடு கிடைக்குமா? நம்ம சாப் பிடுற கஞ்சி யெல்லாம் இந்த லச்சுமி யாத்தா கொடுத்ததுதானே ?"

" ஆமாம்மா, இந்தச் சாமி நமக்குக் கஞ்சி கொடுத்தா, பெரிய வீட்டிலே எந்தச் சாமியம்மா சோறு கொடுக்குது? நாம்கூட அந்தச் சாமியைக் கும்பிட்டா நல்லதில்லேயா 'ம்மா? அவங்க வீட்டிலே யெல்லாம் மேலேருந்து தொங்குற வெளக்கைத்தாம்மா பார்க்கிரோம். அதைத்தான் கும்பிடுவாங்க போலிருக்கு! பள பளண்ணு வெள்ளேயா இருக்கும்மா—கண்ணுடி யாம் அவ்வளவும்...........அப்பாகிட்டச் சொல்லி அது மாதிரி வெளக்கு நம்ம வீட்டிலேயும் வாங்கி வைச்சுட்டா அந்தச் சாமியைக் கும்பிடலாமே யம்மா. அப்புறம் தினம் சோறு சாப்பிடலா மில்ல................"

" சரிடா கண்ணு, அப்பா வர நேரமாச்சு. கொஞ்சம் படுத்திரு. நான் போயிக் கஞ்சி காய்ச்சிவிட்டுக் கூப்பிடுறேன். சாப்பிடலாம்...."

குழந்தை வேலையன் மனம் என்னென்ன எண்ணங்களை யெல்லாமோ எண்ணியது. கஞ்சி கொடுக்கிற சாமி, சோறு கொடுக்கிற சாமி, காப்பி கொடுக்கிற சாமி..........இப்படி எத்தனையோ சாமிகளை அவன் மனம் படைத்து விட்டது. சாமியைப் பற்றி அந்தக் குழந்தை மனத்தில் பதிந்துவிட்ட எண்ணம் பலவிதக் கற்பனைகளை உண்டாக்கிவிட்டது. எத்தனையோ பல புதுக் கேள்விகளும் எழுந்தன. ஏன் ஒரே சாமியாக இருக்கக்கூடாது? எல்லாச் சாமியும் ஒன்ருக இருந்தால் எல்லோரும் ஒரே மாதிரி யாகச் சாப்பிடலா மல்லவா? அன்றைக் கொருநாள் பண்ணையார் வீட்டுப் பையன் என்னென்னமோ தின்பண்டங்களைத் தின்ருனே.... ....அந்தத் தின்பண்டங்களைக் கொடுக்கிற சாமி எது? அதை ஏன் தானும் கும்பிடக் கூடாது? ........இப்படியாக எத்தனையோ கேள்விகள்.

செல்லம்மாளால் குழந்தையின் கேள்வி களுக்கு விடை சொல்லி முடியவில்லை. வேலை யிலிருந்து வீட்டுக்கு வந்த இராமனையும் வேலை யன் விடவில்லை. இராமனுக்கு இந்த மாதிரி யான புதுச் சாமிகளைப்பற்றிக் கேட்பதே புதிதாக இருந்தது. என்னவென்று அவனுக் குப் புரியவில்லை.

"என்னடா கண்ணு, கஞ்சிச் சாமி, காப் பிச் சாமி.......இப்படி யெல்லாம் யாருடா சொன்னது?"

"அம்மாதானே சொன்னுங்க. வெளக்கை ஏன் கும்பிடணுமிண்ணு கேட்டேன். அந்த வெளக்குத்தான்⋯ நமக்குக் கஞ்சி ஊத்துற சாமிண்ணு சொன்னுங்க. நம்ம வீட்டிலே கஞ்சிண்ணு, பெரிய வீட்டிலே சோறுதானே'ப்பா சாப்பிடுருங்க? அப்படிண்ணு அவங்க சாமி சோறு போடு'ற சாமி தானப்பா?"

"அடடே, அப்படியா செய்தி........சரிதான். அப்படி யில்லேடா கண்ணு. ஒரே சாமிதாண்டா எல்லாருக்குமா இருக்காரு. அவரு இல்லேண்ணு எங்கேயும் வயித்துக் கில்லாமல் திண்டாட வேண்டியதுதான்......."

"என்ன'ப்பா—நீ கூடப் பொய் சொல்றே? ........ஒரு சாமிதான் இருக்குண்ணு எல்லாருக்கும் சோறு போடாதா'ப்பா? எனக்குச் சோறு தான் சாப்பிட ஆசையாயிருக்கு. பெரிய வீட்டிலேமட்டும் சோறு; நம்ம வீட்டிலே கஞ்சி.... ....அப்படிண்ணு எப்படி ஒரு சாமிதான் இருக்கும்?"

இராமனுக்கு என்ன வகையாகக் குழந்தைக்குப் பதில் சொல்வதென்று தெரியவில்லை. உலக நடப்புக ளெல்லாம் குழந்தைக்குத் தெரியுமா? உழைத்து வந்த அவனுக்கு வேலேயனுடைய அறிவைக் கண்டு மகிழ முடிந்ததே தவிர, விடை கூறிச் சமாதானப் படுத்துவதென்பது முடியாத காரிய மாகிவிட்டது. ஆனலும் என்னென்னவோ சொல்லிப் பார்த்

தான். ஒன்றும் முடியாமல் கடைசியாக வேலையனைப் பார்த்து, "சரி'டா, கண்ணு, உனக்கு இப்ப என்ன வேணுங்கிறே....? அப்பாவுக்குத் தூக்கம் வந்திருச்சு...."

"என்ன'ப்பா, நீ எப்படியானுப் போ. நாளைக்கு வர போது சோறு போடுற சாமியை வாங்கிக்கிட்டு வா. கஞ்சி ஊத்துற சாமி நமக்கு வேண்டவே வேண்டாம்......."

நாளைக்குப் படும் பாடு அப்புற மிருக்கட்டு மென்று இராமன் 'சரி' என்று சொல்லிவைத்தான். வேலையன் இரவெல்லாம் சோற்றுச் சாமிக் கனவையே கண்டுகொண் டிருந்தான். கூரை வீட்டின் நடுவில் கம்பி வழியாகத் தொங்குகிற மின்சார விளக்குகள் எத்தனையோ அவன் கனவுகளில் வந்தன. அவைதாம் அவனுக்குச் சோறு போடுகிற சாமிகள்!

# சமூகக் கட்டு

ஜமீன்தார் சாகேப் ஆழ்ந்த யோசனையில் ஈடுபட்டார். ஒரு நாளாவது சிந்தனையில் ஈடுபடாத அவருக்கு அன்றைய அனுபவம் புதிதாக இருந்தது. கையிலிருந்த கடிதம் அவரை மேன் மேலும் சிந்திக்கத் தூண்டியது. கடிதத்தை எழுதிய நங்கையிடம் அவர் கொண்டிருந்த உண்மையான காதல் அச் சிந்தனைக்கு ஓர் எழுச்சியை ஊட்டிற்று. என்னதான் தூண்டுதலும் எழுச்சியும் இருந்தாலும் அனுபவம் புதிதல்லவா? பணம் இருக்கிற இடத்தில் சிந்தனைக்கு என்ன வேலை? பணத்தை வாரி இறைத்தால் பணக்காரனுக்காக அறிவை அடகு வைக்க அறிஞர்கள் காத்திருக்கிறார்கள். எனவே, ஜமீன்தாருக்கு அன்றைய அனுபவம்

புதிது ; முதன்முதலாக ஏற்படுவது. தம் வாழ்க்கையைப்பற்றித் தாமே சிந்திக்கவேண்டிய கட்டாயம் ஏற்பட்டுவிட்டது. தீவிரமாக எண்ணினர் ; மிகத் தீவிரமாக எண்ணினர். மனத்தை ஒருமுகப்படுத்தி எண்ணிவிட முயன்றார்.

* * *

அவன் தெருவழியே நடந்து போய்க் கொண்டிருந்தான். எந்த ஊரில் இருக்கிறேம் என்றுகூட அவனுக்குத் தெரியவில்லை. ஆனல், ஏதோ பழக்கமான ஊர்போலவும் தோற்றுகிறது. தெருவழியே போவோர் வருவோர் எல்லோரையும் வியப்போடு பார்த்தான். ‘சுத்தக் கர்நாடகங்கள்’ என்று அவர்கள் கோலத்தைப் பற்றி எண்ணினன். ஆனலும் அந்தக் கர்நாடக உடை தனக்குப் பழக்கமானது போலவும் உணர்ந்தான். மாடமாளிகைகள் நிரம்பியிருந்தன. அவையெல்லாம் ஏதோ ஒரு புதுமையாகத் தென்பட்டாலும் எங்கோ பார்த்திருக்கிறேமே என்று எண்ணினன்.

திடீரென்று ஒரு யானை வருவதைக் கண்டான். அதன்மேல் ஒருவன் அமர்ந்து பறை அறைந்துவந்தான். அவனுக்குப் பின்னல் இருந்த ஒருவன் ஏதோ ஒன்றைக் கையில் வைத்துப் படித்தான். பறை ஓசை கேட்டதும் தெருவில் சென்ற மக்கள் எல்லோரும் நின்றனர். செய்தியைப் படித்தவுடன் அவர்கள் யாவரும் ஒருமுறை தலையை வளைத்து வணக்கம் செலுத்தி

விட்டு மேலே சென்றனர். 'இது என்ன'டா, புதுமாதிரியாக இருக்கிறது! என்னவென்று தான் கேட்கலாமே ' என்று எண்ணி, பக்கத்தில் சென்ற ஒருவரை அணுகினன். "யானை மேலிருந்து என்ன படிக்கிருன்? நீங்களெல்லாரும் ஏன் பணியவேண்டும்?" என்று கேட்டான்.

"என்ன, ஐயா ஊருக்குப் புதியவர்போலிருக்கிறது. அவர்தாம் அரண்மனை வள்ளுவர். இன்னும் இரண்டு நாட்களில் இளவரசருக்குச் 'சின்னப் பட்டம்' சூட்டப் போகிருர்கள். அதைத்தான் அறிவித்தார். அரண்மனை அறிவிப்பைக் கேட்டால் அதற்கு மரியாதை செலுத்த வேண்டாமா? அதற்காகத்தான் தலை வணங்குகிருேம்.......அது சரி. தாங்கள் யார்?"

"நானும் இந்த ஊர்தான்......."

"என்னமோ!? ம்ம்....ன்" என்று சொல்லிக் கொண்டே வழிப்போக்கர் நடையைக் கட்டினர்.

அவனுக்கு ஒரே வியப்பு. "நம் ஊரில் நடக்கிறவையே நமக்கு விளங்கவில்லையே! சரி, அந்த அரசனையும்தான் பார்த்துவிடுவோமே" என்று முடிவுகட்டினன். அரண்மனைக்காக அவன் ஒன்றும் நடந்து அலுக்க நேரவில்லை. திரும்பிப் பார்த்தான்; அரண்மனை!

நேரே உள்ளே நுழைந்தான். அவனை யாரும் கவனித்ததாகவே தெரியவில்லை. "நல்ல காவல்! நுழைவதைப் பார்த்தும் தடுக்காமல்

இருக்கிறார்களே!" என்று வாய்விட்டுச் சொல்லிக்கொண்டே உள்ளே போனான். அப்போது கூட அவனை யாரும் தடுக்கவில்லை. அவனுக்கு ஒரே வியப்பு! 'இப்படியும் இருப்பார்களா' என்று ஒரு கேள்வி எழுந்தது. 'ஒருவேளை உள்ளே........ஏதாவது ஆபத்து ஏற்படலாம். அதனால்தான் இவர்கள் தடுக்கவில்லைபோலிருக்கிறது' என்ற எண்ணம் உதித்தது. அதன் விளைவாக அச்சம் அவனைக் கௌவிக்கொண்டது. இருந்தாலும் மறைந்து மெல்ல மெல்ல.... உள்ளே, உள்ளே.......போனான். உள்ளே என்றால், நேரே அந்தப்புரத்துக்கே போய்விட்டான். அதுவரையிலும் ஒரு தடையும் நேரவில்லை என்ற ஒரு காரணமே அவனுக்கு எல்லையில்லாத வெருட்சி அளித்தது. கடைசியாக ஒரு பரண்மேல் அமர்ந்துகொண்டான். எப்படித் தான் பரண்மேல் ஏறினான் என்று தெரியவில்லை. அவனுக்கு உதவியாக மெத்தை தலையணையெல்லாம் யார் போட்டார்கள்?........ ஒன்றும் புரியவில்லை.

இருந்தாற்போலிருந்து வீணை இசை அவனை ஈர்த்தது. குனிந்து பார்த்தான். அந்தணர் ஒருவர் வீணையை மீட்டினார். அழகாக மீட்டிப் பாடினார். அவனுக்குத் தூக்கம்கூட வந்தது. அவ்வளவு இனிமையாக இருந்தது, வீணை இசை. தூக்கத்தை அடக்கிக்கொண்டு, என்னதான் நடக்கிறது என்று கவனித்தான். அந்த இசைக் கலைஞருக்கு எதிரே அசையும்

சதைப் பிண்டமாக ஓர் உருவம் இருந்தது. அந்த உருவத்துக்கு நடந்த மரியாதையிலிருந்து அது அரசியின் திருவுருவம் என்று முடிவு செய்தான். இசைக் கச்சேரி நடந்தபோது மன்னன் வந்து சேர்ந்தான். அவனுடைய வருகையை அரசி விரும்பவில்லை. தன் வெறுப்பை வெளிக்காட்ட அவள் தயங்கவில்லை. எரிந்து விழுந்தாள்; வாய் வழியாக நெருப்பைக் கக்கினாள். பரண்மேல் இருந்தவனுக்கு இதில்மட்டும் வியப்பே தோன்றவில்லை. தனக்கு மிகவும் அனுபவமான நிகழ்ச்சி போலவே அவனுக்குப் பட்டது. உள்ளே வந்த மன்னனுக்கும் நடந்த நிகழ்ச்சி வெறுப்பையோ வியப்பையோ ஊட்டவில்லை. பொறுமையாக நின்று பார்த்தான். அரசியின் வடிவிலிருந்த ஆங்காரியின் ஆத்திரம் வடிவதாகக் காணோம். 'சரி, இது வழக்கம்தானே' என்று சொல்லுவது போல ஒரு வகையான விகற்பமும் இல்லாமல் வந்த வழியே திரும்பினான். பரணில் இருந்தவனுக்கு ஒரே மகிழ்ச்சி! என்னவோ தெரியவில்லை. உடனே பொத்தென்று கீழே குதித்தான். ஒருவரும் அவனைக் கவனிக்கவில்லை. மன்னனைப் பின்தொடர்ந்தே சென்றான்.

மன்னன் அரண்மனையை விட்டு வெளியேறினான். அவனும் கூடவே பின்தொடர்ந்தான். திடீரென்று ஒரு பெரிய மாளிகைக்குள் மன்னன் நுழைந்தான். அவனும் உள்ளே போனான். மன்னனைப் பல பெண்டிர் வணங்கி

வரவேற்றூர்கள். அவனைமட்டும் யாரும் கவனித்த தாகவே தெரியவில்லை. இந்த மாளிகை திடீ ரென்று எப்படி வந்தது? இந்தப் பெண்களெல் லாம் யார் ?—இப்படியாகப் பல கேள்விகள் அவன் மனத்தில் எழுந்தன. ஆனால், விடை தெரியவில்லை. அதற்குள், அதோ, யாரது? அவளை எங்கோ அவன் பார்த்திருக்கிறானே! யாரது? யார்? ம்ம்........யாரது?

மன்னனை நெருங்கினள். கரங்களோடு கரங்கள் சேர்த்து வரவேற்றாள். உள்ளே அழைத்துச் சென்றாள். அவன் உள்ளே போக விரும்பவில்லை. வெளியே நின்றுவிட்டான். பேச்சுக் குரல் கேட்டது. கேட்டான்.

"மகாராஜா! ஒரு கேள்வி கேட்கலாமா?"

"உனக்கு இல்லாத உரிமையா? தயக்கம் எதற்கு?"

"இல்லை, ஒன்றுமில்லை.......சும்மாதான்?"

"போடி பயித்தியமே! சும்மாவாவது சுமந்துகொண்டாவது! என்ன வேணுமோ கேள்."

"இளவரசுப் பட்டம் சூட்ட நாள் முடிவா யிற்று என்று கேள்விப்பட்டேன்........அது தான், வேறொன்றும் இல்லை........"

"என்னமோ இழுக்கிறாயே? மனத்தில் உள்ளதைச் சொல்லு. மறைப்பு எதற்கு? என்னிடத்தில் எதற்காக மறைக்கவேண்டும்? ஏன் நீயும் விழாவுக்கு வரவேண்டுமா?........"

"ஐயையோ! நானாவது அரண்மனைக்கு வருவதாவது! எங்களுக் கெல்லாம் அங்கே இடமேது? அப்படி நான் ஒன்றும்........"

"பின்னே என்னதான் கேட்க நினைக் கிறாய்? கேட்டுத் தொலையேன். அர்த்தமற்ற விளையாட்டுக்காகவா இங்கே நான் வருகிறேன்?"

"கோபமே வந்துவிடும்போ லிருக்கிறதே! இப்போதே இவ்வளவு கோபமென்றால் நான் நினைத்த கேள்வியைக் கேட்டுவிட்டால்........"

"இதோ பார்....அப்படியெல்லாம் நான் ஒன்றும் முட்டா ளல்ல. சும்மா கேள்."

"சரி கேட்கிறேன். என்ன ஆனாலும் சரி........உங்கள் இளவரசன் இருக்கிறானே, இன்பவேலன், அவன் பிறப்பைப்பற்றி என் னென்னவோ பேசிக்கொள்கிறார்களே, அதெல் லாம் மகாராஜா சமூகத்துக்குத் தெரியுமோ?....

"தெரியுமோ என்ன? எனக்கும்தான் அந்தச் சந்தேகம் உண்டு. நான் என்ன பண்ண லாம்? எல்லாம் நாம் நினைத்தபடியா நடக்கிறது? உன் மகன்........"

வெளியே இருந்த அவனால் அவ்வளவுதான் கேட்க முடிந்தது. பிறகு ஒன்றும் கேட்கவில்லை. தூக்க மயக்கம்.

விழித்துக்கொண்டபோது மன்னன் புறப் பட்டுக்கொண் டிருந்தான். அரசன் வாசலைத்

தாண்டிய பிறகு அவனும் அடித்துப் புரண்டு எழுந்து ஓடினான். அவன் வெளியே போகுமுன் ஒரு பணிப்பெண் அவனிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்தாள். "பாவம், பயித்தியக்காரி! என்னை அரசன் என்று நினைத்துத்தான் கொடுத்து விட்டாள். என்ன எழுதியிருக்கிறது பார்க்கலாம்" என்று கடிதத்தைப் பிரித்தான். படித்துக் கொண்டே நடந்தான். அதற்குள் வாயிற்படி தடுக்கிற்று. விழுந்து விட்டான்........

* * *

ஜமீன்தார் சாகேப் விழித்துக்கொண்டார். சிந்திக்கத் தொடங்கினவர், பாவம், தூங்கி விட்டார். கையிலே ஒரு கடிதம் இருந்தது. அதைப் படித்தார் :

ஜமீன்தார் சாகேப்!

திருவடிகளுக்கு வணக்கம். உயில் எழுதப் போவதாகக் கேள்விப்பட்டேன். இதுவரை இல்லாத உரிமை இனிமேல் புதிதாக வரப் போவதில்லை. இதுவரை இருந்த உரிமையை இனிமேல் என்னிடம் பறிப்பாரும் இல்லை........ என்னவோ எழுதத் தோன்றுகிறது. எழுதுகிறேன். மன்னிக்கவேண்டும்.

என்னதான் காதலுக்கு உறைவிடமாய் இருந்தாலும் வைப்பாட்டி வைப்பாட்டிதான். என் வயிற்றில் உதித்த குழந்தைக்கு உரிமை நல்கச் சமூகச் சட்டம் மறுக்கிறது.

மனைவியிடம் அன்பில்லாமல் இருக்கலாம். மனைவி என்ற ஒரு காரணத்தினாலேயே அவள் பெற்றெடுத்த குழந்தைக்கு உரிமை கிட்டுகிறது.

என் வயிற்றில் தோன்றிய கரு தங்கள் விளைவாய் இருந்தாலும் 'வேசி மகன்' என்று தான் முடிகிறது.

அவள் குழந்தையோ தோற்றம் எப்படியிருந்தாலும் 'ஜமீன்தார் பையன்' என்றுதான் முடிவாகிறது.

கணிகையின் குழந்தை உள்ளன்பின் விளைவு; ஊனமில் பிறவி. ஆனால், உரிமை இல்லை.

மனைவியின் குழந்தை மனை வாழ்க்கையின் விளைவு; மனக் குறைவின் புறத்தோற்றம். ஆனால், உரிமை பெற்றுவிடுகிறது.

என்ன செய்யலாம்? என் காதலருக்கு ஆண்மை இல்லை. அவள் கணவருக்கு உரிமை இல்லை. சமூகக் கட்டு நாசமாகும் காலம் எப்போதோ, தெரியவில்லை.

தாய்மையால் வருந்தும் அடியாள்

**காமவல்லி**

கடிதத்தைப் படித்தார். சிந்திக்க முயன்றார். பாவம்! அந்தப் பிறவிக்குச் சிந்தனை என்ற ஒரு சரக்கு ஏது?

# வாழ்க்கைத் துணை

## 1

தன்னம்பிக்கையின் உச்ச நிலை. நல்ல இளம் பருவம். வாலிபத்தின் மிடுக்கு, சக்திப் பெருக்கத்தின் துடிப்பு, வலிமையின் புகலிடம்-இவை யாவும் களிநடம் புரிகின்ற கட்டுடல். இளமையும், வலிமையும் ஒருங்கே பிணைந்துள்ள என் வாழ்க்கையில் தன்னம்பிக்கை தோன்றியதில் வியப்புக்கு இடம் ஏது?

தளர்ந்து தள்ளாடி, கூனிக் குறுகி, கோலும் கொம்பும் துணையாகப் பலர் என் முன்னே-நெடுந் தொலைவிலே போவதைப் பார்க்கிறேன். சீச்சீ என்ன கேவலம்! மனிதத் தன்மையின் மாசு தாம் அந்த வடிவங்கள். தன்னம்பிக்கையை இழந்துவிட்டால் அந்தக் கதிதான்!

என்னை நானே ஒரு முறை பார்த்துக் கொண்டேன். இரங்கத் தக்க அந்த ஜீவன்களை மீண்டும் ஒரு முறை பார்த்தேன். என்னைத் திரும்பவும் ஒரு தடவை பெருமிதமாகப் பார்த்துக்கொண்டேன்.

பரம திருப்தி, எல்லையில்லாத தற்பெருமை, தன்னம்பிக்கை—இவை என் உடம்பின் நாடி நரம்பு ஒவ்வொன்றிலும் நிறைந்திருந்தன. ஒவ்வோர் உறுப்பின் துடிப்பும் இயக்கமும் தன்னம்பிக்கையைத்தான் விளக்கம் செய்துகொண்டிருந்தன.

அந்தக் காலத்தில் என் வாயுரைகளெல்லாம் தன்னம்பிக்கை என்ற ஒரு சொல்லாலாகிய சூத்திரத்துக்கு விரிவுரை செய்யவே பிறந்தன.

மற்றவர்கள் தன்னம்பிக்கையை இழந்து, பிறர் உதவியையும் நாடித் தம் மானத்தை இழந்து — ஐயோ — அதை விவரிப்பானேன்? பாவம், இரங்கத் தக்க ஜீவன்கள்.

ஆண்மை! அதன் வலிமைதான் எவ்வளவு! தன்னம்பிக்கை என்பதற்கு வேறு சொல்தான் ஆண்மை என்பது. தன்னம்பிக்கைக்கு ஓர் உருவம் கொடுத்தால் அது ஆணுகத்தான் அமையும்.

வாழ்க்கைப் பயணம். அது என்ன, பெரிய காரியம்! என்னென்னவோ பயங்கரமாக விவரித்திருக்கிறார்களே! சுத்த அசட்டுத்தனம். கவிகளும்

இந்த அசட்டுத்தனத்துக்கு இரையானவர்கள் தாமே! தன்னம்பிக்கை இல்லாவிட்டால் கவி ஞர்களும் எனக்கு வேண்டாம்!

வாழ்க்கைப் பயணத்தை நினைத்து நான் ஏன் பயப்படவேண்டும்? வாழ்க்கை உல்லாசம் நிறைந்தது. கவலை யற்றது; நேரே நெடிதாகச் செல்லும் ஒரே வழிதான்.

துள்ளலாம், குதிக்கலாம்; ஆடலாம், பாட லாம்; ஆக்க வேலைகள் நிறையச் செய்யலாம்; ஆகாத காரியங்களை அடியோடு அழிக்கலாம். எதற்கும் தன்னம்பிக்கை வேண்டும். அது இல்லாமல்தான் அதோ அந்த ஜீவன்கள் தளர்ந்துவிட்டன! ஐயோ பாவம்.

நான் இளைஞன்; வலிமை இருக்கிறது. தன்னம்பிக்கை நிறைய இருக்கிறது - ஏன் - தன் னம்பிக்கைதான் நான். என்ன செய்யவேண்டு மானாலும் செய்வேன். எனக்கு ஒருவர் தயவும் வேண்டாம். வாழ்க்கை என்ற இந்தக் குளிர் பூஞ் சோலையில் நான் தனியரசு செலுத்துவேன். எனக்கு ஒருவர் தயவும் வேண்டாம்.

இளமை, என் அமைச்சு; வலிமை என் தோழன். தன்னம்பிக்கை என் அழியாப்படை; அமரப்படை. நான் மன்னன்.

## 2

இளமை என் அமைச்சு. ஆம். உண்மை தான். ஆனால்....

அவன் புதுப்புது ஆலோசனைகள் சொல்ல ஆரம்பித்துவிட்டான்.

மன்னர் மன்னனாக நான் இருந்தும் என்ன பயன் என்று கேட்கவும் துணிந்துவிட்டான்.

தோழன் — என் இனிய பாங்கன்— வலிமை—அவனும் தளர்ச்சி யடைந்துவிட்டான்.

"ஏனடா இப்படி" என்று கேட்டால், "என்ன செய்யட்டும்" என்று கையை அகல விரித்து உதட்டை நீளமாகப் பிதுக்குகிறான்.

அந்த அமரப் படை, அழியாப் படை—அது எங்கே போயிற்றோ? தெரியவில்லை. தன்னம்பிக்கை எங்கே?

இருக்கிறது, இருக்கிறது. எங்கும் போய் விடவில்லை. என்னிடம்தான் இருக்கிறது. ஆனால் என்ன செய்ய?

முடங்கிக் கிடக்கும் சிங்கம், கூரிழந்த ஈட்டி, மையற்ற பேனாவாக என் படை செயலற்றுக் கிடக்கிறது.

வேலைசெய்ய முடியாத எழுத்தாளனுக்கே காப்பி வேண்டும். எழுச்சி இருந்தால் தன்னம்பிக்கை வேலை செய்யும்.

ஆனால், எழுச்சிக்கு மருந்து எங்கே? அது தான் தெரியவில்லை.

என்னவோ ஒன்று....அது என்ன....அது தான் தெரியவில்லை. ஆனல்....

அது இல்லாமல் என் வாழ்க்கை இல்லை. ஒரு பெருங்குறை, வெட்ட வெளி—இருக்கிறது. வெளியை நிரப்ப ஒன்று—குறையை நீக்க ஒரு நிறை—வேண்டும்.

அது எது? எங்கே கிடைக்கும்?

அமைச்சா! என்ன பதில்? அரசு நடக்க வேண்டுமே! என் வலிமை பாழாகிறதே! தூசு படிந்து துருப்பிடிக்கவா என் படைகள்?

மற்றவர் துணை எனக்கு எதற்கு என்ற என் பழைய கேள்வி என்னை இப்போது அரிக்கிறது. என்னல் ஒன்றுமே முடியவில்லை.

ஐயோ, இன்னும் நெடுந்தொலை போக வேண்டுமே!

## 3

குறை இருக்கிறது என்ற உணர்ச்சி ஏக்க மாக மாறிவிட்டது. ஏக்கம், தவிப்பு, பரித விப்பு—இதுதான் என் வாழ்க்கைத் திட்டமாகப் போயிற்று.

உடலிலே சோர்வு, உள்ளத்திலே சோர்வு. என்னுள் இருந்த சோர்வு பெருகியது. எங்கே பார்த்தாலும், எதைப் பார்த்தாலும் ஒரே சலிப்புத்தான்.

எனக்கு இனிய கம்பனில் சலிப்புத் தட்டிற்று. வள்ளுவரும்கூட என் பக்கம் நெருங்கவில்லை ; நான் அவரை நெருங்க விரும்ப வில்லை ; விரும்பவில்லை என்பதென்ன, விரும்ப முடிய வில்லை....என்னையே நான் விரும்பவில்லை.

உள்ளத் தளர்ச்சிக்கு என் உடல் பணிந்தது. பழைய காட்சி என்முன் வந்தது. அந்தப் பழைய தளர்ந்து தள்ளாடும் ஜீவன் களைக் கண்டேன். எனக்கு ஒரே குழப்பமா யிருந்தது. அன்று பழித்தேன் ; இன்று, ஏன் பழித்தேன் என்பது தெரியாமல் விழித்தேன். அவர்களுக்குத் தன்னம்பிக்கை இல்லையென்று அன்று பழித்தேன். இன்று என்னுடைய நிலைமை என்ன ?

நான் வாழ்வேனா ?

இந்தச் சந்தேகத்தை நீக்க யாரால் முடியும் ? என்னால் முடியவில்லை. வாழவேண்டும் என்று அன்று விரும்பினேன். நினைத்ததை முடிப்பேன் என்று கோட்டை கட்டினேன்.

கோட்டை இடிந்து விழுந்து பாழ்பட்டுக் கிடக்கிறது. பாழடைந்த சுவர்களி லிருந்து என் னுடைய பழைய ஒலிகள்—தன்னம்பிக்கைச் சூத்திரத்தின் வியாக்கியானங்கள்—எதிரொலி யாக வந்து என் செவிகளில் மோதி மோதி விழு கின்றன. நாதத்துக்கு இனிமையுண்டு, எதி ரொலியில் நயமுண்டு என்றெல்லாம் சொல்லு கிறார்கள். ஈமக்காட்டில் எரிந்துகொண் டிருக்கும்

கொள்ளிகளிடையே நள்ளிரவி லெழுகின்ற நரி களின் ஊளை ஓலத்திலே இனிமை காணும் 'கலைஞர்'கள்தாம் என் வியாக்கியான எதி ரொலிகளிலும் இனிமை கண்டிருக்க முடியும்.

சிற்பி ஒருவன் தன் கற்பனைத் திறத்தினை யெல்லாம் சேகரித்துத் திரட்டி, ஒரே வார்ப்பட மாகச் செய்து இயற்றிய சிலை சிதைந்து விழுந்து, சிதைந்த பிறகும் தன்னைப் படைத்த சிற்பியைப் பார்த்து எள்ளி நகையாடவும் செய் தால் எப்படி இருக்கும்? அப்படித்தான் நான் கட்டிய வாழ்க்கைக் கோட்டையின் பாழ் வெளி யும் என்னைப் பரிகசித்தது.

முடிவுதான் என்ன? எல்லையில்லாத் துன்பமே என் வாழ்க்கையா?

ஐயோ! தளர்ச்சி மேலீட்டால் தண்டூன்றி நடந்தவர்களைக் கேலி செய்தேனே! என் கதி!.

ஒரே முடிவு—சாவு என்னை ஆரத் தழு வாதா!

கூடாது! கூடாது! நான் ஏன் சாக வேண்டும்? தன்னம்பிக்கை இன்னும் இருக் கிறது. சாகவில்லை. வாழ வேண்டும், பணிகள் ஆற்ற நான் வாழ வேண்டும்!

ஆனல்....! அப்படியானல் எனக்கு ஒன்று வேண்டுமே!

............

ஒரு துணை! என்னைப்போலவே தவிக்கும் ஒரு துணை! என்னோடு சேர்ந்து தவிக்க, வாழ, வளர ஒரு துணை—வேண்டும். ஆம்! அதுதான் எனக்கு வேண்டும். என் வாழ்க்கை அரசு செலுத்த ஒரு வாழ்க்கைத் துணை வேண்டும்.

ஆண்மை! ஹூம்....ஆண்மை! ஐயோ! பாவம்! தன்னம்பிக்கை—எவ்வளவு பெற்றும் என்ன?

இளமை—அது எவ்வளவு துடிப்பும் உல்லாசமும் பெற்றதாயிருந்தால்தான் என்ன?

வலிமை—அது தளர்ந்து மறையும் நேரமும் இருக்கிறது. அதுமட்டும் இருந்தென்ன?

துணை---அரசனுக்கு அரசி--ஆண்மைக்குப் பெண்மை—வேண்டும்.

துடிப்பிலே பிணைந்து கிடக்க—தவிப்பிலே சேர்ந்து தவிக்க—இதய ஒலியிலே கலந்து இசைக்க—ஓரொலியாய் இரண்டொலி இழைய ஒரு துணை வேண்டும்.

மருந்து கண்டேன். பிணிக்கு அவிழ்தம் தெரிந்துவிட்டது.

எங்கே எனக்குத் துணை?

என் அமைச்சன் தன் துடிப்புடன் சேர்ந்து தேடினான். என் வலிமைத் தோழன் தன் வனப்புடன் சேர்ந்து தேடினான்.

ஒரே பரபரப்பு. துணை! அரசுக்குத் துணை! ஆண்மைக்குத் துணை!

தன்னம்பிக்கை கொஞ்சம் தலை தூக்கிற்று. நான் கண்ட மருந்து சரிதான் என்ற துணிவு பிறந்தது.

எனக்கொரு துணை—வேண்டும். என் உடல் வாழ, உள்ளம் சிலிர்க்க, உயிர் மலர ஒரு துணை வேண்டும்.

என் துணை—பெண்மையின் அவதாரம், அது எங்கே இருந்தாலும் கண்டுவிடுவேன்?

பிறகென்ன, எனக்கு ஏது குறை!

என் துடிப்பின் வேகத்தில்—விரைந்து சுழலும் சூறுவளியில்—என் இளமை வீசும் வலையில்—என் துணையைக் கண்டுவிடுவேன்.

பிறகென்ன, எனக்கு ஏது குறை?

## 4

**கா**தல்!—இந்தச் சொல்லே எவ்வளவு அழகாக இருக்கிறது! படித்திருக்கிறேன், நிறையப் படித்திருக்கிறேன்.

படித்ததெல்லாம் புரிந்தா படித்தேன்? எத்தனையோ விளங்காத செய்திகள்! அர்த்தம் தெரிந்துவிட்டால் பொருளும் தெரிந்துவிட்டதாகவா ஆகும்! இல்லையே! காதலும் அப்படித் தான்.

இப்போதுதான் காதல் இப்படித்தானிருக்கும் என்று தெரிகிறது. அமைதி நிறைந்த ஓடையிலே ஒரு வெள்ளம். அமைதி நிறைந்த சோலையிலே ஒரு சூருவளி. அமைதி நிறைந்த மனத்திலே ஒரு பெரிய கலக்கம்—இத்தனை கோலாகலங்களுக் கிடையே பிறக்கிறது அந்த எழிற்காதல்.

துணைவேண்டு மென்ற ஒரு வேட்கை, வாழ்க்கை தனித்திருப்பதற் கல்ல என்ற ஒரு ஞானேதயம்—இவை காதலின் வருகையை அறிவிக்கும் தொண்டர்கள்.

என் வாழ்க்கையிலே காட்டாற்று வெள்ளம் வந்தது. சூருவளி சுழித்தடித்தது. வேட்கை முருகி எழுந்தது. ஞானம் உதயமாயிற்று.

அதோ, அடுத்து அவளும் வந்துவிட்டாள். என் அரசி, என் துணைவி. என் ஆண்மை வேட்டெழுந்து, தவித்ததெல்லாம் இந்தப் பெண்மைக்குத்தானே!

என் அமைச்சன், 'அரசி இவளே' என்று அடையாளம் கண்டு சொன்னான். என் தோழன் 'இவள் உனக்கு ஏற்றவள்' என்று கூறினான்.

துடிப்பு, விரைந்து 'இவள்தான்' என்றது. வாலிப உடல், 'இவள்தான் உன்னவள்' என்றது.

அவள் கண்கள் பேசின. ஆமென்றுதான் பேசின. நானும் ஆமென்று நினைத்தேன்.

துணை கண்டுவிட்டேன். வாழ்க்கை வழி; பழையபடி உல்லாசம் நிறைந்ததாகக் காட்சியளித்தது. துள்ளலாம், குதிக்கலாம்; ஆடலாம்; பாடலாம்; ஆக்க வேலைகள் நிறையச் செய்யலாம். ஆகாத காரியங்களை அடியோடு அழிக்கலாம்.

தன்னம்பிக்கை தலையெடுத்தெழுந்து, மூரி நிமிர்ந்தது. எழுந்து வளைந்து ஒரு துள்ளுத் துள்ளிற்று.

என் துணை வந்துவிட்டாள். வாழ்க்கைப் பாதையில் உல்லாசப் பயணந்தான். இனி எனக்கென்ன குறை?

பயணம் தொடங்கிவிட்டது. என் துணையும் நானும் கைகோத்துப் புறப்பட்டோம். மனமும் மனமும், உயிரும் உயிரும் இணைந்து கைகோத்துப் புறப்பட்டுவிட்டதாக ஓர் உணர்ச்சி என் மனத்திலே எழுந்தது.

தென்றல் எமக்கு உபசாரம் செய்ய, தேன் குடித்து இனிய இசை எழுப்பிக் காதலின் புகழை வண்டுகள் பாட....வாழ்க்கை ஒரே இன்பமயம்! வாழ்க்கை ஒரே இணை இன்பம் என்ற வேதகீதத்தைக் குயில்கள் மிழற்ற, எங்கள் வாழ்க்கைப் பயணம் கவிதை இன்பவெறி போலத் தொடங்கி மேலே சென்றது.

துணை கிடைத்த எக்களிப்பிலே நான் என்னை மறந்தேன். ‘பக்கத்தில் என் அரசி’ என்ற நினைப்பிலே என்னைப் பறிகொடுத்தேன்.

வழிநெடுகிலும் நடந்துகொண்டேயிருந் தேன். இன்பமாக இருந்தது. நான் இன்பமாக, இன்பம் நானாக இருந்த நிலை என்பதுதவிர வேறொன்றுமே நினைவில்லை.

அந்த நிலையினைத் துருவித் துருவி ஆராய்ந் தால்—அந்த நிலையினைக் கற்பனை செய்து பார்த் தால்—அந்த இன்ப நிலைக்கெல்லாம் காரணம் அவள்தான்—என் துணைதான் என்பது தெரிந் திருக்கும்.

என் துணைவி—நான்; நான்—அவள்—இருவராலாகிய இன்ப உலகுதான் எங்கெங்கும் பரவி—விண்ணும் மண்ணும் பரந்து—பர வெளி, நிலமகழ்ந்த பாதாளம்—எங்கெங்கும் பரவிக் கிடந்தது.

மண் சுருங்க விண் சுருங்க விரிந்து பரந்து யாவற்றையும் என்னுள் அடக்கிக்கொண்டு நான் காதற் செங்கோல் செலுத்திக்கொண் டிருந்தேன்.

அமைச்சன் மகிழ்ந்தான்; துணைவன் திளைத்தான்; அரசு செழித்தது.

## 5

**நீ**ல வானத்தின் மேற்பரப்பிலே மேலும் மேலும் ஆழ்ந்து செல்லும் வெளியை நோக்கி விர்ரென்று உற்சாகமாக ஒரு புள் பாடிப் பறந்து செல்லும்போது திடீரென்று இரு சிறகும் அற்றுவிட்டால் எப்படி இருக்கும்!

பயணத்தில் லயித்து—இன்ப வெறியிலே திளைத்துச் சென்றுகொண் டிருந்தபோது—ஏதோ கருத்துக் கண்ணுக்குப் புலப்படும் ஒரு மின்னல் என்னை ஊடுருவிச் சென்றது. இருதயம் திடீரென்று மறைந்துவிட்டது போன்ற உணர்ச்சி என்னைக் கவ்விற்று.

என்னவோ என்று ஒன்றும் புரியாமல்—ஆனால், ஏதோ துன்பம் என்ற உணர்ச்சிமட்டுமே என்னை ஈர்க்கப் பழைய உணர்வை அடைந்தேன்.

ஐயோ! எங்கே என் துணைவி? புயலிலே, சூறுவளியிலே, காட்டாற்று வெள்ளத்திலே அசைந்து அலைமோதி மூச்சடக்கித் தேர்ந்தெடுத்த மருந்தல்லவா அவள்!

அவள் எங்கே? இளமைத் துடிப்பின் வேகத்திலே சிக்கிய விண்மருந்து அவள். வனப்பின் வலையிலே அகப்பட்ட பிணைமான் அவள்.

அவள் எங்கே? மனம் இருளில் தோய்ந்தது. மனம் கனம் தாங்காமல் துயர்க் கடலிலே ஆழ்ந்தது.

புற்றரவம் ஒன்று வெளியே வந்து படம் விரித்தாடியது. அட்டா! அந்தப் படந்தான் எவ்வளவு எழில் நிறைந்திருக்கிறது! என் துணைவியின் எழில் இந்த அராவின் படத்திலே இருக்கிறது.

எழில்! அது எங்கே இருந்தால் என்ன! என் துணைவி—என்னைவிட்டுப் பிரிக்கப்பட்டு என்னை நினைந்து எங்கோ ஒரு தன்னந்தனிப் பாறையிலமர்ந்து உருகிக்கொண் டிருக்கும் என் அழகின் ஓவியம்—அவளுடைய எழில்தான் எந்த இடத்திலும் இருக்கும்!

ஆனல்........அவள் இப்போது எங்கே? எங்கே என் பெண்மைச் செல்வம்?

கண்ணைத் துடைத்துப் பார்த்தேன். கண்களைச் செலுத்தித் தூரமாகப் பார்த்தேன். கண்ணுக்கெட்டிய தூரமெல்லாம் அவள் இல்லாததால் பாழ் வெளியாக இருந்ததேயல்லாமல் ஒரு துளி அழகாவது, வாழ்வாவது காணப்படவில்லை.

என் வாழ்க்கையும் பாழ் வெளியாகிவிடுமா? ஐயோ, கண்ணிழந்தான் பெற்றுப் பின்னும் இழந்தான் என்ற கதியா என் கதி?

இன்னும் நெடுந்தொலை போகவேண்டுமே!

மீண்டும் என் நோக்கம் செல்லும் தொலைவுக்குக் கண்ணைச் செலுத்திப் பார்த்தேன். சிரிப்புக் கலகலவென்று கேட்டது. என்ன சிரிப்பு! அந்தப் பாழான கோட்டையின் எதிரொலி போலவே அந்தச் சிரிப்பும் என்னைக் கேலி செய்தது.

யாரது? அவளா?...........! இது என்ன? இதையும் நம்பவா?

என் துணைவி, என்னுடைய செல்வி— அவளா என்னைக் கேலி செய்கிறாள்?

ஆம், அதோ அவள்தான். சாலைக்கு வரம்பு கட்டிய வேலிக்கு அப்பால்—தொலை விலே நின்றுகொண் டிருக்கிறாள்.

துயரக் கடலில் ஆழ்ந்த என் மனம் சிரமப் பட்டு மேலே எட்டிப் பார்த்து, அவள் கண்ணின் பார்வையைத் துருவி ஆராய்ந்தது.

காதல்! இளமைத்துடிப்பின் வேகத்திலே அது சிக்காது. வலிமையின் வனப்பில் மட்டுமே அது அகப்படாது. உண்மைக் காதல்—சூறா வளியிலே மூச்சடக்கிப் பிடித்துவிடுவ தல்ல. காட்டாற்று வெள்ளத்திலே ஒதுங்கி ஏறுவதற்கு அகப்பட்டதெல்லாம் கரையல்ல.

ஆபத்திலே—வெள்ளப்பெருக்கிலே உயிர் தப்ப நடுவில் ஒரு பாறையில் ஏறியிருக்கலாம். ஆனால், அதுவே கரையா?

அது கரையாக இல்லாவிட்டால் போகிறது; அங்கேயே வாழக்கூடாதா?

இப்படியெல்லாம் மனம் கிடந்து திண்டா டிற்று. என்ன திண்டாடி என்ன செய்ய?

அவளுக்கு இரக்கமில்லை. மீண்டும் என் னைப் பார்த்துச் சிரிக்கிறாள். நான் பேதை என்று அவள் கண்கள் என்னைப் பழிக்கின்றன. அவள் இதழ்க்கடையோரங்கள் என்னை ஏளனம்

செய்யவே மலர்கின்றன. இதழ்கள் ஒரு சாய லாகச் சாய்ந்து என்னை நையாண்டி செய் கின்றன.

புற்றரவின் வெறியாட்டம் முடிந்தது. பாவம்! ஒரு முயல் நீலநிறமெய்தி உலக வாழ்வை நீத்தது.

எழில்! அதுமட்டும் இருந்தால் போதுமா? பாம்பின் எழில் மிகுந்த படத்தை அனுபவித்த நான், முயலைக் கொல்லும் நச்சும் அங்கே இருந்ததை உணரவில்லையே!

பாம்பு தன் படத்தைச் சுருக்கித் தன் புற்றுக்குள் மறைந்தது. அங்கிருந்து கண்ணை மட்டும் வெளியே செலுத்திக்கொண் டிருந்தது.

அவள் பரிகசித்தாள். என்னைப் பரி கசித்தாள். ஏழை நான், என்ன செய்ய முடியும்?

தளர்ந்த நடைபோட்டு மேலே போக லானேன். கால்கள் பின்னின. கருத்துக்கள் பின்னின. ஒரே கொடிகளின் பின்னலும் சிக்கலுமாக இருந்த வேலியோரத்தில் பொத் தென்று விழுந்தேன்.

## 6

கிழக்கு வெளுத்தது. புட்கள் இசை பாடி யிருக்கலாம். யார் கண்டார்கள்?

தண்மதி போன்ற முகம்; குளிர்ந்த பார்வை; அமைந்த சாயல்; அழகிய முறுவல்—இவை கொண்ட ஒரு பெண்ணுருவம் வேலிக்கப்பால்—

நான் சுருண்டு கிடந்த வேலிக்கப்பால்—என் முன் வந்து நின்றது. பெண்ணுருவம் கொண்டதோர் கூற்றம் என நினைந்தது என் உள்ளம். சூடு கண்ட பூனை!

கண்ணை மூடினேன். ஆனால், அகக் கண் முன் அவள்—இல்லை—இவள் வந்து நின்றாள்.

என்ன இது, தர்ம சங்கடம்!

கண்ணைத் திறந்தேன். அவள் என்னை நோக்கினாள். நானும் பார்த்தேன்.

கவர்ச்சி இல்லாமல் இல்லை. ஆனால், பழைய தளர்ச்சியின் வேகம் இன்னும் என்னைத் தாக்கிற்று.

என்னதான் என்னை அடக்கியும் மீண்டும் மீண்டும் அவளைப் பார்க்கவே என் உள்ளம் தூண்டிற்று.

'முன்போலில்லை; அமைதி பிறந்துவிட்டது; சூறாவளி அடங்கிவிட்டது. வெள்ளம் வடிந்து விட்டது. கரை ஏறலாம். தயக்கம் வேண்டாம்' —என்று என் மனம் உபதேசித்தது.

என் அமைச்சன் முன் தான் கூறிய ஆலோசனை பாழ்பட்டது கண்டு என்னை நெருங்க அஞ்சினான். தன்னால் தன் நண்பனுக்கு அவமானம் நேர்ந்ததே என்று என் பாங்கன் என்னை அணுகவில்லை.

என் அறிவும் உடலும் தயங்கின. முன்னே துடியாய்த் துடித்த அவை இப்போது அடங்கி ஒடுங்கி, இருக்கும் இடம் தெரியாமல் கிடந்தன.

ஆனால், என் உயிரின் துடிப்பு இப்போது தான் எழுச்சி பெற்றது :

"இவள்தான் என் துணைவி" என்றது உயிர். "உன் துணைவி" என்று உடலும் அறிவும் முன் கூறியது நினைவு வந்தது. உயிர் மட்டுமே "என் துணைவி" என்று கூறிற்று...........

இந்த ஆராய்ச்சி நடந்து முடியும்வரை அவள் காத்திருக்கவில்லை. தயங்கித் தயங்கி—எட்டி எட்டிப் பார்த்தவள் என் ஆன்மத் துடிப்பை அறிந்துவிட்டாள்.

அவள் ஆன்மாவும் துணை நாடித் தவித்திருக்கவேண்டும்.

உடனே எனக்குக் கரம் தந்தாள். ஆன்மாவும் ஆன்மாவும் கலந்தன.

* * *

கைகோத்து இரண்டு உயிர்கள் வாழ்க்கைப் பயணத்தைத் தொடங்கின.

எனக்கும் உனக்கும்
இசைந்த பொருத்தம்
என்ன பொருத்தமோ
- இந்தப் பொருத்தம்
உலகில் பிறர்க்கு
எய்தும் பொருத்தமே

என்று ஆண்மையும் பெண்மையும் கலந்து பாடிய குயிலிசை தென்றலில் மிதந்துவந்தது.

# மறு பதிப்பு

மாடுமனை போனு லென்ன
மக்கள் சுற்றம் போனு லென்ன
கோடி செம்பொன் போனு லென்ன—கிளியே
குறுநகை போதுமடி

என்ற கண்ணி இசை வடிவாய்க் காற்றில் மிதந்துவந்து அந்தப் பெரிய மாளிகையின் தோட்டத்தையே வேதி வித்தையால் சொர்க்க மாக்கிக்கொண் டிருந்தது. அந்த நகரின் செல்வர்க ளெல்லாம் வாழுகிற ஒரு பகுதியில் அமைந்திருந்த அந்தப் பெரிய மாளிகை—அரங்க விலாஸ்—ஒரு மூன்றடுக்கு மாடி வீடு. மாலை நேரத்தில் வீட்டு முதலாளி, சுந்தரசாமி நாயுடு தோட்டத்தில் ஒரு பக்கமாக

அமைந்துள்ள ஆசனத்தில் அமர்ந்திருந்தார். எங்கேயோ தம் சிந்தையைச் செலுத்தி ஆழ நினைந்து தோய்ந்திருந்தவரை இந்த அருமையான இசைப் பாடல் எழுந்திருக்கச் செய்து விட்டது. விருவிரென்று மாளிகைக்குள் வந்தார். வந்தவுடன், "ஏ, சரோ! இங்கே வா. உன் பாட்டும் நீயும்........" என்று இரைந்தார். இந்த முழக்கத்தின் உச்ச ஸ்தாயியைக் கேட்டவுடன் பாட்டு தானகவே நின்றுவிட்டது. அப்பாவின் குரலையும் அந்தக் குரலில் இருந்த கோபக் கொதிப்பையும் உணர்ந்த சரோஜினி மாடியிலிருந்து இறங்கி வந்தாள்.

அவள் வந்தபோது சுந்தரசாமி நாயுடு சோபாவில் சாய்ந்தவண்ணம் தலையைக் கைக்குச் சுமையாக ஏற்று, எடை போட்டுக் கொண்டிருந்தார். சிந்தனையின் பாரத்தைத் தலையின் எடையால் மதிப்பிட்டு அறிந்தா சமாளிக்க முடியும்! முடியாதுதான். இருந்தாலும் மனிதன் எப்போதுமே அப்படித்தானே செய்கிருன்! மூளையில் கிடந்து அலமரும் எண்ணச் சுமையைத் தாங்க முடியாதபோது வெறும் தலையைப் போட்டு உலுக்கிக்கொள்வது தானே அவன் வழக்கம்! சுந்தரசாமி நாயுடு அந்த வகையைச் சேர்ந்தவர்தாம்.

அப்பாவின் குரல் கேட்டே நடுங்கிப்போன சரோஜினி, அவருடைய நிலையைப் பார்த்ததும் பேசக்கூட முடியாமல் ஒரு ஓரமாக ஒடுங்கி நின்ருள்.

பாட்டை நிறுத்தியதோடு அவருடைய சிந்தனை வேறு வேலை செய்யத் தொடங்கி விட்டது. என்றோ, எப்பொழுதோ நடந்த நிகழ்ச்சிகளின் விவரங்களை யெல்லாம் எடுத் தெடுத்து அவர் மனத்திரையில் வீசி எறிந்து விளையாடிக்கொண் டிருந்தது, அவருடைய சிந்தனை. மாரியம்மைக்கு விளையாட்டு; நமக்குப் புண்ணும் பொடியுமாக அல்லவா இருக்கிறது! அப்படித்தான் சிந்தனையின் எக்காளம் நாயுடு வைத் தொளைபோட்டுப் பதம் பார்த்தது.

கொஞ்சநேரம் நின்றுபார்த்த சரோஜினி, "அப்பா! என்னைக் கூப்பிட்டீர்களே, ஏன்?" என்று கேட்டாள். அணுக் குண்டை எடுத்துத் தன் தலைமேலே போடப் போகிறார் என்று எதிர்பார்த்துப் பேசுவதைப் போல் இருந்தது, அவள் பேச்சு. சரோஜினியின் கேள்விதான் எந்த உலகத்திலேயோ இருந்த நாயுடுவை அரங்க விலாஸ் மாளிகைக்குக் கொண்டுவந்தது. தலைநிமிர்ந்து தம் மகளைப் பார்த்தார்..........: "அ.... என்ன சரோ! ?.......ஒகோ, சரிதான்.... ஒன்றுமில்லை. நீ போ'ம்மா" என்று அமைதி யாகப் பேசினர்.

பழைய இடிக் குரலுக்கும் இந்தச் சாதுப் பேச்சுக்கும் ஒரு வகையான பிணைப்பையும் காணமுடியாமல் சரோஜினியின் இளம் உள்ளம் 'விழித்தது'. 'தலை தப்பியது தம்பிரான் புண்ணியம்' என்று சொல்வதுபோல இருந்தது, அவள் மெல்லெனப் பூனையாய் அங்கிருந்து தன்

அறையை நோக்கிப் போன போக்கு. அப்பா வுக்கு முதலில் வந்த கோபத்துக்கும் பின்னல் வந்த திடீர் அமைதிக்கும் தொடர்பு தெரிய வில்லே. ஆனல், அவர் முகத்தைக் கண்டு நாயுடுவின் சிந்தனேக் 'குழம்பு' கொதித்துக் குதி கொம்மாளம் போடுகிறது என்பதைத் தெரிந்து கொண்டது, அவளுடைய பெண் மனம்.

கோயிலுக்குப் போயிருந்த தன் அம்மா அரங்கநாயகியம்மாளே எதிர்பார்த்தாள், இந்தச் சேதியைச் சொல்வதற்கு. "அப்பா ஏன் இப்படி ஆய்விட்டார்! அண்ணன் போக்கு இவருக்குப் பிடிக்கவில்லே யென்ருல், 'கிடக்கிறது கழுதை' என்று ஒரு முழுக்குப் போடுவதை விட்டு இந்தப் பாடு இவருக்கு எதற்கு? இதற்காக மூளேயையா குழப்பிக் கொள்வார்கள்!" என்றெல்லாம் தன் அன்னேக்குச் சொல்லவேண்டியன என்னென்ன என்று திட்டமிடத் தொடங்கிளுள். பாட்டுத்தான் பாடமுடியவில்லே, 'சத்தமில்லாமல்' இருக்க வேண்டுமென்ருல் மனம் சும்மா இருக்குமா? அது திட்டமிடு படலம் படித்தது.

## 2

'அரங்க விலாஸ்' மாளிகையின் பெயரைத் திடீரென்று மாற்றிவிட்டார் சுந்தரசாமி நாயுடு காரு. இப்போது அந்த மாளிகையின் பெயர் 'சீதா விலாஸ்'. இந்தப் பெயர் மாற்றம்பற்றி அவரிடம் யாரும் பேசவில்லே. நினேத்தார்; மாற்றிவிட்டார். ஏன் மாற்ற நினேத்தார்? அது

தான் தெரியாது. அரங்கநாயகி என்பது மனைவி யின் பெயர். சீதையம்மாள் என்பது அவரு டைய அன்னையாரின் பெயர். மாளிகை கட்டி இப்போது பதினைந்து ஆண்டுகள் கழிந்து விட்டன. கட்டிய காலத்தி லிருந்து வழங்கிய பெயரைத் திடீரென்று இப்போது ஏன் மாற்ற வேண்டும்? அரங்கநாயகிமட்டும் கடைசியில் துணிந்து கேட்டுவிட்டாள்: "அந்தக் காலத் திலே என் பெயரை வையுங்கள் என்று ஏதா வது நான் சொன்னேனா! நீங்களாக வைத்தீர் கள். இத்தனை வருஷம் கழித்துப் பெயரை ஏன் மாற்ற வேண்டும்? உங்கள் அம்மா இருந்து பார்த்தால் நன்றாகத்தான் இருக்கும். அதற்கும் வழியில்லை. அந்தப் புண்ணியவதி போய்ச் சேர்ந்து, போன இடமும் புல் முளைச்சுப் போச்சே!......அதென்னமோ, உங்கள் போக்கு எங்களுக்கு ஒன்றுமே புரியவில்லை! ஒவ்வொரு காரியமும் இப்படித்தான் இருக்கிறது! அன் றைக்கு நம்ம சரோ பாடின பாட்டைக் கேட்டு எரிந்துவிழுந்தீர்களாம்...."

அரங்கநாயகி அம்மாளுக்குச் சுருக்கமாய்ப் பேசுவதென்றால் என்னவென்று தெரியாது. அந்த அம்மாவின் பரம்பரையிலே அத்தி பூத்த மாதிரியாகப் பத்தாவதுவரை 'இங்கிலீஸ்' பள்ளிக்கூடத்திலே படித்தவள். 'பாப்பாரப் பொண்ணு மாதிரிப் பாட்டு வேறே தெரியும்' என்று அவளைப் பற்றிப் பெருமைப்பட்ட பாட்டி மாரும் உண்டு........... இத்தியாதி பெருமை

களோடுகூட நாயுடுகாரு வலிய வந்து சிக்கியவர் என்ருல், சுருக்கமாக எப்படிப் பேசுவாள்!

நாயுடுவுக்குப் பொறுமை இல்லை. உட்கார்ந் திருந்தவர் எழுந்து, கைகளைப் பின்னல் கட்டிக் கொண்டு குறுக்கும் நெடுக்குமாக நடந்தார். கண் தரையை அளவிட்டுக்கொண் டிருந்தது. மனைவிக்குப் பதில் சொல்லுகிற அளவுக்கு அவருடைய செவிப் புலன் வேலை செய்யவில்லை. என்னவோ சத்தம் காதிலே விழுந்தது. அந்தச் சத்தங்களைப் பொருளுள்ள சொற்களாக 'மொழி பெயர்க்க' அவர் சிந்தை அவரை விடவில்லை. சரோஜினி........ பாட்டு.......என்று ஏதோ இரண்டு சொற்களைமட்டும் எப்படியோ அவர் மனம் விடாப்பிடியாகப் பிடித்துக்கொண்டது. இந்தச் சொற்கள் சிந்தனைக்கு அகப்பட்டவுடன், நாயுடுவை வேறு ஒரு இடத்துக்குத் திருப்பி விட்டது........எல்லாம் மனத்துக்குள் நடக்கிற அமர்க்களம்தான். நாயுடுவின் உடல் சீதா விலாஸ் என்ற அரங்க விலாசத்திலே இருந்தது. உள்ளம் உயிரோடு கைகோத்து வேறு எங்கோ............... எந்தக் காலத்திலேயோ திரிந்தது................

ஒரு காலத்திலே நாயுடுகாருவுக்கு, 'மாடு மனை போனு லென்ன...........' என்ற பாட்டைக் கேட்டால் போதும், ஒரே தலைக்கிறக்கம்தான். குளிப்பறைக்குள் நுழைந்ததி லிருந்து எண் ணெய் தடவித் தலை சீவி, சைக்கிளை எடுத்து அதன்மீது அமர்வதற்காக வலக்காலை எடுத்து

அனுயாசமாக வீசுகிறவரையிலும் அந்த ஒரு கண்ணியை அவருடைய வாய் பாடிக் கொண்டேயிருக்கும். மற்றவர்களின் உள்ளங் களுக்கு அவர் வாய்ப் பாட்டு எப்படி இருந் திருக்குமோ, தெரியாது. ஆனல், அவருடைய உள்ளம் அப்படியே சொக்கிப்போகும், அவர் பாடுகிற அந்த வாய்ப்பாட்டின் இசையிலே!

## 3

அப்போது........ சிந்தனை காலச் சுடுகாடு களைக் கடந்து நாயுடுவை நிறுத்தி வைத்திருக்கிற ஒரு பழைய காலத்து நினைவு மேடையிலே நடக் கிறது ஒரு நாடகம்.

என்ருே நடந்த ஒரு நிகழ்ச்சியைக் கால தேவன் புதைத்துவைத்திருக்கிருன். நிகழ்ச்சி யின் சட்டகம்தான் புதைக்கப்பட்டது. அந் தச் சடலத்தின் உயிர், நிகழ்ச்சித் தொடரால் காலதேவனை ஏமாற்றி இன்னும் சுந்தரசாமி யின் வாழ்க்கையிலே பல நிகழ்ச்சிச் சடலங் களைப் பதம் பார்த்துவருகிறது. அந்த உயி ரைத் தேடிப் பிடிக்கக் காலதேவன் முயலும் போதெல்லாம் கூடு விட்டுக் கூடு பாய்கிறது அந்த உயிர். கால அகட்டினுள் சிக்குவது வெறும் உடல்தான். இது ஒரு பக்கத்தே நிகழ்ந்துகொண் டிருக்கும் நிரந்தர நாடகம்.

உயிருக்கு ஒரு துணை உண்டு. சிந்தனை யைத் தன் துணையாக வைத்து நடக்கிறது உயிர்.

சிந்தனை ஒரு விளையாட்டுப் பிள்ளை. காலதேவன் புதைத்துவைத்துள்ள சடலங்களை அகழ்ந்தெடுத்து உயிருக்குக் காட்டி நையாண்டி செய்வது அதனுடைய வழக்கம். உயிரைப் பிடிக்க முடியாமல் ஏமாறும் காலத்தை நையாண்டி செய்வதோடு நில்லாமல் சடலங்களின் ஏறுமாறான தன்மைகளைச் சுட்டிக் காட்டி, எடுத்து அலசி உயிரையும் ஆட்டிப் படைப்பது தான் பாழாய்போன சிந்தனையின் வேலை. நல்ல துணை! உயிரைப் பார்த்து இரக்கப்பட வேண்டியதுதானே!

சிந்தனையின் சிக்கலிலே அகப்பட்டுக் கொண்ட நாயுடுகாருவின் உயிர் ஒரு புதை குழியின் பக்கத்திலே நிற்கிறது. புதைகுழி மீது ஒரு பழைய நாடகம் உருவெளி காட்டுகிறது.

சீதையம்மாள் கண்ணீர் வடித்துப் பேசுகிறாள். வாலிபத் துடிப்பையெல்லாம் தசைநார்களிலே நிறுத்திவைத்துக் கல்லென நிற்கிறான் இளைஞன் சுந்தரசாமி. புழுப்போலத் துடிக்கும் விரல்கள்—பொருந்தி நிற்கமுடியாமல் பிரிந்து அரற்றும் உதடுகள்—பரிதாபகரமான சொற்கள்...........இவை சீதையம்மாளின் உருவெளி; ஒலியலைகள்.

காலங்கடந்த அந்த நிகழ்ச்சியை நடந்ததைப்போலவே சித்தரிக்கப் பார்க்கிறது முதுமைப் பருவத்தை எட்டி பிடிக்கப்போகும்

நாயுடுகாருவின் உயிர். உள்ளமும் துணை செய்கிறது. ஆனால், பயனில்லை. சில சொற்களே உருவம் பெற்று வருகின்றன! "அடே, பெற்ற கும்பி கொதிக்குதடா! நான் பெற்ற மகனடா! ஆசைக்கொரு பிள்ளை நீதானப்பா! இப்பவோ, இன்னும் சிறிது கழித்தோ என்று இருக்கிற என்னை ஏனடா வதைக்கிறாய்! நான் செத்துச் சுண்ணும்பாய்ப் போன பிறகு என்ன வேணுமானாலும் செய்துகொள்ளடா.........."

இன்னொரு புதைகுழி:

"உங்கள் அப்பாவைக் குழியிலே வைத்த குலத்திலே நுழைய உனக்கு எப்படி'டா மனம் வந்தது?.........."

மற்றுமொரு உருவெளி:

சீதையம்மாள் வீட்டை விட்டு வெளியேறுகிறாள். கையில் ஒரே ஒரு துணிப் பை. இளம் பிள்ளை சுந்தரசாமி கதறுகிறான். பயன் இல்லை. அம்மா போய்விட்டாள்.

நாயுடுகாருவின் உயிருக்கு இந்தக் காட்சிகளையெல்லாம் கண்டு பொறுக்க முடியவில்லை. போதாக் குறைக்கு அவர் சிந்தனை குரல் காட்டி நையாண்டி செய்கிறது: "அன்றைக்கு 'அவள்' இருந்தால் போதுமென்று 'மாடு மனை' பாடினையே, அப்பனே! இப்போது ஏன் அழுகிறாய்?"—பழைய நினைவுகளை எழுப்பிவிட்டதுமல்லாமல் இப்படி இடித்துக் காட்டவும் செய்

தால் யாருக்குத்தான் கோபம் வராது! நாயுடு காருவின் உயிர் தன் நண்பன் சிந்தனையை விட்டது ஒரு அறை! அதிர்ச்சி!

நினைவு தப்பி—மூச்சற்றுக் கீழே விழுந்து விட்டார் நாயுடுகாரு.

## 4

**சு**ந்தரசாமி நாயுடு எல்லா வளமும் நிறை யப் பெற்றவர். சுந்தர் மில்ஸ் அவருக்குச் சொந்தம். கொள்ளை கொள்ளையாகப் பணம் திரண்டது. ஒரே பையன்—வேணு கோபால சாமி—சீமையில் படிக்கிறான். ஒரே பெண் சரோஜினி; பி. ஏ. படிக்கிறாள்.

சில மாதங்களாக நாயுடுகாருவின் மனம் என்று மில்லாதபடி குழம்பத் தொடங்கி விட்டது. அவருடைய ஓயாத உழைப்புக்கு முன் வந்து நிற்கமுடியாமல் புதைந்து கிடந்த பழைய நினைவுக ளெல்லாம் தலைவிரித்துப் பேய்க் கூத்து ஆடத் தொடங்கிவிட்டன. வேணுகோபாலசாமிக்கு எத்தனையோ கடிதங் கள் எழுதியும் ஒரு பயனுமில்லாமல் போயிற்று. கடைசியிலே, "வெள்ளைக்காரி என்றால் உங்க ளுக்கு ஆகாமல் இருக்கலாம். எனக்கு அவள் தான் வேண்டும். எத்தனை முறை நான் சொல் லியும் நீங்கள் கேட்கத் தயாராக இல்லை. இனி மேல் நான் சொல்லக்கூடியது இவ்வளவுதான்: உங்கள் பிச்சைக் காசு எனக்குத் தேவை யில்லை. இவள் இச்சையே எனக்குப் பெரிது.

நாங்கள் காதலர்கள்................" என்று இந்த வகையாக ஒரு கடிதத்தை எழுதிவிட்டான்.

சுந்தரசாமி நாயுடுவுக்குத் தம் பைய னிடத்திலே அளவுகடந்த பற்றுதல் உண்டு. அளவிறந்த விருப்பம் இருப்பதே எப்போதும் ஆபத்துத்தான் என்ற மனவியல் உண்மை அவருக்குத் தெரியாது. வேணுகோபாலிடம் தாம் கொண்டிருந்த எல்லையில்லாத பற்றுதல் காரணமாக அவனுடைய வாழ்க்கையின் எல் லாத் துறைகளுக்கும் அவரே திட்டமிட்டு வைத் திருந்தார். வாலிப மிடுக்கிலே இருந்த அந்தப் பையன் சீமைச் சூழ்நிலையும் தக்க தூண்டு கோலாக அமைந்திருந்தபடியால் தகப்பனர் மனக்கோட்டைகளை யெல்லாம் ஒரே எற்ருக எற்றித் தவிடுபொடி யாக்கிவிட்டான்.

ஆசைக் கோட்டை தகர்ந்த பிறகு நாயுடு காருவுக்கு ஊக்கம் குறைந்துவிட்டது. 'ஆலைக் குப் போவதும் வருவதுமாக இடைவிடாமல் உழைத்து என்ன பயன்' என்று சலிப்புத் தட்டிவிட்டது. வீட்டைவிட்டு வெளியேறுவதே கிடையாது. இரும்பு சும்மா கிடந்தால் துருப் பிடிக்காமலா இருக்கும்! வேலை யில்லாத மனத் திரையிலே சிந்தனை தன் திருவிளையாடல்களைப் பயங்கரமான படங்களாகத் தீட்டித் தீட்டி நாயு டுவை நையாண்டி செய்தது.

தம்முடைய வாலிபப் பருவத்திலே சீதை யம்மாளின் பேச்சைத் தட்டிவிட்டு ஒருத்தியின்

மையலிலே சிக்கியதை நினைவுக்குக் கொண்டு வந்தது அவர் சிந்தனை. அதோடு நிற்காமல், "உன்னுடைய மறு பதிப்புத்தான் உன் மகனும்" என்று அந்தப் பழைய படத்துக்கு உரைவிளக்கமும் கொடுத்தது அவர் அறிவு.

அந்த 'அவள்' முகத்தையே நினைவுத் திரையிலே எழுதிக் கற்பனை உலகிலே உலாவி வந்த அந்தப் பழைய நாட்கள் மனத்திரையிலே அலை பாய்ச்சி அவரை அலைக்கழித்தன.

## 5

**நா**யுடுகாருவுக்குத் தூங்க முடியவில்லை. கருங்கும் மென்ற காரிருள் உலகத்தையே விழுங்கிப் பாரித்து நிற்கிறது. இருட்டின் அகட்டினுள்ளே விழித்துக் கிடக்கிறார் நாயுடு காரு. எங்கேயோ இருந்து ஒரு ஆந்தை அலறு கிறது. "ஐயோ, ஒற்றை ஆந்தை குரல் கொடுக் கிறதே!" என்று துணுக்கமுறுகிறது அவ ருடைய வைதிக மனம். குழம்பிய பல நிகழ்ச்சிச் சாயைகள் இருட்டிலேயே கோடு கிழித்தது போல அவர் விழி முன்னே உலவி உலவி அலைக்கழிக்கின்றன........

என்றோ வந்த ஒரு தந்தி நினைவில் எழு கிறது. இராமேசுவரம் ஆஸ்பத்திரியி லிருந்து அது வந்தது. "தாயார் மரணப் படுக்கையில் இருக்கிறார். பார்க்க விரும்புகிறார்" என்பது அதன் வாசகம்.

தந்தி வந்தபோது அவர் ஊரில் இல்லை. இரண்டு மூன்று நாள் கழித்துத்தான் போனார். அம்மாவைப் பார்க்க முடியவில்லை. சீதையம்மாள் விட்டுப்போன ஒரு தகரப் போணியும், கந்தலான ஒரு அழுக்குப் பையுந்தான் அவரிடம் ஆஸ்பத்திரிக்காரர்கள் கொடுத்தார்கள். பைக்குள்ளே ஒருவனின் புகைப்படம் இருந்தது. அவருடைய படந்தான் அது. சாகுந் தறுவாயில்தான் சுந்தரசாமியின் விலாசத்தைக் கொடுத்தாளாம் சீதையம்மாள். அந்தத் தாய் உள்ளத்தின் கடைசி ஆசையைக்கூட நிறைவேற்ற முடியாத பாதகத்தை மூட்டையாகக் கட்டிக்கொண்டு நாயுடுகாரு திரும்பி வந்தார். வந்து பழையபடி ஆலைக் கதிர்களின் சுழற்சியிலேயே தம்முடைய உள்ளத்தையும் உழைப்பையும் செலுத்தி, இயந்திரத்தோடு இயந்திரமாக மாறிவிட்டார் நாயுடுகாரு.

இப்போதுதான் இயந்திரத்தின் வன்பிடி அவரை விட்டுவிட்டதே! மனித உறவுகளையும் உள்ளத்து உணர்ச்சிகளையும் ஒடுங்கச் செய்துவிடும் இயந்திர வாழ்க்கையை விட்டு, மனிதம் என்ற பெருஞ் சாலையில் நுழைந்தவுடன் உணர்ச்சிப் புயலைச் சமாளிக்க முடியாமல் திணறினார் சுந்தரசாமி நாயுடுகாரு.

இந்தத் திணறலுக்குப் பலர் பல பல பெயர்களைக் கொடுத்தார்கள். பெயர் சூட்டு விழாவில் முடிவுரை கூறும் 'டாக்டர்'கள் "இது இரத்த அழுத்தம்" என்று தீர்ப்புச்

சொன்னார்கள். "அடிக்கடி மயக்கம் வரும். மனக் கவலையைக் குறைப்பதுதான் இதற்கு ஒரே மருந்து" என்று தங்கள் கையையும் கழுவிக்கொண்டார்கள். இப்படி மற்றவர்க ளெல்லாம் கைவிட்ட பிறகு சிந்தனையின் கொம்மாளத்தைக் கேட்கவா வேண்டும்!

மாளிகையின் பெயரை மாற்றினர். சீதை யம்மாளின் படம் பெரிதாக்கப்பட்டது. அவள் பெயரால் அறநிலையம் ஏற்படுத்தினர்........... என்ன செய்தாலும் அந்தப் பழைய நினைவுகள் ...........உருவெளிகள்...........சிந்தனையின் சதிச் செயல்கள்........இவை யெல்லாம் அவர் மனத் தைக் கவலைக் கடலிலே மேலும் மேலும் ஆழ அமிழ்த்தி வேடிக்கை பார்த்தன...........கீழ் வானம் வெளுத்துவிட்டது.

## 6

**வா**னம் வெளுத்துவிட்டது. யாரோ ஒரு பிச்சைக்காரி உள்ளே நுழைந்து வருகிறாள். கையில் ஒரு தகரப் போணி. அவள் பின்னால் ஒரு சிறு குழந்தை வருகிறது. தூக்கம் பிடிக் காமல் நாயுடுகாரு வெளி வராந்தாவிலே வந்து உட்கார்ந்திருக்கிறார். அவருடைய வெறித்த பார்வையும் பரட்டைத் தலையும் பார்த்த அந்தப் பிச்சைக்காரியின் குழந்தை என்ன எண் ணிற்றோ, தெரியவில்லை. "அம்மா!" என்று அலறிக்கொண்டு போய்த் தன் அன்னையைச் சேர்ந்து கட்டிக்கொண்டது.

நாயுடுகாரு நாற்காலியி லிருந்து மயங்கி விழுந்துவிட்டார். அதைப் பார்த்த தோட்டக் காரன் அலறிக்கொண்டு ஓடி வந்தான்.

சிந்தனையின் கண்ணிலே மண்ணை வாரிப் போட்டுவிட்டு, உயிர் காலதேவனை நண்பனாக ஏற்றுக்கொண்டு விட்டது. இனி, சிந்தனையின் தொல்லை நாயுடுவுக்குக் கிடையாது. காலதேவன் வெற்றி பெற்றுவிட்டான்.

* * *

ஏமாந்த சிந்தனை சீமைக்குப் பறந்தது—வேணுகோபாலசாமி தன் காதலிக்கு 'மாடுமனை போனாலென்ன' என்ற பாட்டை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துச் சொல்லிக்கொண் டிருந்தான்............

தந்தி வந்தது.

## "ஆண்டாள்"

காட்டுத் தீப் போலப் பரவிவிட்டது என்று சொல்லக் கேட்டிருக்கிறோம். அது வேகமாகப் பரவுமோ என்னவோ, எனக்கு அவ்வளவு நன்றாகத் தெரியாது. ஆனால், உமா—சஞ்சீவி பற்றிய செய்தி கல்லூரி மாணவர் களிடையே பரவிவிட்ட வேகம் வேறு ஒன் றுக்கும் இராது என்றுமட்டும் திட்டமாகச் சொல்லலாம்.

உமா பாடுகிறாள் என்றால் போதும், கல்லூரிக் கட்டிடத்தின் மூலை முடுக்குகளில் உள்ள எல்லோரும் ஒரே இடத்தில் வந்து குவிந்துவிடுவார்கள். அவளுடைய உடல் அழகு

கவர்ச்சி மிக்கதா, குரல் இனிமை கவர்ச்சி மிக்கதா என்று ஒரு கேள்வியைக் கிளப்பி விட்டால், பையன்கள் பாடு பெருந் திண்டாட்டம் தான். 'ஆடவர் பெண்மையை அவாவும் தோளினன்' என்று ஆண் அழகுக்குப் புலவர்கள் சிறப்புச் செய்திருக்கிறார்கள். அது உண்மையாகக்கூட இருக்கலாம் போல்தான் தெரிகிறது. இல்லையென்றால், அந்தக் கல்லூரியில் படித்த பெண்களிடையே அவளோடு பேசுவதற்கோ பழகுவதற்கோ அவ்வளவு போட்டி எப்படி இருக்க முடியும்! அவளைப் பற்றிச் சில பெண்களைப் பேசச்சொல்லிக் கேட்கவேண்டுமே! தங்களை ஏதோ காதல் கட்டத்தில் நடிக்கும் ஆண்களாகவே எண்ணிப் பேசுவதைப்போல் இருக்கும்.

பாரதிதாசன் பாட்டுக்களில் பயித்தியம் பிடித்த ஒரு மாணவருக்கு ஒரு பெரிய சந்தேகம், பாரதிதாசன் உமாவை எப்போது பார்த்தார் என்று. அவளைப் பார்க்காமல்,

> மின்னலிடை; கன்னல்மொழி;
> இன்னும் சொன்னால், விரிவுலகில்
> நீ ஒருத்தி; அழகின் உச்சி

என்று எப்படி அவரால் பாடியிருக்க முடியும்! இப்படி மற்றக் கவிஞர்களிடம் 'பிச்சை' எடுப்பதா என்று எண்ணிய சில மாணவச் சுடர்கள் தாங்களே 'கவி'களாக அவதாரம் எடுக்கவும் தயங்கவில்லை. சுருக்கமாகச் சொல்ல

வேண்டுமானால், உமா அந்தக் கல்லூரிக்கே உயிரூட்டி வந்தாள். அங்கே இருந்தவர்களை யெல்லாம் கிரங்க வைத்துக்கொண் டிருந்தாள்.

புதுமையான நாகரிகச் சுழலிலே முக் குளித்துத் திளைப்பதிலே ஒரு பெருமிதம் கொண்டவள் உமா. நல்ல உடற்கட்டும் நெஞ்சுத் துணிச்சலும் கொண்டவன் வெள்ளப் பெருக்கின் சுழிகளிலே மூழ்கித் திளைப்பதில் பெருமையடைவதுபோல அவள் நிலைமை இருந்தது. அதிலே ஆபத்து நிறைந்திருக்கலாம். ஆனால், நிறைந்த ஆபத்தைக் கடப்பதில்தானே பெருமை இருக்க முடியும்! நவ நாகரிகத்தின் சரியான பிரதிநிதியாகத் தன்னை ஆக்கிக் கொண்ட உமா, பாரதியாரும் பாரதிதாசனும் கனவிலே கண்ட புதுமைப் பெண்ணின் நேர் உருவம் என்று சொல்லத்தக்க வகையில் விளங் கினாள்.

“ஏன், உமா, பாரதியார் உன்னைப் பார்த் துத்தான் பாடினாராமே........

சுட்டும் விழிச் சுடர்தான்—கண் உமா
சூரிய சந்திரரோ...

என்ற அடி தமக்காகவே பாடி வைத்ததாகச் சில பைத்தியங்கள்....”

உமாவுக்கு இந்த மாதிரியான ‘நம்பத் தகுந்த வட்டாரத்தி லிருந்து வருகிற செய்திகள்’ எத்தனையோ உண்டு. இவற்றை யெல்லாம்

கேட்டால் அவளுக்கு ஆவேசமே வந்துவிடும். "இந்த ஆடவர்களே நம்பத்தகாதவர்கள். அவர்களால் பெண் இனம் பட்ட பாடு போதும். ஆகா ஒகோ என்று வானத்தை வில்லாக வளைத்துப் பேசுவார்கள். எல்லாம் பசை உள்ளவரையில் தான். அப்புறம் அடுப்பூதும் வேலைக்கு அனுப்பி விடுவார்கள். கண்ணே மூக்கே என்று அளந்த வாய், கழுதையே குட்டிச் சுவரே என்று அர்ச்சிக்கும்...." என்று அல்லி மகாராணியின் தர்பார்ப் பாணியில் பேச ஆரம்பித்துவிடுவாள். ஆண்கள் தன்னைப் புகழ்கிறார்கள் என்பதை அறிவதிலே அவளுக்கு எவ்வளவோ இன்பம் இருக்கத்தான் செய்தது. அந்த இன்பம் இல்லையென்றால் அவள் பெண்ணாக இருக்கமுடியாதே! ஆனால், அவள் எடுத்துக்கொண்ட 'நாகரிக அவதாரம்' தன் மன உணர்ச்சியை அவ்வளவு எளிதிலே காட்டிக் கொள்ள விடுமா? "இந்த ஆண்களை ஆட்டிப் படைப்பதே நம் வேலையாக இருக்கவேண்டும். இந்த நாட்டின் ஒவ்வொரு பெண்ணும் எந்த அருச்சுனனுக்கும் பணியாத அல்லியாக மாற வேண்டும்." "நம்மைக் குரங்காக ஆட்டிவைத்த காலம் மறைந்துவிட்டது. நம் மனம்போல் ஆடுகிற சூத்திரப் பாவைகளாக ஆண்களை ஆக்குவதே நாகரிகமான சமூகத்தைப் படைக்கச் சிறந்த வழி." "சரிநிகர் சமானமாக வாழ்வம் இந்த நாட்டிலே என்பது ஆண் இனத்துக்கே ஏற்பட்டுள்ள தோல்வியின் முதல் அடையாளம்; பெண்ணினத்தின் எதிர்கால வெற்றிக்கு வழிகாட்டி" —இந்த மாதிரியான

சட்டங்களை உருவாக்கிக் கலையகம் என்ற மாண வியர் விடுதியில் நம் அல்லி அரசாணை செலுத்தி வந்தாள். அவசரச் சட்டங்களும் அவ்வப்போது பிறப்பதுண்டு. கல்லூரிச் சங்கங்களில் நடை பெறும் விவாதங்களில் ‘ஆண் இனத்தை’ அடக் குவதற்காக அவை பிறப்பிக்கப்படும். அந்தச் சட்டங்களைக் கூட்டத்தி லுள்ள பெருவாரியான ‘ஆணினம்’ தன் கைதட்டலால் ஆமோதித்து நிறைவேற்றும். எல்லாம் அந்தப் பன்னிரண்டு முழப் புடைவையின் மகாத்மியம்தான்! வெறும் புடைவையா! அழகு! குயிலின் குரல்........ அப்புறம்........அடேயப்பா........

* * *

இப்படி யெல்லாம் வெற்றிக் கொடி பிடித்தே பழகிவிட்டவளுக்குத் திருமணம் என்று சொன்னால், யார்தான் ஆச்சரியப்படமாட்டார் கள்! அதுவும் சஞ்சீவி மணமகன் என்றால்....!

இந்தச் சஞ்சீவியின் மகிமை என்னவா யிருக்கவேண்டும்! உமா—சஞ்சீவி திருமணம் கல்லூரி இளைஞர்களிடையே ஒரு பரபரப் பான செய்தி.

பரமசிவம் பிள்ளை தம் மகளைப் படிக்க வைக்க நினைத்ததில் பெரிய பெரிய ஆகாயக் கோட்டைகளுக்கு இடம் இருந்தது என்று சொல்ல முடியாது. அவரிடம் பூர்விகச் சொத்து என்ற சோம்பல் மருந்தோ, செல்வாக்கு என்ற சமூகத்தின் கருந்திரையோ இல்லை. உழைத்தால்

பிழைக்கலாம் என்ற இயற்கை விதியினை வேறு வழி இல்லாமல்-கடைப்பிடிக்கிறவர். சாதாரண மான வருவாயுள்ள வக்கீல் நரசிம்மாசாரியாரி டம் குமாஸ்தாவாக அமர்ந்து வயிறு கழுவி வந்தார். உமா ஒரு பி.ஏ. ஆகிவிட்டால் தொல்லை இராது என்று நினைத்தார்; படிக்க வைத்தார்.

ரூபாய் அணாப் பைசாவிலே அவர் வளமாக வாழவில்லையென்றாலும், செத்த எழுத்துருவில் சாகாமல் வாழ்ந்துவருகிற அறிவுப் பரம் பரையில் நிரம்பவும் ஊற்றம் கொண்டவர் அவர். தம்மைப் போலவே தாம் காணும் சமூகத் தில் எத்தனையோ பேர் வேறு பல சமூக ஆற்றல்களுக்கு அடிமைகளாய்ப் புழுங்குகிற புழுக்கத்தை உணர்ந்திருக்கிறார். திறமையும் தகுதியும் சமூகத்தில் பெறுகிற இடம் என்ன என்று எண்ணி எண்ணிக் குமுறிய அவர் ஆத்மாவின் விளைவுதான் உமா! சமூக மேடு பள்ளங்களிலே புரண்டு வீழ்ந்து குமுறிக் கொந் தளித்துப் பாய்ந்த அவருடைய ஆத்திர வெள்ளத்தின் விளைச்சல்தான் உமாவின் அல்லி அரசாணை.

உமாவுக்குத் தம்பி தங்கைகளைக் கொடுத் துப் 'பெரிய குடும்பஸ்தர்' என்ற குசேலப் பட்டத்தைக் கொடுக்காமல் இருப்பதற்காகத் தான் பரமசிவம் பிள்ளையின் மனைவி 'கைலாச பதவி' அடைந்துவிட்டாள்போல் இருக்கிறது. உடலின் நைப்பாசை பரமசிவம் பிள்ளையைப்

படாத பாடு படுத்திவைத்த துண்டு. அதெல்லாம் வாலிபத்தின் முறுக்கு முடுக்காக இருந்த காலத்தில். அந்த வேளைகளில்கூடத் தன் ஆன்ம விளைச்சலான உமாவின் நினைவால் தம் இச்சையை நசுக்கிவிட் டிருக்கிறார்.

'ஒரு குறையும் இல்லாமல் இந்த ஒரு பெண் வளர்ந்தால் போதும்' என்று அடிக்கடி சொல்லிக்கொள்வார். "அம்மா உமா! நீ எவனையும் நம்பி அவனுக்கு அடிமையாக வாழக் கூடாது. இந்தப் பாழ்பட்ட சமூகத்தில் தன்னம்பிக்கையோடு நீ வாழத் தெரிந்துகொண்டால் அது போதும்........" என்றெல்லாம் அவர் சொல்லிவைத்த பாடங்களே உமாவின் உறுதிப் பாட்டை உருவாக்கி வளர்த்துவிட்டன. அந்தத் தன்னம்பிக்கையை வளர்த்துக்கொள்ள ஒரு வாய்ப்பாக இருக்கும் என்பதற்காகத்தான் அவள் ஆண்கள் படிக்கும் கல்லூரியில் படிக்க வேண்டும் என்று அனுப்பினர். "எனக்கு இந்த முட்டாக்குப் பள்ளிக்கூடம் தேவையில்லை. எதிர்நீச்சு இல்லாமல் அடிபணியவே பழக்கி வைக்கும் இந்தச் சிறைக்கூடத்தில் படிக்கவா வது!" என்று அவளே சொன்னபோது பிள்ளையவர்களின் உச்சிமட்டு மென்ன, உள்ளமே குளிர்ந்துதானே போயிருக்கும்!

அப்போது குளிர்ந்த மனம் அவளுடைய ஒரு கடிதத்தைப் பார்த்தபோது கொதிப் படைந்தது

சென்னை............

அன்புள்ள அப்பா,

வணக்கம். தாங்கள் எழுதியுள்ள கடிதம் ஜப்பானியன் தலையில் விழுந்த அணுக் குண்டைப்போல் திடீரென்று வந்து என் வாழ்வைக் குலைக்கப் பார்க்கிறது. என்னை மன்னிக்க வேண்டும். தங்களிடம் பயிற்சி பெற்ற நான் இந்த அடிமைத் தளையில் சிக்க மறுக்கிறேன்.

சொத்து இருந்தால் அவனோடு இருக்கட்டும்............

தங்கள் உமா.

இப்படிப்பட்ட உறுதியை அவள் உள்ளத்தில் வளர்த்துவிட்ட பிறகு வீணிலே கொதித்துப் பலன் என்ன!

அவர் கொதித்தார். பயனில்லாமல் கொதித்தார். அவள் மறுத்துவிட்டாள்.

*　　　*　　　*

'கடலோர மனை' என்பது மயிலாப்பூரில் அழகான மாளிகை. அங்கே இளமைத் திருக்கோலம் களிநடம் புரிகிறதோ என்று சொல்லும் வண்ணம் சஞ்சீவி வசித்துவந்தான். சொத்தோடு சேர்த்துப் பொதுவாக வருகிற சொத்தை உள்ளம் அவனிடம் இல்லாம லிருந்தது பெரிய வியப்புத்தான். மாசுமறுவற்ற அவன் வாழ்க்கையே ஒரு கலை வாழ்வுதான். கல்லூரி நேரம்

தவிர மற்ற நேரத்தில் அவனைக் கலைச்சூழலிலே தான் காணமுடியும். அவனுக்கு வேறு நண்பர் களும் இல்லை. மற்றவர்களோடு பழகுகிற இயல்பு அவனுக்கு அடியோடு இல்லாமல் போயிற்று. அவன் சொத்துக்காரன் என்பதால் வலிய அவனோடு ஒட்டிக்கொள்ளப் பார்த்தவர்களுக் கும் அவன் இடம் தரவில்லை. தன் கலை வாழ்வை அவர்கள் பழக்கம் கலைத்துவிடக் கூடாதே என்பதற்காக யாரையும் அவன் நெருங்கவிட வில்லை.

“ சஞ்சீவி ஒரு அப்பாவி ” “ அவன் சுத்தச் சூனியம் ! சொத்து இருந்து என்ன பண்ண !” “ சுத்தச் சூனியம் மட்டுமா? வடிகட்டின கஞ்சன் ! நாலு பேரோடு பழகினால் எங்கே செலவு வந்துவிடுகிறதோ என்று பயப்படுகிறான்!” —இப்படி எத்தனையோ வகையாகக் கல்லூரி மாணவர்கள் பேசிக்கொண்டார்கள். — “ எல் லோரும் போனாப்போலே நானும் போனேன் மாங்காத் தோப்பு என்றதுபோல இந்தச் சஞ்சீவிப் பயலும் விவாதக் கூட்டத்துக்கு வருகிறானே, என்னடா இது !” என்று பெரு வியப்போடு அவனைப் பார்க்கிற பார்வைகளும் உண்டு.

“ இந்த அப்பாவி எப்படி’டா பிடித்தான் அந்த அல்லியை !”

வெறும் கட்டுக் கதை என்று ஒதுக்கிவிட யாராலும் முடியாத வகையில் அல்லவா செய்தி வந்திருக்கிறது !

பரமசிவம் பிள்ளையின் வற்புறுத்தலால் உமா ஊருக்குப் புறப்பட்டு வந்தாள். அவருடைய உடல் நிலை மோசமா, உள்ள நிலை மோசமா என்று உமாவால் நிச்சயிக்க முடியவில்லை. வீட்டுச் சமையல் இல்லாமல் எங்கேயோ காசு கொடுத்துச் சாப்பிட்டதன் பயனாக க்ஷயரோகத்தையும் விலை கொடுத்து வாங்கிக் கொண்டார். நெடுநாளாக உள்ளூர இருந்து வந்ததைத் தந்தையும் அறியவில்லை; மகளும் அறியவில்லை. திடீரென்று அது தன் ஆதிக்கத்தை வெளிப்படையாகச் செலுத்த ஆரம்பிக்கவே, பரமசிவம் பிள்ளையின் உடம்பால் அதற்கு ஈடுகொடுக்க முடியவில்லை. இந்த நிலையில் மகளின் படிப்பு முடியவில்லையே என்ற கவலையும் புகுந்துகொள்ளவே க்ஷயரோகத்தின் பாடு கொண்டாட்ட மாகிவிட்டது.

ஆண்டுத் தொடக்கத்தில் சென்னைக்குப் போன உமாவுக்குத் தந்தையின் உடல்நிலை பற்றி ஒன்றும் தெரியாது. 'கல்விக்கு விசாரங்களை' என்ற பாடம் படித்த பரமசிவம் பிள்ளையும் மகளுக்குக் கவலை வேண்டாம் என்று எழுதவில்லை.

சஞ்சீவி, உமாவின் பொருட்டு அவரைக் காண வந்தபோது அவர் இருந்த நிலை அவனுக்குப் பெரிதும் சாதகமா யிருந்தது. தளர்ந்த உடலில் தளராத உள்ள உறுதி இல்லை. தம்முடைய அறிவுச் செல்வத்தையெல்லாம் வெறும் ஏட்டுச் சுரைக் காயாக்கி

விட்டார். தம் மகளின் நல்வாழ்வுக்கேற்ற சமய சஞ்சீவியாகவே அவனைக் கருதினர்.

நல்ல குடும்பம். செல்வச் செழிப்பு. ஏழை யென்றும் பாராமல் உமாவின் கலைச் சிறப் பையே பெரிதாகக் கருதி வரும் உள்ளம். போதாக் குறைக்கு, ‘நேர்மை’ யான வழியில் பெற்றெடுத்த தந்தையாரையே நாடியிருக்கிறன்! வேறென்ன வேண்டும்! ‘சரி’ என்ற விடை கிடைத்த எக்களிப்பிலே ஆகாயத்தில் மிதந்து வந்தோமா, ரயிலில் வந்தோமா என்று தெரியா மல் சென்னைக்கு வந்துவிட்டான் சஞ்சீவி.

அவளை நேராக நெருங்கும் துணிச்சல் அவனுடைய பரம்பரையிலேயே இருந்திருக்குமா என்பது சந்தேகம். எப்படியோ வந்த துணிச் சலைக் கொண்டு பரமசிவம் பிள்ளையை நெருங்கினன்.

குருட்டுப் பூனை விட்டத்தில் பாய்ந்து விட்டது! இலவு காத்த கிளிகள் ஏமாந்து போயின.

பரமசிவம் பிள்ளையின் உடம்பும் உள்ள மும் தன்னுள் கரந்து வைத்திருந்த தாய்மையை இதுவரை வெளிப்படுத்த நேரவில்லை. துருப்புச் சீட்டை எப்போதுமா காட்டுகிறர்கள்! உமா தோற்றுப்போனள்.

உமா தன் தோழி ஒருத்திக்குக் கடிதம் எழுதினள்: “தாயற்றவள் நான். தந்தையின் உள்ளம் என்னை என்னவோ செய்கிறது.

என்ன செய்கிறோம் என்ற விளக்கமில்லாமலே அவரிடமுள்ள தாய்மை உணர்ச்சியாகிய மந்திரக் கோலுக்குப் பணிகிறேன். ஒரு வேளை என் திருமணம் என்பது என் உள்ளத்தைப் பொறுத்தவரையில் தற்கொலையாகக்கூட இருக்கலாம்........ இந்த முகத்தோடு கல்லூரியில் படிக்கும் துணிச்சல் எனக்கு இல்லை........ அல்லியை வஞ்சகத்தால்தான் அருச்சுனன் வென்றிருக்கவேண்டும்........" என்று எழுதிய உமாவின் கடிதமே அப்பாவி சஞ்சீவியின் அதிர்ஷ்டத்தைக் கண்டு எல்லோரையும் வியப்புக் கடலில் மூழ்கடித்தது. செய்தி—'காட்டுத்தீப் போல' அல்ல—தன்னையே வெல்லும் வேகத்தில் பரவி விட்டது.

* * *

சஞ்சீவியின் பணம் உமாவைத் திருமணம் செய்துகொண்டது. அவள் முக மலர்ச்சியும் அக மலர்ச்சியும் எங்கோ மறைந்துவிட்டன. துள்ளித் திரிகின்ற மான்! பாடிப் பறக்கின்ற குயில்! ஆடிக் களிக்கின்ற மயில்! வானம் பாடி!—இவை இந்த உமாவைப்பற்றி எழுந்த பேச்சுக்கள்தாமே!

என்ன மாறுதல்! ஆட்டம் எங்கே? கல கலத்த சிரிப்பெங்கே! பேச்சு........? அழகு இருந்தது; மலர்ச்சி இல்லை. வளம் இருந்தது; வாழ்க்கை இல்லை. நடைப்பிணம் என்கிறார்களே, அது இப்படித்தான் இருக்குமோ!

சஞ்சீவி எல்லையற்ற துயருக்கு ஆளானான். என்னதான் தன்னலம் கொண்டவனாயினும் அவனும் கலை உள்ளம் படைத்தவன் அல்லவா? கலை வாழ்வுக்கு அவள் தக்க துணையாவாள் என்றல்லவா எதிர்பார்த்தான்! அவள் தன் கலையையே கொன்றுவிட்டாளே! ஒரு பாட்டு! மருந்துக்கு ஒரு பாட்டு!—ஊஹூம், அதுதானே கிடையாது.

எந்தச் சஞ்சீவி தன் மகளுக்குச் சமய சஞ்சீவி யாவான் என்று கருதினாரோ, அந்தச் சஞ்சீவியே அவள் வாழ்வுக்கு நஞ்சாகி விடுவானே என்று எண்ண வேண்டிய நிலை வரும்வரையில் பரமசிவம் பிள்ளை வாழவில்லை. க்ஷயரோகத்தின் இறுகிய அணைப்பிலே ஒன்றி ஒடுங்கி இரண்டறக் கலந்துவிட்டார்.

சஞ்சீவி—உமா வாழ்க்கை இயந்திரம் போல் சென்றது. அவனுக்கோ, நண்பர்களும் இல்லை. அவளோ, இப்போது யாரையும் நாடுவதில்லை. வழி துறை துலங்காத காரிருளில் அந்த இரண்டு உயிர்களும் பயணம் செய்தன. அவள் மகிழவில்லையே என்ற ஏக்கம் சஞ்சீவிக்கு. தனக்கு இந்தக் கேடு செய்தானே என்ற ஏக்கமும், அந்த ஏக்கத்தினூடு அவனுடைய கலையுள்ளத்தைக் கண்டதால் பிறந்த அனுதாபமும் கொண்டு இரண்டு துருவங்களிடையே ஊசலாடினாள் அவள். எப்படியோ நடந்தது அவர்கள் வாழ்க்கை!

மனம் விட்டுப் பேசும் வழக்கம் இருந்தாலும் இருவருக் கிடையே இருந்த திரை கிழிபட் டிருக் கக்கூடும். அப்படி மனங்கலந்து பேசும் வாய்ப்பு அவர்கள் வாழ்விலே முன்னே இருந்ததில்லை. இப்போதோ —— அது எப்படி வரும்?

மண வாழ்வு மணமற்ற வாழ்க்கையாகச் சுழன்றது.

* * *

காற்றடித்தது; மழை பெய்தது———

கடலோரமனையின் உள்ளிருந்து இசை வெள்ளம் பெருக்கெடுத்துப் பரவுகிறது. நிகழாத —நிகழ முடியாத— அற்புதம் என்று எந்தக் காரியத்தைச் சஞ்சீவி நினைத்தானோ அந்தக் காரியம் தன் கருத்துக்கும் கண்ணுக்கும் எதிரே நிகழ்வதைக் கண்டு எல்லையற்ற வியப்பிலே மூழ்கிக் கிடக்கிறான். கையிலிருந்த புத்தகத்தை மெல்ல மூடிவைத்துவிட்டுச் சோபாவிலே சொகுசாகச் சாய்ந்து இரு கண்ணையும் மூடி இசையலையில் மிதந்து வான யாத்திரை செய்யத் தொடங்கிவிட்டான்.

தாலாட்டு, குழந்தைக்கா, தன் புது வாழ்வுக்கா!

சஞ்சீவிக்கு ஒன்றும் புரியவில்லை. உமாவின் இந்த மாறுதலை எப்படி விளக்குவது என்று அவனுக்குப் புரியவில்லை. மறுமலர்ச்சியா? புதுப்பிறப்பா?

தொட்டிலில் கிடந்த குழந்தை ஏதோ உளறிற்று. “ இது புதுப் பிறப்பு. தாய் இன்று தான் பிறந்தாள் ” என்று அது சொல்லியதாகச் சஞ்சீவிக்கு எதிரே இருந்த ஒரு படம் விளக்கவுரை சொல்லியது. அந்த ஓவியத்தில் தாய் ஒருத்தி தன் சேய்க்குப் பாலூட்டும் காட்சி சித்தரிக்கப்பட் டிருந்தது.

அந்தக் கணத்திலேயே குழந்தைக்கு ‘ஆண்டாள்’ என்று பெயரிட்டான் சஞ்சீவி.

# பிரை மோர்

செல்வப்பன் கல்லூரி மாணவர்கள் என்றாலே விளம்பரம் வேண்டாத சரக்கு. தடபுடல் அலங்காரத்தின் அவதாரங்கள்தாம் அந்தக் கல்லூரியில் இடம்பெற முடியும். கல்லூரிப் படிப்பு என்ற காரணத்தைச் சொல்லிச் சென்னைக்கு வருவார்கள். பாடம் படிப்பது அவர்களுக்குப் பொழுது போக்கு. பரீட்சை வருகிறதே என்ற அபாய அறிவிப்பு அவர்களை ஒன்றும் செய்யாது. கவலையற்ற பிழைப்பு. பொறுப்புணர்ச்சி என்று மற்றவர்கள் சொல்லுகின்றபோது உடை அலங்கார ஆடம்பரம்தான் செல்வப்பன் கல்லூரி மாணவர்களுக்கு நினைவுவரும். வெளிநாட்டான் ஒருவன்

சென்னைக்கு வந்துபோனால் நம்நாட்டைப் பற்றிக் கேவலமாக நினைத்துவிடக் கூடாதே என்பதில் அவர்களுக்கு மிகவும் அக்கறை. வருங்காலத்தின் வாரீசுகள் என்ற பொறுப்புணர்ச்சிதான் அவர்கள் ஆடம்பரத்தின் அடிப்படை. "பரீட்சை என்ன சார், அது கிடக்கிறது. நம்மைப்பற்றி மற்றவன் கேவலமாக நினைக்காமல் இருக்க வேண்டும். அதுதான் பெரிது. கெட்டிக்காரன் எல்லாம் தேறவேண்டும் என்றில்லை; தேறின முட்டாள் எல்லாம் கெட்டிக்காரன் என்பதும் இல்லை" என்று விவாதமிடும் பாணியில் அரட்டை அடிப்பதில் அந்த மாணவர்களுக்கு இணை அவர்களேதான். 'ஜமீன்தார் காலேஜ்' என்று அந்தக் கல்லூரியைப்பற்றி மற்றக் கல்லூரி மாணவர்களும் பேராசிரியர்களும் சொல்வார்கள். ஏனைய கல்லூரிகளில் இருக்கும் பேராசிரியர்கள் செல்வப்பன் கல்லூரி மாணவர்களின் நெருங்கிய நண்பர்களாக இருப்பார்கள்........ சுருக்கமாகச் சொல்லவேண்டுமானால், கல்லூரி வாழ்க்கை என்பது கேளிக்கை செய்து கழிக்க வேண்டிய காலம், ஆடம்பரத்துக்கே ஏற்ற பருவம் என்று செல்வப்பன் கல்லூரி மாணவர்கள் நினைக்கிறார்கள். செல்வப்பன் மாணவர் விடுதி மற்ற விடுதிகளுக்கு விதிவிலக்கு: ஆடம்பரத்தின் புகலிடம்; ஆரவாரத்தின் செவிலித்தாய்.

பாறைகளுக்கு நடுவே கிடக்கிற வைரக் கல்லைப் பொறுக்கிவிடுவது எளிய காரியம்.

வைரக் குப்பையில் உயர்ந்த வைரம் எது என்று தேர்ந்தெடுப்பது சற்றே கடுமையான வேலை தான். வைரக் கற்கள் ஒளி பரப்புவதில் ஒன்றை யொன்று வெல்லப் பார்க்கும். என்ருலும், ஒளி வீச்சில் மற்றவற்றைப் பிறக்கிடச் செய்யும் வைரம் ஏதாவது ஒன்று இருந்துதானே தீரும்! அப்படிப்பட்ட தலைமாணிக்கமாகச் செல்வப்பன் கல்லூரியில் விளங்கினவன்தான் குமாரதேவன். குமாரதேவ் என்ற பெயர் செல்வப்பன் விடுதி யில் எல்லோருக்கும் தெரிந்தது. குமாரதேவ் என்ற பெயரோடு விளம்பரமும் ஆடம்பரமும் தொடர்ந்தே வரும்.

## 2

ஜமீன்தார்கள் என்ருல் ஜமீன் பெறு மானத்தைவிட மிகுதியான கடன் உடையவர்கள் என்பது எல்லோருக்கும் தெரிந்த ரகசியம். கடன் என்பது பெரிய மனிதர்களின் இலக்கணம் என்கிற அளவுக்கு வந்துவிட்டது. குமார தேவனின் தகப்பனுரும் ஒரு ஜமீன்தார்தாம். விதிவிலக்கான ஜமீன்தார் அல்ல. ஜமீன் ‘ஆட்ட பாட்டங்கள்’ ஆடம்பரக் கேளிக்கைகள் யாவும் அங்கே உண்டு. இசைக் கலை ரசிகர்; நாட்டிய வள்ளல்; நாடக வேள்; திரைப்பட முதலாளி.... இப்படி ஒரு பக்கம் காட்சி யளிப்பார். சிலம் பம் ஆடும் கூட்டம், குஸ்தி போடும் குழு, சேவல் சண்டை விடும் திருக்கூட்டம்— இங்கேயும் காட்சி யளிப்பார். பெரிய மனிதர் என்ருல் ‘வைப்பு’

வேண்டுமல்லவா? அந்த விதியையும் ஜமீன்தார் 'சாகிப்' மதியாதவ ரில்லை. தாரங்களும் பலர் தாம். தசரத மன்னரைப்பற்றிக் கதை கேட் டிருக்கிறீர்களா? அறுபதினயிரம் அணங்குகள் அவருடைய அந்தப்புரத்தில் இருந்தார்களாமே! சக்கரவர்த்திக்கு — இராமனைப் பெற்றெடுத்த வர்க்கு—அது தகும். அவ்வளவு தூரம் குமார தேவனைப் பெற்றெடுத்தவருக்கு எட்டாது. அந்தப்புரத்தை அணிசெய்தவர்கள் ஏழு பேர் தாம். ஏழு 'ராணி'களுக்கும் ஏக புத்திரனுக வந்த பிள்ளைதான் குமாரதேவன்.

குமாரதேவன் ஏன் படிக்க வேண்டும் என்று அவன் உறவினரில் சிலர் கேட்டதுண்டு. 'பத்தாம் படி படித்தாயிற்று. போதும். படிப்பை நிறுத்திவிட்டால் காலா காலத்திலே நடக்க வேண்டியதை முடித்துவிடலாம் அல்லவா' என்று பழுத்துதிரும் கிழப்பழங்கள் அறிவுரை கூறின. கிழட்டு வாதங்கள் குமாரதேவனின் பேச்சுக்கு முன் நிற்க முடியவில்லை.

"இனிமேல் ஜமீன்தார்கள் என்றல் கிள்ளுக் கீரை மாதிரி. ஜமீன்தாரி முறை வேண்டாம் என்றெல்லாம் பேசுகிற காலம் இது. படித்துப் பட்டம் பெற்றல் சட்டசபைக்காவது போக லாம்........" என்றெல்லாம் என்னென்னவோ பேசி அவன் சென்னைக்குப் படிக்க வருவதை உறுதிப்படுத்திவிட்டான். ஜமீன்தாருக்கு மட்டும் உண்மை தெரியும். வித்தொன்று போட முளை வேறென்று தோன்றும்? 'சரிதான், பிள்ளை

யாண்டானைப் பட்டினம் இழுக்கிறது. நியாயம் தானே! போகட்டும். ஆடிப் பாடி இருக்க வேண்டிய பருவம். அவன் என்ன செய்வான்...' என்று முடிவு செய்துகொண்டார். "படித்துத் தான் சட்டசபைக்குப் போகவேண்டும் என்று எந்த மடையனடா சொன்னான்? நான் சட்ட சபையில் இருக்கிறேனே, அது உனக்கு என்ன மாய்ப் படுகிறது? இல்லை, கேட்கிறேன். எல்லாம் பணம் இருந்தால் சரியாய்ப் போகும். இதெல்லாம் நமக்குத் தண்ணீர்ப் பாடம். அப்பா, குழந்தை! பட்டணத்திலே இருக்கவேண்டும் என்பது ஆசை என்று நேராகச் சொல்லு. அதை விட்டு என்னவோ சுற்றி வளைக்கிறாயே!" என்று பேசினார்....எப்படிப் பேசினால் என்ன? குமாரதேவன் பட்டினத்துக்கு வந்துவிட்டான். செல்வப்பன் கல்லூரியிலும் சேர்ந்தாயிற்று. 'படிக்கிறான்.'

## 3

கல்லூரியில் சேர்ந்த பதினைந்து நாளைக் கெல்லாம் ஜமீன்தார் மகன் குமாரதேவன், 'குமாரதேவ்' ஆனான். புரட்சிக் காலம் அல்லவா? பெயரைக் குறுக்குவதில் தொடங்கிய நாகரிக மனப்பான்மை ஜமீன்தாரி நெறியில்-பணக்கார வேகத்தில் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்துவந்தது. அவன் மனம் நாடாத கேளிக்கை இல்லை. அவன் அடைய முடியாத ஆடம்பரமும் கிடையாது. கேட்பானேன்! மாதம் ஒன்றுக்கு 'ரூபாய் ஐந்நூறு

மட்டும்' குமார ஜமீன்தாருக்குச் செலவாயிற்று. ஜமீன்தாருக்கு இந்த விவரம் தெரியாது. கணக்குப் பிள்ளை, ஏஜண்டு இவர்கள்தாமே ஜமீன் நிர்வாகிகள்! அவர்களுக்குத்தான் தெரியும். ஜமீன்தார் காதுக்கு ஏதாவது எட்டினாலும் அவர்கள்தாம் சொல்ல வேண்டும். ஜமீன் தாருக்கு இதெல்லாம் ஒரு பொருட்டல்ல. 'சரி தான்' என்று ஜாடையாக இருப்பதைத் தவிர வேறு வழி கிடையாது. ஏன், கண்டிப்பாய் இருக்கக்கூடாதா என்று கேட்கிறீர்களா? அதெல்லாம் பெரிய இடத்துக் காரியம்; அப் படித்தான் இருக்கும். அதை நினைத்தாலும் பாவம். அந்த நினைப்பில் ஆயிரம் ஆயிரம் கதைகள் எழும்.

கல்லூரிக்கு வந்து இரண்டு ஆண்டுகள் கழிவதற்குள் இளைய ஜமீன்தார் பெரிய ஜமீன் தாரையே தோற்கடிக்கக் கூடிய அளவுக்குப் 'பெரிய மனிதர்' ஆகிவிட்டார். அவர் திருவடி படாத இசை மன்றம் கிடையாது. நாடகக் கொட்டகைகளில் முன் வரிசையில் அவர் இருப் பார். நடன நங்கையர் கைவழி நயனம் சென்றால், இவர் கைவழி பணமே செல்லும். "வாழ்க் கைக்கு 'ஸ்டிமுலண்ட்' கட்டாயம் வேண்டும், அது இல்லாமல் கலை இல்லை" என்பது அவர் மூளை கண்டுபிடித்த வாதம். ஊக்க மருந்தாக ஒயின் வகைகள் அமைந்தன.

ஜமீன் நிர்வாகத்தையே தாங்கக் கூடிய அளவுக்குக் குமாரதேவின் கேளிக்கை வளர்ந்து

விட்டது. 'படிப்பு என்ன ஆவது' என்று கேட்கிறீர்களா? அது என்ன, சின்ன விஷயம். பணம் பாதாளமட்டும் பாயும் அல்லவா?

கலை ரசனை என்ற சாக்கில் பெண்களைப் பார்ப்பது ஒரு நாகரிக வழக்கம். "இதென்னப்பா தப்பல்லவா?" என்று கேட்டால் "ஈஸ் தட்டிக் ஸென்ஸ் கொஞ்சம்கூட உனக்குக் கிடையாது" என்று சொல்வது சாதாரணமான விடை. இப்படியாக ஆரம்பிக்கிற அழகுணர்ச்சி என்னென்னவோ உணர்ச்சிகளைக் கிளப்பும். "அதென்ன இயற்கைதானே? மனித வாழ்க்கையே உணர்ச்சியின் விளைவு. இயற்கையான உணர்ச்சிக்குப் பணிவது தப்பா" என்ற சமாதானம் அந்த இரண்டாவது கட்டத்தில் தலையெடுக்கும்.

இந்தச் சமாதானம் தன் வரையறையைக் கடந்து ஆதிக்கம் செலுத்துவதும் உண்டு. அங்கேதான் எழுத்தாளர்களுக்கும் நாவல்களுக்கும் வேண்டிய நிகழ்ச்சிகள் பின்னிப் பின்னிக் கிடக்கும். ஒழுக்கம் என்பதையும் மூட நம்பிக்கையில் சேர்த்துவிடுகிற ஒரு கூட்டம் உண்டு. அந்தக் கூட்டத்தினர் தயவால்தான் அழகுணர்ச்சியில் தொடங்கி, கவர்ச்சியாய் மலர்ந்து, கைவிடுதலில் முடிந்த பல காமக்கூத்துகள் நடந்தன.

குமாரதேவனின் பணம் இந்தக் கேளிக்கையின் எல்லையையும் அவனுக்குக் காட்டிற்று.

நஞ்சை ஒத்த நண்பர்களை அவனுக்குச் சேர்த்து விட்டது, அவன் பணம்; நாகரிக மினு மினுப்பிலே மிதந்து செல்லவிடுத்தது அவன் பணம்; தன்னைத் தேவன் என எண்ண வைத்தது அவன் பணம். கெட்ட பழக்கமெல்லாம் மனிதன் அனுபவிக்க வேண்டிய இன்பம் என்ற சாக்கில் அவனை அடைந்தன, வளர்ந்தன. பணம் அவனை ஆட்டிவைத்தது. அவன் பணத்தை வாரி இறைத்தான். பணம் அவனை உரு மாற்றிவிட்டது. அது ஆட்டிற்று; அவன் ஆடினன்.

பணம் எல்லாம் வல்லது என்று நினைத்தான். எது வேண்டுமானலும் பணத்தால் அடையமுடியும் என்று நினைத்தான். ஆம். உண்மைதான். ஆனல், அந்த வல்லமையின் கீழ்க் கேவலம் குமாரதேவனின் சிறப்பெல்லாம் குன்றிவிடும், தற்சிறப்பெல்லாம் மாய்ந்துவிடும் என்று அவன் உணரவில்லை. அவன் என்ன? பெரிய பெரிய ஜமீன்தார்கள் எல்லாரும் உணராதபோது குமாரதேவன்—பணக்கொழுப்பின் இளவாரிசு, பரம்பரைக் கொழுப்பின் கான் முளை—அவன் எங்கே உணரப் போகிருன்!

குமாரதேவன் தன்னை அறியாமலேயே பணக் கொழுப்பின் அடிமையானன். பணம் அவனை ஆட்டிற்று; அவன் ஆடினன். சாராயம் மட்டும்தான் அவனை ஆட்டிற்று என்றில்லை. சாராயம் ஆட்டுவது கண்ணுக்குத் தெரியும். பணம் ஆட்டுவது யாருக்குத் தெரியும்? அது

ஆட்டிற்று ; அவன் ஆடினன். தன்னை அறியா மல் ஆடினன் ; தலைகீழாய் ஆடினன்.

## 4

அவன் ஆட்டத்திலே கூடச்சேர்ந்து ஆடப்பார்த்துத் தோல்வி எய்திச் சளைத்து விழுந்து நசித்த நங்கையர் பலர். இளமை வளத்தால் இன்ப உலாப் புறப்பட்ட அவர்கள், பணக் கொழுப்பால் பகட்டித் திரிந்த குமார தேவின் வலையிற் சிக்கித் திணறி இறுதியில் கை விடப்பட்டு....பாவம்....பரிதாப நிலையை அடைந் தார்கள். "காதல் என்று பேசிக் கடைசியில் கைவிட்டான் காதகன்" என்று அவர்கள் ஏசினர். ஆனல், உண்மை அதுதானு? இல்லை. அவன் காதல் என்று பேசினல் அவன் பணக் கொழுப்பு "காமக்கூத்துக்குக் கருவி" என்று விளக்கம் கூறும். பணக் கொழுப்பு என்பது எரியும் விளக்கு—இது தெரியாத நாகரிக நங்கையர் விட்டில் ஆகின்றனர். குமாரதேவன் பகட்டும் பணக்காரன். விளக்கு எரிந்தது ; விட்டில்கள் இறந்தன.

பணமும் பகட்டும் அவனிடம் இணைபிரியா தன. குமாரதேவன் பகட்டின் வடிவம். பாவம், அவன் பகட்டிய பகட்டில் பாவையர் தங்கள் தூய உள்ளங்களைப் பறிகொடுத்தனர். உள்ளத்தை அவன் கொழுப்பு உணரவில்லை. உடல் நசையை உணர்ந்தது, அவ்வளவுதான். நசித்த உள்ளங்கள்........! பாவம்! அவற்றைப்பற்றி

எண்ணியவர்கள் மனிதக் கூட்டத்திலேயே மிக மிகச் சிலர்தாம். இத்தனை கூத்தாடியும் இண்ட்டர்மீடியட் தேர்வையும் அவன் மறக்க வில்லை. அதாவது ஆனர்ஸ் வகுப்புக்குப் போக வேண்டும் என்பதை நினைவில் கொண்டான். பார்க்க வேண்டியவர்களைப் பார்த்து, வேண்டிய வற்றைச் செய்து தேறிவிட்டான். ஆனர்ஸ் வகுப்பில் சேர்ந்தான். அதே கல்லூரி; அதே விடுதி. அதே அறை; அதே கூட்டம்; அதே வாழ்க்கை முறை. கேளிக்கை—கூத்து—ஆட்டம்—பாட்டம்....

## 5

இண்ட்டர்மீடியட் வகுப்பைத் தாண்டிவிட்டால் அரசியல் என்பது கல்லூரி மாணவர் களுக்கு அவசியமான ஒரு விளையாட்டு. முதலில் அது வெறும் 'ஹாபி'யாகத் தொடங்கும். பிறகு விவாதம், கூட்டம்....இப்படியாக வளரும். உண்மையாக மனமும் அறிவும் கலந்து அரசி யலில் ஈடுபடுகிற மாணவர்களை விரல்விட்டு எண்ணிவிடலாம். ஆனால், எல்லா மாணவர் களும் ஆர்ப்பாட்டம் செய்வார்கள். இளம் பருவத்தில் 'காதல்' ஏற்படுவது எவ்வளவு இயற்கையோ அவ்வளவு இயற்கை கல்லூரி மாணவனுக்கு அரசியல் கவர்ச்சி ஏற்படுவது.

காதலை நெறிப்படுத்தி வெற்றி பெறும் இளைஞர்கள் மிகமிகச் சிலர். அப்படியே அரசியல் வெறியை ஒழுங்குறச் செலுத்தி உருப்

படியான பணிகளில் ஈடுபடுகிற மாணவரும் மிக மிகச் சிலர்தாம். 'எதிர்கால வாரீசு நாமல்லவா' என்று மார்பு தட்டி, கையை ஓங்கி விண்ணகத்தே மோதி மோதிப் பேசுகின்ற 'மாணவமணிகள்' எல்லோருமே நாட்டுக்குத் தலைவர்களாக வந்துவிடுவதில்லை; வரவும் முடியாது.

கல்லூரிகளிலே இதெல்லாம் எடுத்துப் பேசி விளக்கப்போகிறவர்கள் யார்? மாணவர்கள் இப்படிப் பேசமாட்டார்கள். ஆசிரியர்களோ, அரசியலைத் தொடக் கூடாது. இளைஞர் உலகமும், அந்தச் சிறிய உலகத்தை நம்பியிருக்கும் பெரிய உலகமும் எப்படி உருப்பட முடியும்?

போகட்டும். குமாரதேவனிடம் வருவோம். அரசியல் உணர்ச்சி என்ற 'பருவ நோய்' அவனையும் தாக்கிற்று. மாணவர்களிடையே 'தலைவன்' என்ற பெயரை எளிதாகப் பெற்றுவிட்டான். கதர் ஜிப்பாவும் காந்திக் குல்லாவும் அவனை அணிசெய்யலாயின. கூட்டங்களில் பேசினான்—முழங்கினான். மாணவர் உள்ளங்களில் இடம் பெற்றான்; ஆசிரியர் சிந்தனையில் இடம் பெற்றான். மாணவர் அவனைப் போற்றினர்; ஆசிரியர்கள் அவனை எண்ணி வருந்தினர். ஆனாலும் அவன் பண வலிமையும் மாணவர் ஆதரவும் அவர்கள் வாயை அடைத்தன. குமார தேவனின் பேச்சுத் திறமையும், சிரித்த முகமும் தூய கதர் ஆடையும் மாணவர் உள்ளங்களில் அசைக்கமுடியாத இடத்தை

அவனுக்கு அளித்தன. அவனுடைய கேளிக்கைக் கூத்துக்களின் எண்ணம் மாணவர் மனத்தில் எழவில்லை. முன்னே அவனைப் பழித்துரைத்த அதே வாய்கள் இப்போது புகழ்ந்துரைத்தன. முன்னே அறியாதார் இப்போது அறிமுகமாயினர். முன் வணங்காத கரங்கள் வலிய வணங்கின. அவனை ஒரு தெய்வம் என்றே மதித்தனர் என்ருல் மிகையல்ல.

## 6

**ப**ழைய வழக்கம் நின்றுவிட வில்லை. பழைய கேளிக்கை அவனை ஈர்க்காமல் இல்லை. அவனும் அந்த இன்ப விளையாட்டுக்களை விட்டு விடத் தயாரா யில்லை. முன்னே வெறும் குமார தேவ் ஈடுபட்டான். இப்போது தலைவன் என்ற சிறப்போடு ஈடுபடுகிருன். அவ்வளவுதான்.

பழைய காமக் கூத்துக்கள் நடந்தன; பழைய சாராயப் புட்டிகள் அவன் கரத்திலே ஏறின! பழைய சாராயம் அவன் வயிற்றை நிரப்பி, உடலை ஆட்டிற்று. பணம் அவனை ஆட்டிற்று; அவன் ஆடினன்; வெறியாட்டம் ஆடினன்.

பழைய நாடகம், பழைய பின்னணி; புதிய திரை.

நங்கையர் முகத்தில் அழகு இருந்தது. குமாரதேவ் மனதில் அழகுணர்ச்சி என்ற

பழைய பாவப் பல்லவி இருந்தது. கவர்ச்சி ஏற்பட்டது....பழைய நாடகம். ஊழிக்கூத்து—விளக்கு எரிந்தது ; விட்டில்கள் செத்தன.

எல்லாம் பழைய நாடகம். புதிய திரை. முன்னே வெறும் குமாரதேவன். இப்போது அரசியல் வீரன்—மாணவர் தலைவன். மற்றப் படி பழைய நாடகம்.

புதிய திரை எல்லோரையும் ஈர்த்தது. நாடகம் வளர்ந்தது. புதிய கட்டங்கள் சேர்ந்தன. நாடகப் பாங்கு மட்டும் மாறவில்லை. கேளிக்கை—ஆரவாரம்—ஆடம்பரம் ஒன்றும் குறையவில்லை. பழைய நாடகம்தான் நடந்தது.

பழைய விளக்கு எரிந்தது. விட்டில்கள் மாண்டன. முன்னே பட்டாடை ஆதிக்கம் செலுத்திற்று. இப்போது கதராடை ஆட்சி செலுத்திற்று ; நாடகம் என்னவோ பழைய நாடகம்தான். பணம் அவனை ஆட்டிற்று ; அவன் ஆடினான் ; வெறியாட்டம் ஆடினான்.

## 7

**பா**ல் இருக்கும் பாத்திரத்தில் மேலும் மேலும் எவ்வளவுதான் பாலைக் காய்ச்சி ஊற்றினாலும் தயிராக மாறப்போவதில்லை. ஆனால், ஒரு சொட்டு மோர் கலந்துவிட்டால் அவ்வளவும் தயிராக மாறிவிடும்.

பழைய நாடகத்தில் புதிய கட்டங்கள் சேர்ந்தன. உண்மைதான். ஆனால், அவையெல்லாம் பாலோடு சேர்ந்த பால்போலத்தான். குமாரதேவனின் போக்கை அவை ஒரு சிறிதும் மாற்றவில்லை. குமாரதேவன் எதிர்பாராத ஒரு கட்டம் கடைசியாக நாடகத்தில் சேர்ந்தது. அது கதையின் முழுப் போக்கையும் மாற்றிவிட்டது. பால் முழுவதையும் தயிராக மாற்றும் வல்லமை ஒரு துளி மோருக்கு உண்டு. கேளிக்கை, ஆடம்பரம் இவையே குறிக்கோளாகக் கொண்ட குமாரதேவனின் வாழ்க்கைக் கதையின் போக்கை அடியோடு மாற்றிவிடும் வல்லமை மங்கையர்க்கரசிக்கு இருந்தது.

குமாரதேவனின் கூட்டத்தில் மங்கையர்க்கரசிகளுக்கு இடம் கிடைக்காது. அவள் ஏழை; ஆடம்பரம் அறியாதவள்; அமைதியின் கோலம். இப்படிப்பட்ட ஒரு பெண்ணைச் சந்திக்க நேரிடும் என்று குமாரதேவன் எப்போதுமே நினைத்தது கிடையாது. சந்தித்த பிறகும்கூடத் தன் வாழ்க்கை முழுவதையும் அமைதி நிறைந்ததாக அவள் ஆக்கிவிடுவாள் என்று அவன் உணரவில்லை. ஒரு சொட்டு மோர் விழுந்தவுடனே பால் தயிராக மாறிவிடுவதில்லை. ஆனால், மோர் உள்ளூர வேலை செய்கிறது. பால் தன்னை அறியாமலே—பிறர் வியக்கும்படி—தயிராக மாறிவிடுகிறது. குமாரதேவனின் ஆடம்பர நாடகத்தில் நுழைந்த மங்கையர்க்கரசியும் அந்த ஒரு துளி மோரைப் போலத்தான் ஆனாள்.

மெல்ல மெல்லக் குமாரதேவன் தன்னை அறியாமலேயே மாறிவந்தான்.

அமைதி என்ற மாளிகையின் முதற்படியாக ஏற்பட்டது அந்தச் சந்திப்பு. ஆரவாரம் நிறைந்த தெருவிலிருந்து வீட்டுக்குள்ளே சென்று அமைதியாக இருக்கவேண்டுமானல் பல படிகள் ஏறவேண்டும். அப்படியேதான் குமாரதேவனும் படிப்படியாக மாறி இறுதியில் அமைதி வாழ்வை அடைந்துவிட்டான்.

அரசியலால் உந்தப்பட்டு மேடைகளில் ஏறிப் பெரிய பேச்சு வீரனுகக் குமாரதேவன் ஆனன் அல்லவா? அந்தப் பேச்சு வல்லமை தான் மங்கையர்க்கரசியைக் காணும் வாய்ப்பைத் தந்தது. நகரத்தில் உள்ள கல்லூரி மாணவர்களிடையே அடிக்கடி பேச்சுப் போட்டி நடப்பதுண்டு. அத்தகைய ஒரு போட்டியின்போதுதான் முதன் முதலாக மங்கையர்க்கரசியும் குமாரதேவனும் ஒரே மேடையில் கண்டனர்.

## 8

திலகவதியார் கல்லூரி மாணவி, மங்கையர்க்கரசி இண்ட்டர் இரண்டாம் வகுப்பில் படித்தாள். ஆடம்பரப் பொம்மைகளின் நடுவே அவள் ஓர் அமைதித் தெய்வமாக விளங்கினள். திலகவதியார் கல்லூரி மாணவிகள் அரசிகள் என்றே தங்களைக் கருதினர்—ஆடம்பரத்தில் மட்டும். அந்தக் கல்லூரியிலேயே தெறிப்பாக

மங்கையர்க்கரசியை எளிதாக அறிந்துகொள்ள லாம். ஆடம்பரத்தில்தான் அழகுண்டு, கவர்ச்சி ஏற்படும் என்று மற்றப் பெண்கள் கருதுவதைப் பொய்யாக்கினவள் மங்கையர்க்கரசி. அமை தியே அழகு என்றால் நம்பலாம். எளிமையில் கவர்ச்சியுண்டு என்பதை மங்கையர்க்கரசியை அறிந்தவர்கள் உணர்வார்கள்.

மங்கை அழகாகப் பேசுவாள். சொல்லில் அழகிருக்கும்; இனிமை பொங்கித் ததும்பும். குரலில் இனிமை; கருத்தில் ஆழம்; கொள்கை யில் உறுதி; வாதத்தில் வலிமை—இவை அவள் பேச்சுத் திறமைக்குக் காரணமாய் அமைந்தன. நல்ல நல்ல தமிழ்ப் பாடல்கள் அவள் சொற் பொழிவில் ஆங்காங்கே கலந்து வரும். தமிழில் நன்றாய்ப் பேசுவாளா, ஆங்கிலத்தில் நன்றாய்ப் பேசுவாளா என்று முடிவுகட்ட முடியாது. இரண்டு மொழிகளிலும் அவள் மனம்போல் தெளிந்து வேகமாய்ப் பொழிவாள். வாயைத் திறந்து பேசுவதாகவே தோற்றாது. புல்லாங் குழல் வாசிப்பவன் முயற்சியில்லாமல் அனயாச மாக ஊதுகிறான் அல்லவா? அதைப் போலவே உதடுகளின் வழியே காற்று ஊதுவது போலப் பேசுவாள். தெளிவும் திண்மையும் ஒருங்கே கலந்த பேச்சு மங்கையர்க்கரசிக்குக் கிடைத்த பேறு.

ஆரவாரமும் அமைதியும் ஒரே பேச்சு மேடையில் காணவேண்டுமென்றால் குமார

தேவனும் மங்கையர்க்கரசியும் பேசும்போது தான் பார்க்க வேண்டும்.

குமாரதேவன் அரசியல் உணர்வால் செல்வப்பன் கல்லூரி மாணவர்க ளிடையே தலைவனுய் விளங்கியதுபோலவே, திலகவதியார் கல்லூரி மாணவிகளின் தலைவியாய் மங்கை விளங்கினுள்.

அரசியல் சங்கம் என்ற பெயரில் கல்லூரி மாணவர்கள் ஒன்றுசேர்ந்து ஒரு கழகம் அமைத்தனர். செயலாளர்களாகக் குமார தேவனும் மங்கையர்க்கரசியும் தேர்ந்தெடுக்கப் பட்டனர். அடிக்கடி கூட்டங்கள் ஏற்பாடு செய்தார்கள்.

சங்க வேலை சம்பந்தமாக அடிக்கடி மங்கை யின் வீட்டுக்குக் குமாரதேவன் வந்து போனுன். வரும்போ தெல்லாம் அவனுடைய பழைய வழக்கமான கேளிக்கை எண்ணம் இருக்கத்தான் இருந்தது. இருந்தாலும் மங்கையின் அமைதி யும் உறுதியும் நிறைந்த முகத்தைக் காணும்போ தெல்லாம் குமாரதேவன் தன் வலிமையும் கருத்தும் இழந்தான். அவள் அழகு அவனைக் கவர்ந்தது; அமைதி, தடுத்தது; உறுதி, நிலை மாற்றிற்று.

அவன் பணக்காரன்-ஜமீன்தார். அவனைக் கேட்க அவன் வீட்டில் யாரும் இல்லை. அவன் யாரோடு வேண்டுமானுலும் எப்போதும் உற வாடலாம். ஆனுல், மங்கையின் நிலை அப்படி

இல்லையே! குமாரதேவன் அடிக்கடி வருவது மங்கையின் அன்னைக்கு விருப்பமில்லை.

## 9

**ம**ங்கையின் தந்தை ஒரு கல்லூரியில் பொருளாதாரப் பேராசிரியராக இருந்தவர். திடீரென்று மங்கையைத் தம் மனைவிக்கு ஒரே துணையாக வைத்துவிட்டு மண்ணுலக வாழ்வை நீத்தார். மங்கையர்க்கரசியைப் பட்டதாரியாக ஆக்கிப் பெரிய நிலையில் பார்க்கவேண்டுமென்பது பேராசிரியர் சுந்தரத்தின் பேராவல். அதை அடிக்கடி சொல்லுவார். ஆனால், அவள் ஆறாம் பாரம் படிக்கையிலேயே மாண்டார். அவர் மனைவி சரசுவதிக்கு எப்படியாவது கணவரின் ஆவலை நிறைவேற்றிவிட வேண்டுமென்று ஒரே வெறி. அவள் ஐந்தாவதுவரையில்தான் படித்தவள். பெண்களுக்கு உயர்ந்த படிப்பு வேண்டியதில்லை என்று சொல்லுகிற காலத்தையும் கட்சியையும் சார்ந்தவள்தான். ஆனால், 'அவர்' சொன்னது என்பதற்காக மங்கையர்க்கரசியைப் படிக்க வைத்தாள். பேராசிரியர் சுந்தரம் வைத்துச்சென்றதெல்லாம் ஐயாயிர ரூபாய்தான். இதை வைத்துக் குடித்தனம் நடத்தவேண்டும்; மங்கை படிக்க வேண்டும். பிறகு, திருமணம், சரசுவதி அம்மாளின் வாழ்க்கை—இவ்வளவும் ஆக வேண்டும். எனவே, மிகவும் சிக்கனமாய்ச் செட்டாகக் குடும்பத்தைச் சரசுவதி அம்மாள் நடத்

தினுள். மங்கையும் தன் பொறுப்புணர்ந்து நடந்தாள்.

குமாரதேவனைப்பற்றிச் சரசுவதியம்மாள் விசாரித்துப் பார்த்தாள். அவள் கேள்விப் பட்டது ஒன்றுவது நல்ல மாதிரியாகப் பட வில்லை. 'எத்தனையோ பெண்களின் மானத் தைப் போக்கினவன்' என்று கேட்டபோது அவள் உடம்பின் ஒவ்வோர் அணுவும் நடுங் கிற்று. மகளிடம் பேசிப் பார்த்தாள்; பலன் ஒன்றுமில்லை. "மற்றப் பெண்களுக்கு மன உறுதி இல்லை என்றால், அதற்கு யார் என்ன செய்யலாம்?" என்று ஒருதடவை சொல்லு வாள். "அவரை நான் திருமணம் செய்து கொள்ளப் போகிறேனு? அப்படி யார் முடிவு செய்தது?" என்று ஒருதடவை கேட்பாள். "அவருக்கென்ன குறை? அவரைத் திருமணம் செய்துகொள்ளப் புண்ணியம் செய்திருக்க வேண்டுமே" என்று ஒருதடவை பேசுவாள். "என்ன அம்மா! சுத்தப் பைத்தியக்காரியாக இருக்கிறுயே! அவரைக் கலியாணம் செய்து கொண்டால் நான் என்ன ஆவது?" என்று ஒரு தடவை கேட்பாள். ஒவ்வொரு சமயத்தில் சரசுவதியம்மாள் எவ்வளவுதான் கேட்டாலும் மங்கை வாயையே திறக்கமாட்டாள். ஆக, மகள் என்னதான் நினைத்திருக்கிறுள் என்று தாயா ருக்குத் தெரியவில்லை. அதற்காக அவள் செய்த முயற்சி யெல்லாம் சிறிதாவது பலன் தரவே யில்லை.

இனி ஒன்றும் நம்மால் முடியாது என்ற நிலை ஏற்படுகிறபோது, 'நாமென்ன செய்யலாம்? எல்லாம் விதி விட்ட வழி ஆகட்டும். அன்றைக்கு எழுதியவன் இன்று அழித்தா எழுதுவான்' என்று அறிவை அடைக்கலம் புகச்செய்து மனத்துக்கு அமைதியைப் புகட்டுவது மனித இயல்பு. சரசுவதியம்மாளுக்கும் அந்த நிலைதான் ஏற்பட்டது. "எல்லாம் இந்தக் கோணல் எழுத்தால் வந்த வினை. இரண்டு எழுத்துப் படித்து என்னமோ தஸ்புஸ் என்று பேசினால் போதுமா? உலக விவகாரம் தெரியவேண்டாமா?" என்றெல்லாம் அலுத்துக்கொள்வாள். "கோணல் வகிடும் கோணல் புத்தியும்தவிர வேறு என்ன இந்தக் காலத்தில் இருக்கிறது?" என்று காலத்தைப் பழிப்பாள். "எல்லாம் அவர் செய்தது" என்று தன் கணவனை நினைந்து புழுங்குவாள். கடைசியில் "ஆண்டவன் விட்ட வழி ஆகட்டும். நாம் என்ன செய்யக் கிடக்கிறது? தலைவிதிப்படிதானே நடக்கும்" என்று மனத்தைச் சமாதானப் படுத்திவிடப் பார்ப்பாள். 'இதற்கெல்லாம் மன அமைதி கிட்டுமா? பெற்ற மனமல்லவா? அது பித்துக் கொண்டு திண்டாடிற்று.

வீட்டிலேயே இவ்வளவு குழப்பம் என்றால் வெளியே கேட்பானேன்! அதுவும் இளமைத் துடிப்பும் மிடுக்கும் குறும்பும் பெற்றுள்ள கல்லூரித் தேவர்களும் தேவதைகளும் சும்மாவா இருப்பார்கள்? கல்லூரி மாணவர்களுக்குள்

எவ்வளவோ பேச்சுக்கள் நிகழ்ந்தன. குமார தேவனையும் மங்கையையும் பல சுட்டுவிரல்கள் கரந்திருந்து சுட்டிக் காட்டின. உதடுகள் காற்றூதுவதுபோல் எவ்வளவோ கதைகளை மெல்லெனப் பேசின.

குமாரதேவனுக்கும் மங்கைக்கும் இந்தச் சுட்டுதல்களும் காற்றில் கலந்த குரல்களும் தெரியவந்தன. குமாரதேவனுக்கு உள்ளூர மகிழ்ச்சிதான். அதைப்பற்றி அடிக்கடி மங்கையிடம் வலிய எடுத்துப் பேசுவான். மங்கையின் புன்முறுவல்தான் அப்போதெல்லாம் அவன் கண்டது. அந்தப் புன்முறுவலை அடிப்படையாக வைத்துக் குமாரதேவன் இன்ப மாளிகைகள் எழுப்பினுன்.

மங்கையர் புன்முறுவல் அவனுக்குப் பழக்கந்தான். ஆனல், மங்கையின் புன்முறுவல் மற்றவர் புன்முறுவலினும் மிகுதியாக அவனை ஈர்த்தது. மகுடியின் இசைக்கு ஏற்ப நாகம் படம் விரித்து ஆடும். மகுடி இசையின் இனிமை அளவிறந்து செல்லுமானல் நாகம் அசையாமல் நின்றுவிடும் என்பார்கள். அதுபோலவே மற்றப் பெண்களின் முறுவலில் திளைத்த குமார தேவன் மங்கையின் முறுவலில் சிக்குண்டு அடிமையாய்ச் செயலற்று நின்ருன்.

நாகம் அசைவற்று நிற்கிறது—இசையில் மயங்கிக் கிடக்கின்ற அதனைப் பாம்பாட்டி

என்ன வேண்டுமானாலும் செய்யலாம். எல்லாம் மகுடியின் பெருமை.

மங்கையின் முறுவலுக்குக் குமாரதேவன் அடிமை. முல்லைப் பற்களின் முறுவலி லிருந்து கிளம்பும் ஒளிக்கற்றைகள் பின்னிய வலையில் குமாரதேவன் சிக்கினான். மங்கை அவனை என்ன வேண்டுமானாலும் செய்யலாம். அவள் மனம், அவன் வாழ்வு.

முறுவலுக்கு அடிபணிந்த குமாரனை மங்கை பற்பல கேள்விகள் கேட்பாள். அவை அவனுடைய ஆடம்பரங்களைப் பற்றியன. "அதனால் என்ன? பணம் எதற்குத்தான் இருக் கிறது? ஆடைகள் வாங்குவது பாவமா? ஆனந்தமாய் வாழ்வது தவறா?" என்றெல்லாம் பேசுவான். என்னதான் அவன் குரலிலே தெளிவு இருப்பதாக எண்ணிக்கொண்டாலும் மங்கையிடம் பேசுகின்றபோது அவன் மனம் உறுத்தத்தான் செய்தது. தன் காமக் கூத்துக் களை மறைத்து மறைத்துப் பேசினான்; மனம் போராடிற்று. 'இதெல்லாம் தெரிந்தால் மங்கை நம்மைப்பற்றி என்ன நினைப்பாள்?' என்ற எண்ணத்தால் அவற்றை மறைத்தான்.

அவனுடைய ஆடம்பரத்தைப்பற்றிமட்டும் வினவிய மங்கையர்க்கரசி அவன் மறைத்ததாக எண்ணியவற்றைப் பற்றியே ஒருநாள் கேட்கத் தொடங்கினாள். குமாரதேவனுக்கு ஒன்றும் புரியவில்லை. வாய் மூடி மௌனியாக நிற்பதைத் தவிர வேறு வழியில்லை.

நின்ருன்; அசைவற்று நின்ருன். மனத்திலே கொந்தளிப்பு; மூளையிலே கொதிப்பு. சிந்தனை சிதறிற்று; மூளை குழம்பிற்று. திடீரென உடலெல்லாம் தீக்குளித்ததுபோல ஆயிற்று. அகத்துப் போராட்டத்தை மறைத்து விடப் பார்த்தான்—அசையாமல் நின்ருன். அவன் இப்போது மங்கையின் அடிமை. குற்றம் செய்யும்போது கையும் களவுமாய் அகப்பட்ட குழந்தை நிற்கின்றதைப்போல் நின்ருன், குமாரதேவன். தவறுதான் என்று உணர்ந்த குழந்தை, 'கண்டுபிடித்துவிட்டார்களே' என்ற அவமானத்தோடு நிற்பதைப்போல அவன் நின்ருன். 'இனிமேல் செய்யவில்லை. செய்ததெல்லாம் தப்பு' என்று சொல்லாமல் சொல்லும் குழந்தையைப் போலக் குமாரதேவன் நின்ருன். 'ஐயையோ! தெரியாமல் செய்துவிட்டேன். பக்கத்து வீட்டு அம்பி சொன்ஞன். அதனுல் செய்தேன்' என்று பரபரவென்று விழியுருட்டி நயனத்தால் பேசும் குழந்தையைப்போல விழித்துக்கொண்டு நின்ருன் குமாரதேவன்.

குழந்தை தண்டனையை எதிர்பார்த்து நிற்கும். நல்லாசிரியன் விரல்நீட்டி மெல்லென அதனைப் 'போ' என்று சொல்லுவான். குழந்தை தலைகுனிந்து செல்லும்.

குமாரதேவன் ஒன்றும் புரியாமல் நின்ருன். 'இவளுக்கு எப்படித் தெரிந்தது' என்று தெரியாமல் நின்ருன். 'மங்கையின் அன்பை இழந்துவிட்டோமே' என்று மனம் கசிந்து

நின்ருன். மங்கை புன்னகை செய்தாள். அப்போது குமாரதேவனுக்கு அந்தப் புன்முறுவல் கொலைத் தண்டனை—அல்ல அல்ல—மனப் புண்ணுக்கு மருந்து போன்றிருந்தது.

குனிந்த தலை நிமிரவில்லை. மங்கை தன் அன்னையிடம் சென்ருள்; குமாரதேவன் தலையை நிமிர்த்தாமல் சுமந்துகொண்டு விடுதிக்குச் சென்ருன்.

பிறகு பதினைந்து நாட்களுக்கு மங்கையைப் பார்க்க வரவில்லை. மங்கையை மறந்துவிடப் பார்க்கிருனு? இல்லை. அதுதான் முடியாதே!

## 10

அவளுக்கு ஒரு கடிதம் எழுதினன். தன் மாசு முழுவதையும் கரைத்து அக்கடிதத்தில் இறக்கிவிட்டான் என்றுதான் சொல்லவேண்டும். மங்கையின் அன்புள்ளம் புன்முறுவல் வாயிலாகத் தந்த தண்டனை அவனை அப்படி எழுதச் செய்தது. தன் உடலே ஒரு பாவ மூட்டை—பாவ மூட்டைகளின் பரம்பரையிலே தோன்றிய பாவமூட்டை என்றெல்லாம் எழுதினன். அவன் எழுதியிருந்த தீவிரம் மங்கையின் மனத்தைப் பிடித்து மிகவும் பரிதாபகரமாக ஆட்டிவிட்டது. குமாரதேவன் தற்கொலை செய்துகொள்வான் என்ற முடிவுக்கு அவள் வந்துவிட்டாள். கசிந்த உள்ளத்தின ளாகிய மங்கையர்க்கரசிக்கு மனிதன் தற்கொலை செய்துகொள்வது என்ற கருத்தை நினைக்கக்கூட முடிய வில்லை.

ஓடினுள், செல்வப்பன் மாணவர் விடுதிக்கு ஓடிவந்தாள். மாணவர்க்கு ஒரே வியப்பு! "என்ன துணிச்சலடா இவளுக்கு! தேடி வந்து விட்டாளே!" என்று பேசாத மாணவன் இல்லை. அவர்களுக்கு என்ன! மாதர் சிரித்தால் காதல் என்று எண்ணுகிறவர்கள்தாமே? தெருவில் பேசுகிற இருவர் ஆடவனும் பெண்ணுமாக இருக்க நேர்ந்தால் அவர்களைக் காதலராகவே ஆக்கிவிட எண்ணுகிற இளைஞர்கள்!—இது இன்றைய உலகம். நெடுநாளாகக் குமார—மங்கையர் கூட்டுறவுபற்றி என்னென்னவோ கட்டிவிட்டுக்கொண் டிருந்த மாணவர்களுக்கு மங்கையர்க்கரசியின் வருகை பெரிய விருந்தாக ஆயிற்று. சும்மா மெல்லும் வாய்க்கு அவல் கிடைத்த மாதிரிதான்.

விடுதியின் வாசலில் நின்றுகொண்டு குமாரதேவனை அழைத்துவர ஆள் அனுப்பினுள், மங்கை. குமாரதேவனுக்கு என்ன செய்வதென்று விளங்கவில்லை. மங்கையை அவன் எதிர்பார்க்க வில்லை. ஆடவர் விடுதிதேடி ஒரு பெண் வருவாள் என்று யார்தான் எதிர்பார்க்க முடியும்? எதிர்பார்க்கிறதாவது! வந்தே விட்டாள். என்ன செய்வது! 'அவள் முகத்தில் எப்படி விழிப்பது' என்ற கேள்வி அவன் சிந்தனையை ஆட்டிப் படைத்தது. ஒருவாறு புறப்பட்டான். அவன் வரும் முன்னரே அநேகமாக விடுதியிலிருந்த எல்லா மாணவர்களும் திறந்த வெளியிடத்துக்கு வந்து, தொலைவிலே அங்கங்கே

நின்றுகொண் டிருந்தார்கள். காசில்லாமல் திரைப்படம் பார்ப்பதாக அவர்கள் நினைவு!

குமாரதேவனும் மங்கையர்க்கரசியும் கடற் கரைக்குச் சென்றார்கள். மங்கை பேசினாள். குமாரன் கேட்டான். சொற்கள் வடிவில் உணர்ச்சியைக் கிளப்பிவிடும் அறிவுரைகள் அவன் செவிவழியாகப் புகுந்தன.

கடைசியாக மூளை தெளிந்தது. குனிந்த தலை நிமிர்ந்தது.

கண்களில் நீர் மல்கி இருந்தது. அவன் கண்களில்மட்டு மல்ல, அவள் கண்களிலும்.

குமாரதேவன் கைகள் குவிந்தன. மங்கை யை வணங்கினான்.

"சீ, இதென்ன அசட்டுத்தனம்? ஏன் அழுகிறீர்கள்?"

"அரசி!..............."

குமாரதேவனுக்கு வார்த்தை எழவில்லை. சிறந்த சொற்பொழிவாளன்தான். ஆனால், சொல் அப்போது கைகொடுக்க வரவில்லை. உதடு கள் துடித்தன. ஒன்றோடொன்று பொருந்த மாட்டாமல் துடித்தன. ஆனால், சொல் ஒன்றாவது பிறக்கவில்லை.

"அரசி!..............."

"அசடுபோல் நடந்துகொள்ள வேண்டாம். நான் சொன்னதுமட்டும் நினைவிருக்கட்டும்.

நாட்டைச் சீர்படுத்துவதற்குமுன் நம்மைச் சீர்படுத்த வேண்டும். பிறர் வாழ்வைப்பற்றிச் சிந்திக்குமுன் நம் வாழ்வைப் பற்றிச் சிந்திக்க வேண்டும்.

"பிறரை அடிமைகளாய் நசுக்காதீர்கள் என்று மேடைமேல் ஏறிப் பேசப்போவதற்கு முன் அதை நம் வாழ்விலே நடத்திக் காட்ட வேண்டும். உள்ளொன்று, புறத்தே வேறென்று; பேச் சொன்று, செயல் வேறென்று என்ற நிலை வேண்டாம்...............

"பிறர் ஒழுக்கத்தைப்பற்றிக் கேவலமாகப் பேசுகிறுமே...........நாம் நம் ஒழுக்கத்தைப் பற்றிச் சிந்திக்க வேண்டாமா? சமூகச் சீர்திருத் தத்தைப்பற்றி எவ்வளவு பேசுகிறேம் நாம்! மனம் ஒன்றித்தான் அவ்வாறு பேசுகிறேமா? ஆண் ஒருவனும் பெண் ஒருத்தியும் சந்தித் தால் பழித்துப் பேசுகிற நாம் சமூக சீர்திருத் தத்தைப்பற்றிப் பேசலாமா? பெண் ஒருத்தி சிரித்துப் பேசினல்—புன்முறுவல் அவள் இதழ் ஓரத்திலே மலருமானல்-அவள் நம் காதலி என்று எண்ணுகிற நீங்கள் நாட்டுப்பணி செய்கிறேன் என்று எப்படிச் சொல்லலாம்? பல நங்கையர் வாழ்வுக்குக் குழிதோண்டிய நீங்கள் காந்தியடி களின் பெயரைப் பேசலாமா?"....

மங்கை பேசிக்கொண்டே போனுள். அவள் தன்னை மறந்து பேசினுள். குமாரதேவன் குழந் தைபோல் அழுதான். மங்கையின் புன்முறு

வலைத் தவருக உணர்ந்ததற்காக அவன் அழ வில்லை. அந்த அன்புள்ளத்திலே இவ்வளவு தீயைக் கிளப்பிவிட்டோமே என்றுதான் அழுதான்.

கடல் இரைச்சலுக்குத்தான் ஓய்வு கிடையாது. மழை இரைச்சலுக்குமா ஓய்வு இல்லை? மங்கை பேச்சை நிறுத்தினுள்; களைத்து நிறுத்தினுள்.

## 11

**கா**லம் யாருக்காகவும் நிற்பதில்லை. குமாரதேவன் ஆனர்ஸ் தேர்வில் வெற்றி பெற்ருன். திருமணமும் செய்துகொண்டான். யாரை?

மங்கையர்க்கரசியை அல்ல. அவள் குறித்த—குமாரதேவன் வாழ்க்கைத் துணையாகக் குறித்த—அல்லியை மணந்தான். அல்லி கல்லூரி வாழ்வில் குமாரதேவனை நாடி நலிந்த பெண். மங்கையின் அன்பால் குமாரதேவன் மனைவியானுள்.

இன்னமும் மங்கையர்க்கரசியைச் சுட்டிச் சுட்டிப் பல சுட்டு விரல்கள் நீளுகின்றன. கல்லூரிகளின் சுவர்களிலே குமாரதேவன் பெயரோடு இணைத்து என்றே எழுதப்பட்ட அவளுடைய பெயரைச் சுட்டி மாணவர்கள் கதைகள் பேசுகிருர்கள். "அல்லி பாவம், அறியாப் பெண். உண்மை தெரியாமல் அவனை மணந்து

கொண்டாள்" என்று மாணவ 'மணிகள்' இரக்கப்படுகிறார்கள்.

மங்கை எல். டி. படிக்கிறாள்—ஆசிரியை யாக வேண்டுமென்பது அவள் முடிவு.

பாத்திரம் நிறையப் பால் இருந்தது. ஒரு சொட்டு மோர் பிரையாகக் கலந்தது. பால் முழுவதும் தயிராகிவிட்டது. அந்தப் பிரைத் துளியைத் தனியாகப் பிரிக்க முடியுமா? பிரை யாக விழுந்த துளி தன்னை இழந்துவிட்டது. பாலோடு கலந்து—தயிரோடு உறைந்து தன்னை மாய்த்துக்கொண்டது.

மங்கை தன்னை இழந்துவிட்டாள். தாய்மை கெடாத மோர்த்துளிதான். பாலோடு கலந்து தன்னை இழந்தது. குமாரதேவன் வாழ்வில் புகுந்து மங்கை தன்னை இழந்தாள். குமாரன் அல்லி வாழ்வு மலர்ந்தது. அந்த மலர்ச்சியிலே மங்கையின் வாழ்வு மறைந்தது. மங்கை தன்னை இழந்தாள்; எல். டி. படிக்கிறாள்.

சமூகத்தின் சுட்டு விரல்கள் அவளைச் சுட்டு கின்றன. தன்னை இழந்துவிட்ட மங்கை—யாரையுமே இலட்சியம் செய்யாத மங்கை—சுட்டு விரல்களிடையே கவலையின்றி உலவு கிறாள். கவலைப்பட்டு முடியுமா? தயிரிலிருந்து பிரைமோர் தனியாகப் பிரிந்து வர முடியுமா?

# அதே பிறவி

“ அன்பர்பணி செய்யஎனை ஆளாக்கி விட்டு
விட்டால்
இன்ப நிலை தானேவந் தெய்தும் பராபரமே ”

என்று இனிய குரலெடுத்து ஈடுபாட்டோடு இசைத்துக்கொண் டிருந்தார் கந்தசாமியா பிள்ளை.

* * *

சிறு பையனாக இருந்தபோது அவருடைய அன்னையார் சொக்கம்மாள் “ காலையில் எழுந்து கடவுளைப் பூசை செய் ” என்று சொல்லிக் கொடுத்திருந்தார். விவரந்தெரிந்த நாளாகக்

கந்தசாமியா பிள்ளை அந்த அன்புக்கட்டளையை நிறைவேற்றத் தவறியதே கிடையாது.

பள்ளிக்கூடப் படிப்பு, கல்லூரிப் படிப்பு எல்லாம் கடந்து இன்று பெரிய அலுவல் பார்க்கிறார். "நம்ம பிள்ளையாண்டான் சில்லா முனுசு வேலையிலே இருந்தாலும் தங்கக் கம்பி தான்....நான் கிறின கோட்டைத் தாண்டுவதுண்டா? நீயும்தான் இருக்கிறே....என்ன பண்ண? ஒற்றை உப்புக்கல்லுக்கு ஆகுமா?" என்று சொக்கம்மை தன் வீட்டு வேலைக்காரன் வேலயனிடம் அடிக்கடி தான் பெற்ற 'தங்கக் கம்பி'யைப்பற்றிச் சொல்லிப் பெருமைப்பட்டுக் கொள்வாள். வேலயனைப் பெற்று வளர்த்த சொக்காயி அவனைப்பற்றிக் குறை சொல்வதற்கென்றே அடிக்கடி 'முன்சீப்' வீட்டுக்கு வருவதுண்டு. பெரிய அதிகாரிகள் வீட்டார்களெல்லாம் வேலைக்காரர்களைப்பற்றிக் குறை சொல்லாமல் இருக்கமாட்டார்கள். 'ஐயோ என்றால் ஆறுமாதப் பாவம்' என்பது சேவகர்களைப் பொறுத்தவரை அவர்கள் கையாளும் கொள்கை. சும்மா மெல்லுகிற வாய், அவல் கிடைத்தால் விடுமா? வேலயனைப்பற்றிச் சொக்காயி சொன்ன குறையெல்லாம் எரிகின்ற நெருப்பில் நெய்விட்ட மாதிரியாகத்தான் ஆயிற்று. "வளைந்து குனிந்து வேலை செய்ய இந்த வயசிலேயே இந்தப் பயலுக்கு முடியலையே! இவனை நம்பி ஏதாவது குடித்தனம் உருப்படுமா?" என்றெல்லாம் அவள்

'ஒப்பாரி' வைத்துச் செல்லுவாள். அவள் கண்டாளா அதிகாரிகளின் நடைமுறையை? முனிசீப்பின் அன்னை ஒருநாள் "சொக்காயி, உன் பேரும் என் பேரும் ஒரே மாதிரியாக இருக்கிறதே! எங்கள் குடும்பத்துக்கென்றே ஆண்டவன் உன்னைப் படைத்திருக்கிறான், பார்த்தாயா?" என்று திருவாய் மலர்ந்தருளினாள். இது கேட்ட சொக்காயிக்கு உச்சியும் உள்ளமும் ஒருங்கே குளிர்ந்துவிட்டன. ஏழை சொக்காயி கண்டாளா, எதற்காக அந்தத் தெற்கத்தி அம்மா அப்படித் தேனொழுகப் பேசினார்களென்று! இப்படியெல்லாம் தேனொழுகப் பேசிக் குழையடித்துக் காரியத்தைச் சாதிப்பதில் அந்த அம்மாளுக்குள்ள திறமை வேறு யாருக்குமே கிடையாது. சொக்கம்மாள் பேசிய பேச்சிலே சொக்காயி சொக்கிப் போனாள். பலன் என்ன தெரியுமா? 'முன்சீப்' வீட்டுக்கு இரண்டு ரூபாய்ச் சம்பளத்தில் ஒரு வேலைக்காரி கிடைத்துவிட்டாள்! "உனக்கென்ன குறைச்சல்! உன் மகன் நம்ம பிள்ளையாண்டான் ஆபீசிலே இருபத்திரண்டு ரூபாய் வாங்குகிறான்! நீ வேறே சம்பாதிக்கிறாய்...." என்று அடிக்கடி அந்த ஏழைக் குடும்பத்தின் 'கிரம்பிய' வரும்படிபற்றிச் சொக்கம்மாள் சொக்காயியிடம் சொல்லுவாள். அதோடு நின்றுவிடுவதும் இல்லை. "ஆமா, இத்தனை சம்பாதிச்சும் என்ன பண்ண? பயலுக்கு ஒரு பெண்ணு குட்டியா பார்த்து ஒரு முடிச்சுப் போடுவதுதானே!" என்றும் சொல்லி வைப்

பாள். இதைக் கேட்டவுடனே வேலைக்காரி சொக்காயிக்கு உலகமே தன் காலடியில் கிடப்பது போன்ற ஒரு பெருமிதம் வந்துவிடும். "அம்மா உங்கள் தங்க மனசு யாருக்கு வரும்? அந்தப் பயல்தான் நான் சொன்னதைக் கேட்பதில்லை. என் தம்பி மகளைக் கலியாணம்பண்ணிக் கொள்ளச் சொல்லிச் சொல்லிப் பார்க்கிறேன், ஒன்றும் பலிக்கவில்லையே! நீங்கள் சொன்னாலாவது பயல் பணியமாட்டானா, பார்க்கலாம்" என்று பேசி, தன் திட்டத்தையும் வெளியிடுவாள். இப்படியாக இரண்டு சொக்கிகளின் பேச்சை ஒரு நாள் 'முனிசீப்'பின் செல்ல மகள் அம்மு கேட்டுவிட்டாள். துடுக்குக்காரப் பெண், அது சும்மா இருக்கக்கூடாதோ! "ஏன் பாட்டி, நம்ம வீட்டுக்கு இன்னொரு வேலைக்காரி வேணுமா?" என்று கேட்டு வைத்தது. 'அன்பே சிவம்' என்று தன் அருமை மகனுக்கு உபதேசித்த சொக்கம்மாளின் முகத்தை அப்போது பார்த்திருக்க வேண்டுமே!

கந்தசாமியா பிள்ளையைப் பூசை அறையில் பாராயணம் செய்த கோலத்திலேயே விட்டு விட்டோமா? சரி, அவரிடமே போகலாம். நன்றாக உற்றுக் கேளுங்கள்! என்ன அருமையான பாட்டு!

அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருப் பாரே!

இனிய ஓசை! நல்ல பண்முறை! சரி, அதோ அந்தச் சோபாவில் அமர்ந்து கேட்கலாம், வாருங்கள். நாம் பூசை அறைக்குள் போவது அவ்வளவு நன்ருயிராது. சிவபூசை வேளையில் கரடி விடுவது போல இருக்கும்.

........நல்ல பாட்டு என்று பாராட்டுகிற பான்மையிலேயே தூங்கிவிடாதீர்கள். இன்றைக்கு ஞாயிற்றுக்கிழமை யானதால் பூசை முடியக் கொஞ்சம் நேரமாகும்.

........அடடே, அது என்ன அந்த நாய்க் குட்டி அவ்வளவு உரிமையோடு பூசை அறைக் குள்ளே போகிறது! அடடா, பூசைவேளை யல்லவா? தீட்டுப் பட்டுவிடாதோ!....

"யாரடா அங்கே! ஒரு நாயையும் காணேமே! நாசமாய்ப் போக! எவனடா! மடைப் பயல்களா! வந்து தொலையேண்டா!...."

............திருமந்திரத்தில் இப்படி ஒன்றும் கிடையாது. சிவ வழிபாட்டில் ஈடுபட்டுள்ள கந்தசாமியா பிள்ளையவர்களை ருத்ர அம்சம் பிடித்துக்கொண்டது. வைரவர் வாகனம் பூசை யறைக்குள் எழுந்தருளியதுதான் இத்தனை ஊழிக் கூத்துக்கும் காரணம்.

வேலைக்கார வேலையன் கைகாலெல்லாம் நடுங்க, ஒண்டி ஒடுங்கிப் போய்ப் பூசையறைக் குள் நுழைகிருன், பாருங்கள். ஐயோ பாவம்,

அவன் சாம்பலாய்ப் போகாமல் இருக்க வேண்டுமே!

"ஏண்டா, நாயே! அங்கே என்ன இழ வெடுக்கிறாய்! ரோஸ் உள்ளே வருவதுகூடக் கழுதைக்குத் தெரிய'லேயோ! தூங்கு மூஞ்சிக் கோட்டானே! இழுத்துக்கொண்டு போடா, தரித்திரமே!"

—இத்தனை நாமாவளிகளையும் வாங்கிக் கொண்டு வேலையன் அந்தச் செல்லப் பிறவியை இழுத்துக்கொண்டு வந்துவிட்டான்............... இப்போது கேளுங்கள், உள்ளே அருச்சனை தொடங்கிவிட்டது...........சரி, இப்படி எவ்வளவு நேரம் இங்கேயே காத்துக் கிடப்பது என்று கவலைப்படுகிறீர்களா? வேண்டாம். அதோ, பொதுநலக் கழகச் செயலாளரும், தமிழ் வளர்ச்சிச் சபையின் தலைவரும் வருகிறார்கள். அவர்கள் பேசுவதைக் கேட்டுக்கொண் டிருக் கலாம். அதற்குள் 'ஐயா'வும் வந்துவிடுவார். அவரைப் பார்த்தவுடன் நம் வேலையும் முடிந்து விடும்.

"அடடே, நீங்களும் வந்திருக்கிறீர்களா? ஐயா அவர்களைப் பார்க்கத்தானே!........"

"ஓகோ, உங்களுக்குச் செய்தி தெரியாதா! இன்று மாலை நம் கழகத்திலே முன்சீப் ஐயா பேசுகிறார்கள்........"

"அப்படியா சேதி! எனக்குத் தெரியாது. காட்டூர்ச் சிவநெறிக் கழகத்திலே நேற்று ஒரு

கூட்டம். அதற்காகப் போயிருந்தேன். இன்று காலையில்தான் வந்தேன்........என்ன பொருள் ?"

"நடமாடும் கோயில்கள்"

"அடடா! என்ன அருமையான தலைப்பு! ஐயா அவர்கள் பேசுவதற்கு மிகவும் பொருத்த மானதுதான். அவர்கள் அருளின் வடிவ மல்லவா? மனிதர்களுக்குத் தொண்டு செய்வ தென்றால்........"

"அதை ஏன் கேட்கிறீர்கள்? ஐயா பேசினால் இன்றைக்கெல்லாம் கேட்டுக்கொண் டிருக்கலாமே! என்ன படிப்பு, என்ன அறிவு....!!"

"அதைச் சொல்லவில்லை. படித்திருக் கலாம். படித்தவர்க ளெல்லாம் படித்தபடியே நடக்கிறார்களா, என்ன ?........"

"ஆமாம், ஆமாம். நன்றாய்ச் சொன்னீர் கள். கற்க கசடறக் கற்பவை, கற்றபின் நிற்க அதற்குத் தக என்று வள்ளுவர் சொன்னது முன்சீப் ஐயாவுக்குத்தான் மிகவும் பொருத் தம்........"

"அன்பே சிவம் என்று முன்னே ஒரு தடவை பேசினார்கள். அடடா! என்ன அருமையான பேச்சு........"

"ஆமாம் ஆமாம். வெறும் மேடைப் பேச்சா! செயலிலும் அல்லவா நடத்திக் காட்டு கிறார்கள்? மனித உடல்களில்மட்டுமா சிவனைக்

காணுகிறார்கள்! ஒரு நாயை ஐயா வளர்க்கிறார்கள்....அது தெரியுமோ?"

"கூட்டத்துக்கெல்லாம் கூடவே அழைத்து வருகிறார்களே! நான் பார்த்திருக்கிறேன்........"

"அந்த நாயும் ஐயா என்றால் போதும்...."

— இந்த அளவுக்கு மேல் பேச்சு நீடிக்கவில்லை. அதோ பூசை அறையிலிருந்து கந்தசாமியா பிள்ளை வந்துவிட்டார்.

"வாருங்கள் வாருங்கள். நெடு நேரமாகக் காத்திருக்கிறீர்கள்போ லிருக்கிறது! சிவ பூசை முடிய இவ்வளவு நேரமாகி விட்டது........அந்தக் காலத்தி லிருந்தே இந்த நியமம் தவறுவதில்லை...." இது முனிசீப் ஐயாவின் பேச்சு.

"ஆமாம்........அதற்கென்ன தடை! நடக்க வேண்டியதுதானே........"

"இன்றைக்குத்தானே உங்கள் கழகக் கூட்டம்?"

"ஆமாம்; அதுதான் நினைவுபடுத்தலாம் என்று வந்தேன்........"

ஐயாவின் குரலைக் கேட்டவுடனே எங்கே இருந்தோ வந்துவிட்டது ரோஸ். யாரோ உட்கார்ந்திருப்பதைப் பார்த்தவுடனே தன் திருமந்திரத்தை அது பாடத் தொடங்கிவிட்டது.

"ளொள் ளொள்........"

"அடே, ரோஸ்! ஏண்டா உன் குரலை இப்போது காட்டுகிறாய்? பார்த்தீர்களா........ நம்ம நாய் மிகவும் அறிவுள்ள பிராணி........"—இது 'பிள்ளைவாள்' பேச்சு. இதற்குள் ரோஸ் அவருடைய ஆசனத்திலேயே சரிசமான மாக உட்கார்ந்து கொஞ்ச ஆரம்பித்துவிட்டது.

திடீரென்று 'ளொள் ளொள்' மந்திரத்தை உரக்க உச்சரித்துக்கொண்டே, வாசலை நோக்கிப் பாய்ந்தது. அங்கே நாய் என்ற பெயரோடு ஒரு எலும்புக் கூடு அசைந்து வந்து கொண்டிருந்தது. தரித்திரம் பிடித்த நாயைக் கண்டவுடனே ரோஸுக்கு ரோஷம் பொத்துக் கொண்டு வந்தது.......கந்தசாமிப் பிள்ளையும் குரல் காட்டினார்.

"டேய் வேலையா! தெருவிலே போகிற நாயையெல்லாம் உள்ளே விடாதே'டா! இந்த நாய்க்கு அதெல்லாம் கண்டால் பிடிக்க வில்லை........"

"சரிங்க எசமான்"

யாரோ இரண்டு பேர் வந்திருந்ததால் வேலையனுக்கு வேறு 'பட்டாபிஷேகம்' ஒன்றும் நடக்கவில்லை.

வந்திருந்தவர்கள் இருவரும் ஐயா அவர்களும் ஆன்ம உலகம்பற்றியும் 'அருளென்னும் அன்பு ஈன் குழவி' பற்றியும் நெடுநேரம் பேசினார்கள். பிறகு, ஒருவாறு விடைபெற்றுப் பிரிந்தார்கள்.

**போ**கும்போது இருவரும் பேசிக் கொண்டே போனர்கள்.

"ஐயா அவர்கள் பெரிய ஞானிதான். இருந்தாலும் அந்தத் தெரு நாய்பற்றி ஏன் அப்படிச் சொன்னர்கள்"

"எல்லாப் பிறவியும் ஒன்றுதான். இருந்தாலும், ஐயா அவர்கள் ஏன் இந்த மாதிரி......."

— இவர்கள் என்னதான் ஆராய்ந்தாலும் உண்மையை அவர்களால் காணமுடியாது. காரணம் கந்தசாமிப்பிள்ளை என்ற சடலத்தை மனிதனுக அவர்கள் காணவில்லை. 'முன்சீப் அறிஞர்' ஆகத்தான் காணுகிறார்கள். 'அனுபவ ஞானி' யாகிய வேலையனுக்கு அந்த உண்மை தெரியும்.

"ஒரே பிறவியாய் இருந்துவிட்டால் மட்டும் போதுமா? சோபாவில் சாய்கிற நாயும் வாசலில் தூங்கிவிழுகிற நாயும் ஒன்ருகிவிடவா முடியும்?"

# ராயரால் வந்த வினை

"ஒரு ஊரிலே........" என்று கனக ரத்தினம் தொடங்கினன்.

"ஒரு கழுதை இருந்ததாம்........" என்று வாக்கியத்தை முடித்தாள் அவன் மனைவி கமலினி. அதோடு நிற்கவில்லை; மேலே தொடர்ந்தாள். "உங்களிடம் கதை கேட்கிற ஆசையெல்லாம் பறந்துபோய் எவ்வளவோ காலமாகிவிட்டதே! இந்தக் கழுதையும் குட்டிச் சுவரும் ஏன்தான் இப்படி என் உயிரை வாங்கவேணும்!"

"இந்தா, கமலி! என்னைக் கழுதை என்ரு சொல்லுகிருய்?

“அப்படி’ன்னு........? நான் குட்டிச் சுவரா ?........

இப்படியாக அவர்கள் பேசிக்கொள்வது இது முதல் தடவையல்ல. இதோடு குறைந்தது ஆயிரம் முறையாவது மேற்படி உரையாடல் நடந்திருக்கும்.

கலியாணம் ஆனதிலிருந்து கதை கதை யென்று நச்சரிப்பாள் கமலினி. எத்தனை பத்திரிகைகள், கதைப் புத்தகங்கள் கொண்டு வந்து போட்டாலும் அவள் பொழுதுபோக்குக் குக் கட்டிவர முடியாது. அத்தனையும் படித்து விட்டுக் கனகரத்தினம் பக்கத்தில் வந்து உட் கார்ந்துகொண்டு, “அத்தான், ஒரு கதை சொல்லுங்களேன்” என்று கேட்க ஆரம்பித்து விடுவாள்.

கல்லூரி மாணவர்களின் கட்டுரை ஏடு களைத் திருத்துவதற்கே நேரம் எங்கேயாவது கடன் வாங்கமுடியுமா என்று பார்க்கிற கனகரத் தினத்துக்குக் கதை சொல்லப் பொறுமை எங்கே இருக்கப்போகிறது! இதிலிருந்து தப்பத் தான் பத்திரிகைகளும் கதைப் புத்தகங்களும் கொண்டுவந்து குவித்தான். கமலியின் கதைப் பசி காயசண்டிகையின் ஆனைத்தீயைவிடப் பெரிதாயிருந்தது. “அத்தான் ஒரு கதை........” என்ற அவள் வந்து உட்காருவதைப் பார்த் தால், பாலுக்குக் கெஞ்சும் குழந்தைபோல இருக்கும்.

கடைசியில் அவனுக்கு வேறு வழியிராது; ஏதாவது கதை சொல்லுவான். எத்தனை நாளைக்குத்தான் சொல்லமுடியும்! பத்திரிகையில் கதை எழுதுவது என்றால் பரவாயில்லை. பத்துக் கதை தயார் பண்ணிவிட்டால், அவற்றைப் பதினாயிரம் கதைகளாகக்கூட எழுதலாம். பேரையும் ஊரையும் மாற்றிவிட்டால் போது மல்லவா? இந்தத் தந்திரம் கமலியிடம் பலிக்க வில்லை.

"ஹூக்கும்! முந்தாநாள் சொன்ன கதை தானே இது? யாரை ஏமாற்றப் பார்க்கிறீர் கள்? வேறே கதை சொல்லுங்கள்" என்று பாதியிலேயே ஆரம்பித்துவிடுவாள்.

வேறு வழி திகையாமல் கோமாளித் தனமான ஒரு முறையைக் கையாள ஆரம் பித்தான் கனகரத்தினம்.

இந்தப் புது நாடகம் ஒரு நாள் மாலை ஆரம்பித்தது. கமலி அடுக்களையில் வேலையாக இருந்தாள். கனகரத்தினம் வலியச் சென்று "கமலி, ஒரு கதை சொல்லட்டுமா" என்று கேட்டான். கமலி, "என்ன, கதையா? இருங்கள் இதோ வந்துவிட்டேன்" என்று சொல்லி ஓட்டமாக வெளியே போய் எதையோ பார்த்து விட்டு வந்தாள்.

"வெளியே போய் என்ன பார்த்து வந்தாய்?"

"மழை வருகிறதோ என்று பார்த்தேன்."

"ஏன் ?"

"இல்லே, நீங்களாக வந்து கதை சொல்லு கிறேன் என்கிறீர்களே, மழைதான் வருகிற தோ என்று பார்த்தேன்........" என்று சிரித் தாள்.

கனகரத்தினம் தனக்குள் சிரித்துக் கொண் டான்.

"சரி, இப்போ என்ன, கதை வேணுமா வேண்டாமா ?" என்று முடுக்கினன்.

"அடியம்மா! கிராக்கியைப் பாரேன்...." என்று சொல்லிக்கொண்டே, கையைக் கழுவி விட்டுக் கதை கேட்கத் தயாரானள்.

கதை ஆரம்பித்தது :

"தஞ்சாவூரிலே நடந்தது இந்தக் கதை. அப்போது சரபோஜி மகாராஜா ஆண்டு கொண் டிருந்த காலம்........"

"ஏது பெரிய சரித்திரப் பின்னல் போல் இருக்கிறதே........" என்று குறுக்கே ஒரு பேச் சை வீசினள் கமலி.

"உஷ், பேசாமல் கேட்கவேண்டும். நடுவி லே பேசினல் ஒன்றும் சரிப்படாது........"

"சரிசரி, இனிமேல் இல்லே. கதை மேலே போகட்டும்...."

“என்ன சொன்னேன்........ஓகோ............ ஆமாம்........சரபோஜி மகாராஜாவின் அரண் மனைக் கிட்ட ஒரு குட்டிச்சுவர் இருந்தது. குட்டிச் சுவருக்குப் பக்கத்திலே........”

கனகரத்தினம் தயங்கினான். “ஏன், மேலே சொல்லுங்கள். நான் தூங்கவில்லை........” என்று அவனைத் தூண்டிவிட்டாள். வந்த சிரிப்பை அடக்கிக்கொண்டு மேலே கதையைச் செலுத் தினான்.

“குட்டிச் சுவர் இருந்ததா? அதன் பக்கத் திலே எப்போது பார்த்தாலும் ஒரு கழுதை நின்றுகொண்டே இருக்கும். அப்புறம் ஒரு நாள் அந்தக் கழுதை செத்துப்போயிற்று........”

மேலே கதை வளரவில்லை.

“அப்புறம்?” என்றாள் கமலி.

“அவ்வளவுதான். அதுதான் கதாநாய கனான கழுதையே செத்துப்போச்சே; பிறகு எப்படிக் கதை வளரும்? அவ்வளவுதான்.”

கமலிக்கு வந்த ஆத்திரம் இவ்வளவுதான் என்று சொல்லமுடியாது. ‘மோவாய்க் கட்டை’ யைத் தோளிலே இடித்த இடிப்பு........! இரண்டு நாளைக்காவது வலி இருந்திருக்கும்.

இதற்கப்புறம் அவள் ஏன் கதை கேட் கிறாள்? ஆனாலும், கனகரத்தினம் அடிக்கடி

வலிய வந்து 'கதை' பண்ணுவான். எல்லாம் பழைய கழுதையும் குட்டிச் சுவருமாகவேதான் முடியும்.

ஒருநாள் வருவான். "கேட்டாயா கமலி, நேற்றுக் காலையிலே........"

"என்ன என்ன" என்று கேட்டால் போதும். உடனே, "ஒரு கழுதை........" என்று ஆரம்பிப்பான். "குட்டிச் சுவருக்குப் பக்கத்தில் இருந்தது" என்று கமலி முடித்துவிட்டு, ஒரு வெட்டுப் போட்டுக் கழுத்தைத் திருப்பிக் கொள்வாள். இப்படி எத்தனையோ வகை யான பீடிகைகள் போடுவான். பழையபடி கழுதையும் குட்டிச்சுவரும் வந்து சேரும். இதன் விளைவுதான், எந்நேரமும் அவன் கட்டுரை நோட்டுகளையே கட்டி அழுவது!

இன்றைக்கோ உண்மையாகவே ஒரு கதை அவளிடம் சொல்லவேண்டி யிருந்தது. ஆனல், கேட்கத் தயாராயிருந்தால்தானே? அவன், "கமலி, ஒரு கதை கேட்கிருயா...." என்ருன்.

"போதுமே! உங்கள் கழுதையும் குட்டிச் சுவரும். எனக்கு ஒன்றும் வேண்டாம்...."

அவனும் எவ்வளவோ சொல்லிப் பார்த் தான். பயன் ஒன்றும் இல்லை. கடைசியில், கதையை எழுதிவிடுவதென்று உட்கார்ந்தான்.

அவனைப் பார்க்கப் பரிதாபமாய் இருந்தது. ஒரு அழுக்கு வேட்டி; அதைவிட அழுக்கான துண்டு. மீசை தாடிக்கெல்லாம் ஒரு குறைவுமில்லை. என்னதான் பரதேசிக் கோலமாக இருந்தாலும் அவன் முகத்திலே அறிவு ஒளி பிரமாதமாக இருந்தது.

கல்லூரி அலுவலகத்துக்கு வந்து, "நான் பிரின்ஸ்பாலைப் பார்க்க வேண்டும்" என்றான். 'இந்தக் கோலத்தோடு அவரிடம் இவனுக்கு என்ன வேலை' என்று தயங்கிய குமாஸ்தா, என்ன நினைத்தாரோ, "உள்ளே இருக்கிறார், போய்ப் பாருங்கள்" என்று கல்லூரி முதல்வரின் அறையைக் காட்டிவிட்டார்.

"ஸாரி எக்ஸ்க்யூஸ் மீ...." என்று அப்பழுக்கற்ற ஆங்கிலத்தில் பேசத் தொடங்கினான், உள்ளே நுழைந்த அந்த வாலிபன்.

'இவ்வளவு அருமையாக ஆங்கிலம் பேசுகிறான் என்றால், நன்றாகப் படித்தவனாக இருக்க வேண்டுமே' என்று எண்ணிக்கொண்டே, முதல்வர் அவனை உட்காரச் சொன்னார். அவன் பேசப் பேச அவனைப்பற்றிய நல்ல எண்ணம் வளர்ந்துகொண்டே போயிற்று.

"எனக்கு ஏதாவது வேலை கொடுத்தால் மிகவும் கடமைப்பட்டவன் ஆவேன்" என்றான் அந்த இளைஞன்.

"உம்மால் என்ன வேலை பார்க்க முடியும்" என்று இரக்கத்தோடு கேட்டார் கல்லூரித் தலைவர் தருமநாதர்.

"நான் எம். ஏ. படித்தவன். ஆங்கில இலக்கியத்தைப் பட்டத்துக்கு உரிய பாடமாக எடுத்துப் படித்திருக்கிறேன்...."

"ஆமா....படித்துப் பட்டமெல்லாம் வாங்கியிருக்கிறீரே, உமக்கு ஏன் இந்தக் கோலம்?"

"அது பெரிய கதை சார். தங்களுக்குத் தடை இல்லையென்றால் சொல்லுகிறேன்."

"சொல்லுவதிலே தடையில்லையென்றால் கேட்க நான் தயார்."

"என் பெயர் ரவீந்திரன். என் அப்பா சென்னையில் பெரிய டாக்டர். டாக்டர் மோகன் என்றால் எல்லோருக்கும் தெரியும். நல்ல வரும்படியுண்டு...."

"அப்படியிருந்தும் இந்த மாதிரி நீர் புறப்படக் காரணம் என்ன?"

"அதுதானே சொல்ல வருகிறேன். நல்லவர்கள் என்று நாம் நினைப்பவர்கள் எல்லோருமே அப்படியே இருந்துவிடுவதில்லையல்லவா? எங்கள் அப்பாவுக்கு வாமதேவராயர் என்று ஒரு நண்பர். அவர் சொன்ன சொல்லுக்கு மறு பேச்சு என்பதே எங்கள் வீட்டில் கிடையாது.

"எனக்குமட்டும் அவரைக் கண்டாலே பிடிப்பது இல்லை. அவ்வளவு வயதான கிழவருக்கு என்னத்துக்கு ஜவ்வாதுப் பொட்டும், நாள் தவருமல் முக க்ஷவரமும்! எவ்வளவுதான் தன்னை அழகு செய்துகொண்டாலும் மனிதனுடைய தன்மை கண்ணிலே தெரிந்துதானே தீரும்!"

கதையைக் கொஞ்சம் நிறுத்திவிட்டு ரவீந்திரன் இருமினன். "சார் கொஞ்சம் வாட்டர் கிடைக்குமோ?........தருமநாதர் சேவகனை அழைத்துக் காப்பி வாங்கி வரச் சொன்னர்.

கதை மேலே போயிற்று.

"அந்த ராயருடைய கண்களைப் பார்க்கும் போது ஷேக்ஸ்பியரின் ஐயாகோதான் என் மனக்கண்முன் எழுந்து நிற்பான். அந்தப் படுபாவி ராயர் இல்லையென்ருல் இந்தக் கதி எனக்கு வந்திருக்குமா ?........"

"காப்பி வந்துவிட்டது. குடித்தபின் சொல்லும்" என்ருர் தருமநாதர். அவன் காப்பி குடிக்கும்போது, "ஆமா, அந்த ராயரால் உமக்கு என்ன வினை வந்துவிட்டது ?" என்று கேட்டார். காப்பி குடித்து முடிந்தது.

"அதைத்தானே சொல்ல வருகிறேன்... காப்பி ரொம்ப நன்ருயிருந்தது. மெனி தாங்க்ஸ்....உங்களைப் போலப் பொறுமையா

இருந்து அனுதாபத்தோடே என் துயரத்திலே பங்குகொள்கிறவர்களைப் பார்க்கும்போதுதான், வாழ்க்கையைப்பற்றியும் கொஞ்சம் நல்ல கருத்து உண்டாகிறது. அன்பில்லை என்ருல், சார், இதென்ன வாழ்க்கை! நானுந்தான் ஒரு வேலை கிடைக்காதா என்று ஒரு வருஷமாக அலைகிறேன்...."

தருமநாதர் மனம் 'ஐயோ பாவம்' என்று அவர் தலையை ஒரு குலுக்குக் குலுக்கிவிட்டது. "அப்புறம்....?" என்ருர். ரவீந்திரன் கதை சொன்னன்

"எங்கள் வீட்டுக்கு எதிரே ஒரு மாடி வீடு. அந்த வீட்டிலே ஒரு மலையாளக் குடும்பம். என்னுடைய அறையிலிருந்து பார்த்தால் அவர்கள் வீட்டு மாடியின் முன் அறை நன்ருகத் தெரியும். ஆனல், அந்த அறையின் ஜன்னல் எப்போதுமே மூடித்தான் கிடக்கும்.

"ஒரு நாள் இரவு ஏனே எனக்குத் தூக்கம் வரவில்லை. எழுந்து உலாவிக்கொண் டிருந்தேன். நிலா பால்போலக் காய்ந்துகொண் டிருந்தது. திடீரென்று ஏனே எதிர்வீட்டு ஜன்னலைப் பார்த்தேன். ஐயோ, அது வழக்கம் போல் மூடிக்கிடந்திருக்கக் கூடாதா? என்ன செய்வது! என் விதி?

"அந்த மாதிரியும் ஒரு பெண் அழகாய் இருக்க முடியுமா? மலையாளத்துப் பெண்கள் அழகாக இருப்பார்கள்தான். ஆனலும், அந்த

அழகு பிரமதேவனின் முழுத்திறமையையும் வேலை வாங்கியிருக்க வேண்டும்.

"அவள் தூங்கிக்கொண் டிருந்தாள். ஜன்னலை ஒட்டிக் கிடந்த கட்டிலில் அவள் தூங்கிக் கொண்டிருந்தாள். கூந்தல் அவிழ்ந்து தலையணையை அழகு செய்ய, அவளுடைய தாமரைக் கண்கள்....மன்னிக்க் வேண்டும்.... அழகியின் வர்ணனை தங்களிடம் எதற்குச் சொல்லவேண்டும்....

"அத்தனை நாளும் எதிரெதிர் வீடுகளில் இருந்தும் நாங்கள் பழகியதில்லை. ஏன், நான் அவளைச் சரியாகப் பார்த்ததுகூட இல்லை. அன்று இரவிலே அந்த அழகுக் கொழுவைக் கண்டபிறகு என் உள்ளம் என் வசத்தில் இல்லை. எப்படியாவது அவளைப் பழக்கம் பிடிக்க வேண்டும் என்று முடிவு செய்தேன்.

"பழகுவதில் எனக்கு ஒன்றும் சங்கடமே ஏற்படவில்லை. அவள் மருத்துவக் கல்லூரியில் படித்துக்கொண் டிருந்தாள். சென்னையில் கல்லூரி மாணவ மாணவிகள் பழகுவதில் அவ்வளவு கஷ்டம் இல்லையல்லவா?

"லில்லி—ஆமாம் அவள் பெயர் அது தான்—லில்லியும் நானும் நெருங்கிவிட்டோம். எங்கள் வீட்டாருக்கு ஒன்றும் தெரியாது. ஆனல், நான் இல்லையென்றல் அவளும் இருக்க மாட்டாள். அவள் இல்லையென்றல் நானும் இருக்கமாட்டேன். எங்கள் இருவரையும் பிரித்

தவை இரண்டுதாம். கல்லூரி ஒன்று; வீடு இன்னொன்று.

"எங்களைப் பிரித்தவை இரண்டுதாம் என்று சொன்னேன்? இல்லை. இந்தச் சமூகக் கட்டுப்பாடு என்ற அர்த்தமில்லாத என்னவோ ஒன்று இருக்கிறதை நாங்கள் மறந்துவிட வில்லை. அதனால்தான் எங்கள் காதலை வீட்டாருக்குத் தெரியாமலே வளர்த்துவந்தோம்.

"அவள் மலையாளக் கிறிஸ்தவப் பெண். நான் தமிழ் இந்து. ஜாதியைப்பற்றித் தெரிய வேண்டியதே இல்லை. காதல் முற்றி வளர்ந்து விட்டால், படித்து அறிவு முதிர்ந்த பெற்றோர் களிடம் சம்மதம் பெற்றுவிடலாம் என்று நாங்கள் எண்ணினோம். ஆனால், அந்தப் படுபாவி ராயரின் கண் எங்கள் காதல் கோட்டையை அந்தரத்தில் தொங்கும் ஆகாயக் கோட்டை யாக்கி விட்டது."

ரவீந்திரனின் முகத்தைக் கவனித்த தரும நாதர் சேவகனை அழைத்துச் சிற்றுண்டி கொண்டுதரச் சொன்னார். ரவீந்திரன் கதையை மேலே நடத்தினான்.

"ஒரு நாள் நானும் அவளும் 'பேதிங் ப்யூட்டி' பார்க்கப் போயிருந்தோம். படம் நடந்துகொண் டிருந்தது. திடீரென்று லில்லி, எதிர் வரிசையில் உட்கார்ந்திருந்த ஒருவரைக் காட்டி 'அதோ ராயர் வந்திருக்கிறார்போல்

இருக்கிறதே, நான் தனியாகப் போய் உட்கார்ந்துகொள்கிறேன்' என்ருள். 'சும்மா இங்கேதான் இரு. அவரெல்லாம் இங்கே ஏன் வருகிருர்? அவர் வீட்டிலே பெண்களே கிடையாதே! நீ காட்டுகிற ஆசாமி யாரோ, குடும்பத் தோடல்லவா இருக்கிருர்போல் இருக்கிறது? மேலும், அவர் இன்று யார் வீட்டிலோ அனுமார் பூஜைக்குப் போவதாகச் சொன்ஞரே" என்று அவளை என் பக்கத்திலேயே இருத்திவிட்டேன்.

"இடைவேளைக்காகப் படம் நின்றது. வெளிச்சம் வந்தது. இருட்டிலே தெளிந்திருந்த என் மனம் வெளிச்சத்தில் கலங்கிவிட்டது. ராயரேதான் அங்கே எவளோ ஒருத்தியோடு வந்திருந்தார். நாங்கள் பிரிவதற்கு முன்னல் அந்தக் கழுகுக் கண்கள் எங்களைக் குறிபார்த்து விட்டன. புருக்கள் இராஜாளிப் பறவைக்கு இரையாகாமல் எப்படித் தப்ப முடியும்....

"வாமதேவ ராயர் வைத்த தீ வெகு விரைவாக வேலை செய்தது. மறுநாள் மாலையில் நான் வெளியே கிளம்பியபோது என் தந்தை '144' பிறப்பித்தார். நான் புரிந்துகொண்டேன். 'சரி, இனி என்ன? சொல்லிவிட வேண்டியது தானே' என்று என் கதையைச் சொல்ல ஆரம்பித்தேன். "போதுமடா உன் கதை. எதிர் வீட்டுச் சிறுக்கியோடு நீ அடிக்கிற கூத்தெல்லாம் எனக்குத் தெரியாதா?....என்னதான் முன்னேற்றம் முற்போக்கு என்ருலும் இப்படித் தறிதலைத்தனமாகவா சுற்றுவது...." என்று தாம்

படித்தறிந்த பகுத்தறிவையெல்லாம் குப்பைக் கூடையிலே எறிந்துவிட்டு என்னைக் கண்டபடி ஏசினர். 'சாவகாசமாக இன்னெரு சமயம் பேசிக்கொள்ளலாம்' என்று பேசாமல் என் அறைக்குப் போய்விட்டேன்.

"ஆனல், அப்படிச் சாவகாசமாகப் பேசி என் காரியத்தைச் சாதித்துக்கொள்ள ஒரு அவசியமும் இல்லாமலே போய்விட்டது. ராயர் வைத்த தீ எதிர் வீட்டிலும் எப்படித்தான் பற்றியதோ, தெரியவில்லை. எதிர் வீட்டு வேலைக் காரன்மூலமாக லில்லி கொடுத்தனுப்பிய கடிதத்தி லிருந்து அவளுடைய பெற்ரேர்கள் படிப்பை நிறுத்திவிட்டார்கள் என்றும் அந்த மாதத்திலேயே எவனவது ஒருவன் கழுத்திலே அவளைக் கட்டி அனுப்பிவிடுவதாக முடிவு செய்துவிட்டார்கள் என்றும் தெரிந்துகொண் டேன்.

"பிறகு ஒரு தடவைகூட நானும் லில்லியும் சந்திக்கவே இல்லை. ஒருநாள் நள்ளிரவிலே தூக்கம் வராமல் அறையிலே குறுக்கும் நெடுக்கு மாக நடந்துகொண் டிருந்தவன், எதிரே அவள் அறையைப் பார்த்தேன். காரியம் எங்களை மிஞ்சிவிட்டது. என் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட அந்தத் திருவுருவம் உத்தரத்திலிருந்து தொங்கிக்கொண் டிருந்தது."

ரவீந்திரன் கண்ணைத் துடைத்துக்கொண் டான். தருமநாதர் ஒரு பெருமூச்சு விட்டார்.

"அட பாவமே!" என்று கூறிய தரும நாதர் ரவீந்திரனைப் பார்த்து "உம்மைப் பார்த்தால் மிகவும் பரிதாபமாகத்தான் இருக்கிறது.... அவள் இறந்ததிலிருந்து இப்படி மாறி விட்டீராக்கும்" என்று கேட்டார்.

"பின் என்ன சார், இந்த உலகத்திலே? நான் எங்கள் அப்பாவுக்கு ஒரே பிள்ளை. செல்லமாய்த்தான் வளர்ந்தேன். ஒரே பையன் நன்றாக இருக்கவேண்டுமே என்ற கவலை பெற்றவருக்கே இல்லை. இந்த உலகமே இரக்கம் அற்றது சார். அந்த ராயர் எவளையோ கூட்டி வந்திருந்தாரே, அதை நான் சொல்லியிருந்தால்............! அதற்கு இடம் இல்லாமல் போக வேண்டுமென்றுதான் அவர் முந்திக்கொண்டார்! நான் வீட்டைவிட்டு வெளியேறி ஊர் ஊராகச் சுற்றுகிறேன்..........."

தருமநாதர் முகத்திலே இரக்கம், கவலை.... எல்லாம் மாறி மாறி வந்தன. பக்கத்திலே இருந்த ஓட்டலிலிருந்து மிதந்துவந்த இசைப் பாடல், "உலகை நம்பாதே மனமே, உலகை நம்பாதே" என்று அலறிக்கொண்டிருந்தது.

கனகரத்தினத்தின் கதை கமலி கண்ணிலே படாமலா போய்விடும்? படித்துப்பார்த்தாள். ஒரு நாள் மாலை தன் கணவனைக் கேட்டாள்: "ஆமா, அந்தக் கதையை ஏன் அப்படி முடித்தீர்கள்?"

"எப்படி?"

"உலகை நம்பாதே, மனமே உலகை நம்பாதே என்று பாட்டு வந்ததாக முடித்திருக்கிறீர்களே, ஏன் ?"

"நான அப்படி முடித்திருக்கிறேன்? இல்லை. அந்தக் கதையே அப்படித்தான் முடிந்தது."

"சரி சரி, ஆரம்பித்துவிட்டீர்களா உங்கள் சிலம்ப வீச்சை? ரவீந்திரனைப் பார்த்தால் பரிதாபமாய் இல்லையா? அவன் கதையை அப்படியா முடிக்கிறது ?"

"வா அம்மா, நீ தான் பெரிய பேர்ள் பக் ஆச்சே! நீ எப்படி முடிப்பாய்? சொல்லேன், கேட்கலாம்."

"எப்படி முடிக்கிறதா? தருமநாதர் இரக்கப்பட்டு அவனுக்கு ஒரு வேலை கொடுத்தார். அவனும் ஒரு மாதிரியாகக் காதலியின் நினைவை வளர்த்துப் பிரமசாரியாகவே இருக்க முனைந்தான்—இப்படி முடித்துவிட்டால் என்னவாம் ?"

"முடிக்கலாம், முடிக்கலாம். ஆனல், நான் தான் சொன்னேனே, முடிவு நம் கையிலே இல்லை. கதை தானகவே அப்படி ஒரு முடிவிலே வந்து நின்றுவிட்டது."

"நீங்கள் சொல்வது ஒன்றும் புரியவில்லையே ?"

"நான் எழுதினது என் கற்பனை இல்லை. உண்மையாகவே அப்படி ஒருவன் வந்து சேர்ந்

தான். அவன் சொன்னதையே எழுதி விட்டேன்."

"அவனே 'உலகை நம்பாதே' என்று முடித்தானு?"

"இல்லே"

"பின்னே.......?"

"அவன் சொன்ன கதையைக் கேட்டு எங்கள் பிரின்ஸ்பால், பாவம், இரக்கப்பட்டு அவனுடைய அப்பா விலாசத்தைக் கேட்டுப் 'பையன் நிலேமை மோசமாய் இருக்கிறது. உடனே வந்து அழைத்துப் போங்கள்' என்று தந்தி அடித்தார். அப்பா வந்து அழைத்துப் போகிறவரைக்கும் பையனே மாணவர் இல்லத் திலே இருக்கச் சொல்லியிருந்தார். தந்தி திரும்பி வந்துவிட்டது. அந்த மாதிரி ஆளே கிடையா தாம். ரவீந்திரனே அழைத்துவரச் சொல்லிச் சேவகனே மாணவர் விடுதிக்கு அனுப்பினுர். அவன் அங்கே இல்லே. இந்தக் கதையைத் தான் அப்படி எழுதியிருக்கிறேன்."

"அதுதானே பார்த்தேன்! நீங்களாவது முழுசா ஒரு கதை எழுதுவதாவது! கழுதையும் குட்டிச் சுவரும் தவிர உங்களுக்கு வேறே என்ன தெரியும்!"

# சுடலையாண்டி

வண்ணத்தின் அழகால் பொங்கிப் பூரண மாகிய ஓவியம் என்று கருதினன், சுந்தரன்.

"வண்ண அழகில்மட்டும் மயங்கினல் போதாது. வண்ணக் கலவை வாழ்வினை எதிரொளி செய்கிறதா என்று பார்க்க வேண்டும். ஓவிய மாகட்டும் அல்லது வேறு எந்தக் கலைதா ளுகட்டும். வாழ்க்கையின் மறு பதிப்பாகத்தான் இருக்கவேண்டும்." - இது சுந்தரனுடைய நண்பன் திருநாதனின் வாதம்.

சுந்தரன் அன்று ஒரு படம் வாங்கி வந்து தன் அறையில் மாட்டினன். சுடுகாட்டின் நடுவே என்பருக் கோலத்து எரியாடும் பெருமானின்

திருக்கூத்தினை அந்தப் படம் விளக்கியது. அந்தப் படத்தினைத் தீட்டிய ஓவியன் தக்க வண்ணங்களை இயைந்த முறையில் தீட்டியிருந்தது கண்டு சுந்தரன் வியப்பெய்தினான். அந்த வியப்புத்தான் படத்தை விலை கொடுத்து வாங்கச் செய்தது.

"நான் வாங்கியுள்ள படம் எப்படியிருக்கிறது? நீ பெரிய கலைஞனாயிற்றே! உன் கருத்தைத் தெரிந்துகொள்ளலாம்" என்றான் சுந்தரன்.

திருநாதன் உற்றுநோக்கினான். நெடுநேரம் நோக்கியும் அவன் முகத்தில் ஒரு மாறுதலும் ஏற்படவில்லை. சுந்தரனுக்கு ஒரே வியப்பாயிற்று.

"என்ன'ப்பா! ஒன்றுமே சொல்லமாட்டேனென்கிறாயே? பத்து ரூபாய் கொடுத்து வாங்கிய படம் உனக்குப் பிடிக்கவில்லையா?"

"அ........! பத்து ரூபாயா கொடுத்தாய்! இதற்கா? பாழாய்ப்போன இந்த இழவுக்கா பத்து முழு ரூபாயைக் கொட்டினாய்?"

"ஓவியன் கலந்துள்ள வண்ணங்களின் சிறப்பு ஒன்றுக்கே ரூபாய் நூறு கொடுத்தாலும் தகுமே!"

திருநாதன் தன் கொள்கையை மாற்றத் தயாராயில்லை. "அட, போ'ப்பா. நீ ஒரு பயித்தியம். வெறும் வர்ணமா கலை? அப்படியென்றால்

நிறங்களையே சுவரெல்லாம் தீட்டிவைப்பது தானே? வாழ்வு வேண்டாமா? வாழ்க்கையின் திட்ப நுட்பமான சூத்திரமல்லவா கலை? அது இந்தப் படத்திலே மருந்துக்குக்கூட இல்லையே!"

"வாழ்க்கையின் மறுபதிப்புத்தான் கலையா? சரி, அப்படியே வைத்துக் கொள்ளலாம். ஆனால், வாழ்க்கை என்பது என்ன? அதன் எல்லாக் கூறுகளையும் கோணங்களையும் நீ அறிந்து விட்டாயா?" - என்று சும்மாவாவது சொல்லி வைத்தான் சுந்தரன். வெறும் வாதத்துக்காக 'ஏதோ வார்த்தைக் குவியல்கள்' என்றுதான் அப்போது அவன் கருதினான்.

"உனக்கு மிகத் தெரியுமோ" - "நீ மகா அறிவாளியோ?" "எல்லாம் கண்டவனோ நீ"

- இந்தக் கேள்விகள் பிறந்துவிட்டால் வாதத்துக்கு வளர்ச்சியில்லை. அதோடு நிறுத்தி விட வேண்டியதுதான். இதை அறிந்தவன் திருநாதன். "அடே, போ'ப்பா! பயித்தியம்" என்று சொல்லிச் சுந்தரனின் பேச்சுக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டான்.

## 2

"**கொ**லைக் குற்றத்தைமட்டும் ஏன் பெரிய குற்றமென்று சொல்லுகிறார்கள்"-இந்த அதிசயமான கேள்வியை ஒரு நாள் திருநாதன் சுந்தரனிடம் கேட்டான்.

சுந்தரனுக்கு ஒன்றும் விளங்கவில்லை. 'என்ன? கொலையா? என்ன கொலை? ஏன்? ............?? ம்ம்? கொலைக்குற்றம்............என்ன, திருநாதன், என்ன கேட்டாய்?"

"கொலை என்று சொன்னாலே இப்படி ஏன் பயப்படுகிறாய்? பயப்படாதே! உன்னை யாரும் கொன்றுவிட மாட்டார்கள். கொஞ்சம் நிதானமாய் நான் சொல்வதைக் கேள்."

"கேட்கிறேன். சொல்லு. ஆனால், முதலிலே நான் ஒரு கேள்வி கேட்க விரும்புகிறேன். அதற்கு விடை சொல்லிவிட்டு மேலே என்ன வேண்டுமானாலும் பேசு. சரியா?"

"என்ன'ப்பா, உன் கேள்வி?"

"நீ ஏன் ஒரு மாதமாய் வெறி பிடித்தவன் போல இருக்கிறாய்? நானும் என்னவெல்லாமோ பேசியும் விளையாடியும் உன் போக்கை மாற்ற முடியவில்லையே. வேறே நண்பர்களிடம் சொல்லிப் பார்க்கவும் விருப்பமில்லை. சரி, உன்னையே கேட்டுவிடலா மென்றுதான், இன்று கேட்கிறேன். என்ன, ஏன் என்று என்னிடம் கூடவா சொல்லக்கூடாது?"

திருநாதனுடைய இதழ்களில் மெல்லிய புன்னகை தவழ்ந்து மறைந்தது. அவனது வலக் கரம் முன்குடுமியைப் பிடித்து உலைத்து விட்டது. பொத்தான் மாட்டாமல் கிடந்த சட்டையின் கழுத்துப் பட்டையை இடக்கரம் இழுத்துவிட்டது. திடீரென்று எழுந்தான்.

கைகளைக் கால்சட்டையின் பைகளுக்குள் இட்டுக் கொண்டு அறையின் குறுக்கும் நெடுக்குமாக நடந்தான். கடைசியில் தெருவை ஒட்டியிருந்த சன்னலின் அருகில் சென்று நின்றான். மிகத் தாழ்ந்திருந்த அந்தப் பெரிய சன்னல் தளத்தின் மீது இடக்காலைத் தூக்கி வைத்து, அந்தக் கால்மீது சாய்ந்த தன் தலையைக் கரத்தால் தாங்கிச் சிறிது நேரம் அசையாமல் இருந்தான்.

இவ்வளவையும் பார்த்துக்கொண்டு சுந்தரன் சும்மா இருந்துபார்த்தான். திருநாதன் பேசுவதாகக் காணோம். திருநாதனின் நினைவே இந்த உலகத்தில் இருப்பதாகத் தெரியவில்லை. வெறிச்சென்ற அந்தப் பார்வையில் வெறி-எல்லாவற்றையும் விழுங்கப் பார்க்கும் ஒரு வெறி-பரந்து கிடப்பதைக் கண்டான். 'பைத்தியம் இப்படித்தான் பிடிக்கும்போல் இருக்கிறது' என்று எண்ணிற்று அந்த நண்பனின் உள்ளம்.

சுந்தரனுக்கு இந்தக் கொடிய மௌனத்தைத் தாங்கும் பொறுமை இல்லை. கொஞ்சம் கோபமாகவே பேசினான்: "இந்தா பார், திருநாதன்! இதெல்லாம் நன்றாயில்லை. ஏதாவது மனக்கவலை இருந்தால் நீயாகத் தீர்த்துக் கொள்ள வேண்டும். அல்லது நண்பர்களிடம் சொல்லித் தீர்க்க வேண்டும். சொல்ல மனமில் விட்டால் நான் ஏன் கட்டாயப்படுத்தப் போகிறேன்?....சரி, சரி. எங்காவது வெளியே போகலாம், வருகிறாயா?"

"சுந்தரா! நீ போய் வா. நான் வரவில்லை. எனக்கு என்னவோ போலிருக்கிறது. நாளைக்குப் பேசலாம்; வருகிறாயா?"

சுந்தரன் போய்விட்டான். போகிற வழியிலெல்லாம் அவன் மனக்கண்முன் திருநாதனின் கேள்விதான் நின்றது—"கொலைக் குற்றத்தை மட்டும் பெரிய குற்றமென்று ஏன் சொல்லுகிறார்கள்?"

## 3

"சுந்தரா! எவ்வளவோ நாளாயிற்றே, உன்னைப் பார்த்து! உன்னை ஒன்று கேட்க வேண்டுமே!"

"ஆமாம், என்னைப் பார்க்கவேண்டியதுதான்; உடனே ஒரு கேள்வியைக் கேட்டுவிட்டு, அந்தச் சன்னலிலே போய்க் கல்லாய் நின்றுவிட வேண்டியது. சரிதான், போ. உனக்கு வேறு வேலை கிடையாது....

"அட, நான் என்ன கேட்கப் போகிறேன் என்றுகூடத் தெரியாமல் நீயே அளந்தால்....?"

"சரி, சரி. இன்றைக்குப் படம் பார்க்கப் போகிறது என்ற தீர்மானத்தோடு வந்திருக்கிறேன். உன்னை இன்று விடப்போவதில்லை. புறப்படு....நேரமாயிற்று. உன் கேள்வியெல்லாம் அப்புறம்தான்."

இருவரும் போனார்கள். ஒருவன் படத்தைப் பார்த்தான். மற்றொருவன் படத்தைச் சிறிது

சிறிது பார்த்து ஒரே கேள்வியைத் திரும்பத் திரும்பக் கேட்டுக்கொண் டிருந்தான். திருநாத னுடைய உள்ளத்தை அரித்துக்கொண் டிருந்தது ஒரு கேள்வி. அந்தப் படத்தில் அவன் கருத்தை ஈர்த்த சில கட்டங்கள் அந்தக் கேள்வியை வெளியே இழுத்துக்கொண்டே இருந்தன. ஆக, சுந்தரனும் படத்தைச் சரிவர அனுபவிக்கவில்லை.

அன்றைக்கும் வீட்டுக்குப் போகும்போது திருநாதனின் கேள்விதான் அடிக்கடி அவன் செவிகளில் ஒலித்துக்கொண் டிருந்தது :

"சமூக அமைப்பு எதற்காக ஏற்பட்டது? உள்ளங்களை வளரவிடாமல் செய்வதற்காகவா?"

## 4

திருநாதனின் போக்கு வரவரச் சுந்தரனு டைய மனத்தை மிகமிக வருத்திற்று. "இது சரியல்லவே. இனி, கீழ்ப்பாக்கம்தானு இவன் இருப்பிடம்?" என்ற அளவுக்கு அவன் எண்ண மிடத் துவங்கிவிட்டான். ஏதோ ஒன்றை மெல்லவும் முடியாமல் விழுங்கவும் முடியாமல் திருநாதன் திண்டாடுகிறுன் என்று சுந்தரன் தெரிந்துகொண்டான். அவன் உழல்கின்ற அந்தத் துன்பத்தி லிருந்து விடுவிப்பது எப்படி என்பது சுந்தரனுக்கு விளங்கவில்லை. வெள் ளத்தின் சுழலில் சிக்கிக்கொண்டவனை நீச்சுத் தெரிந்தவன் பிழைக்கச் செய்யலாம். ஆனால்,

வானத்தில் இருள் கப்பியிருக்கும் நேரத்தில்—பரந்த கடலில் எங்கு மிதக்கிறுன் என்று தெரியாத சமயத்தில் ஒருவனை எப்படித் தப்புவிக்க முடியும்?—இந்த நிலைமைதான் அங்கே நிலவிற்று.

ஒரு நாள் திருநாதனும் சுந்தரனும் சிற்றுண்டி சாப்பிட்டுக்கொண் டிருந்தார்கள். திருநாதன் பேசினுன்: "கேட்டாயா, சுந்தரம்! ஓர் அருமையான கதை! பூனை எலியோடு விளையாடுவதைப் பார்த்திருக்கிறுயா?"

"பூனை எலியோடு விளையாடுவதா?! எலிக்கு அழிவுகாலமல்லவா அது?"

"ஆமாம். ஆனுல், நான் சொல்லப்போகும் கதை இன்னும் வேடிக்கையானது. கேள். ஒரு காட்டில் ஒரு புலி இருந்தது. அது எப்படியோ ஒரு மானேடு விளையாடத் தொடங்கிற்று. கொஞ்ச நாளில் புலியும் மானும் நெருங்கிப் பழகிவிட்டன. அப்புறம்...."

"இந்தா, திருநாதன்! என்னை என்ன **பாப்பா** என்று எண்ணினுயா? அல்லது ஒரு வேளை குழந்தைக் கதை ஏதாவது எழுதப் போகிறுயா?"

"அடே, போ'ப்பா. சமூகமே நம்மையெல்லாம் சின்ன சின்ன விளையாட்டுப் பிள்ளைகளாகத் தானே வைத்திருக்கிறது!....சரி. என் கதையைக் கேளப்பா. புலியும் மானும் நெருங்கிப் பழகினவா? அப்புறம்...."

"அப்புறம் விழுப்புரம்! புலியும் மானும் நண்பர்களாம்! இவர் பார்த்தாராம்! புலி எங்காவது மானை விட்டுவைக்குமா?"

"அங்கேதானே வேடிக்கை இருக்கிறது. எப்படியோ இரண்டும் பழகிவிட்டன. மேலே கேள். முழுதும் கேட்டபிறகு நீ பேசு."

"முழுவதையும் கேட்பதாவது? புலியும் மானும் உங்கள் பாட்டனுர் காலத்தில் பழகும்! போ'ப்பா. இந்தப் பச்சைப் புளுகை யாராவது நம்புவார்களா?"

"அங்கேதானே எனக்கும் புரியவில்லை. பழக முடியாதுதான். உண்மைதான். ஆனல், நான் சொல்வதும் உண்மைதானே! உண்மை யாகவே புலியும் மானும் பழகிவிட்டன....கேட் டாயா....ம்ம்....?"

இப்போதுதான் சுந்தரனுக்கு ஓர் எண்ணம் பிறந்தது. 'சரி, இவன் வெறும் கதை சொல்ல வில்லை. என்னவோ மனத்தில் வைத்துக் கொண்டு இப்படியாகச் சுற்றி வளைத்துப் பேசு கிறன். சரி, கேட்டுப் பார்ப்போம்' என்று நினைத்தான். இவன் யோசிப்பதைக் கவனித்த திருநாதன், "என்ன'ப்பா! பெரிய கோட்டையா பிடிக்கிறய்? நான் கோட்டை பிடித்தது போதாதா? சொல்'றதைக் கேளப்பா!"

"உன் கதைதெய்யத்தா னப்பா நானும் எண்ணிக்கொண் டிருந்தேன். ஒருவேளை நீ

சொல்லுகிற புலியும் மானும் சிறு குட்டிகளாக இருக்கும்போதே பழக்கமோ?”

“அதெல்லாம் ஒன்றுமில்லை. எப்படியோ புலியின் குகையும் மான் மறைந்திருந்த புதரும் எதிரெதிராக அமைந்தன. மானுக்கு முதலிலே கொஞ்சம் பயந்தான். புதருக்குள்ளிருந்து எட்டி எட்டிப் பார்க்கும். புலியும் பார்க்கும். மான் கண்ணும் புலிக் கண்ணும் ஒன்ருக முடியுமா? முடியாதுதான். இருந்தாலும், என் கதையில் வருகிற புலிக்கு அந்த மானிடத்திலே விருப்பம் பிறந்தது. மானுக்கும் அந்தப் புலி என்ருல், அது ஏனே, பயமே தோன்றவில்லை. கொஞ்சம் கொஞ்சமாகக் கூச்சமும் நீங்கி விட்டது. பிறகு புலி தன் குகையின் வாசலில் தான் இருக்கும். மான் எப்போது பார்த்தாலும் புலியைத்தான் பார்க்கும்....”

“ஏதப்பா, உன் கதை நன்ருயிருக்கிறதே!”

“அவசரப்படாதே. இனிமேல்தான் இருக்கிறது கதை. பிறகு, இரண்டு நண்பர்களும் நெருங்கிப் பழகியேவிட்டார்கள். பொழுது விடிந்தால் அவன் சன்னலில் வந்து....இல்லை யில்லை....அதுதான் அந்தப் புலி....என்ன நான் சொல்'றது....சுந்தரா, கேட்டாயா? அந்த மான்....”

இருந்தாற்போ லிருந்து நிலைதடுமாறிவிட்ட மாடுகளை நம்பிய வண்டி எப்படிக் குடைசாய்ந்து

கவிழுமோ, அப்படியாயிற்று திருநாதனுடைய நிலை. திடீரென்று பேச்சை நிறுத்திவிட்டான்.

இந்த நிலைமையைச் சமாளிக்கும் ஆற்றல் சுந்தரனுக்குக் கிடையாது. "அப்புறம் என்னப்பா, சொல்லு" என்று தூண்டிவிட்டான். விளக்கிலே எண்ணெயும் சுடரும் இல்லாமல் திரியைமட்டும் தூண்டினல் விளக்கு எரியுமா? வெளிச்சந்தான் உண்டா? திருநாதன் வாயையே திறக்கவில்லை.

ஆனல், சுந்தரன் ஒருவாறு நிலைமையைப் புரிந்துகொண்டான். எதிர்வீட்டுச் சன்னலை நோக்கினன். இவன் அந்தப் பக்கம் திரும்புகிற சமயத்தில்தான் சன்னல் திரையை ஓர் அழகிய கரம் இழுத்து மறைவதைக் கண்டான்.

கடைசியில், சுந்தரன் வீட்டுக்குப் புறப் பட்டான். முன்னே திருநாதன் கேட்ட கேள்வி கள் முன்னிலும் மிகுதியாக இடம் பெற்றன.

**"கொலைக்குற்றத்தைமட்டும் பெரிய குற்ற மென்று ஏன் சொல்லுகிறார்கள்?" "சமூக அமைப்பு எதற்காக ஏற்பட்டது, உள்ளங்களை வளரவிடாமல் செய்வதற்காகவா?"**

இந்த இரண்டு கேள்விகளோடு இன்று தெரிந்துகொண்ட புலி—மான் கதையைச் சேர்த்து எண்ணிப் பார்த்தான். இரண்டாவது கேள்வி கொஞ்சம் புரிந்தது. முதல் கேள்வி புரிய வில்லை. எண்ணி எண்ணிப்பார்த்தும் ஒரே குழப்பந்தான்.

மறுநாள் திருநாதனைக் காணலாமென்று போனான். அவன் இல்லை. எங்கே போனான், எப்போது வருவான்—ஒன்றும் தெரியவில்லை. மனம் இன்னும் மிகுதியாகக் கலங்கிற்று. பழைய இரண்டு கேள்விகளையே அறிந்த அவன் மனம், புதிதாக ஒரு கேள்வியை எழுப்பிற்று. "சமூக அமைப்பால் குழம்பிக் கலங்கிய அவன் தற்கொலை செய்துகொள்வானோ?"

இந்தக் கேள்விதான் அவன் சிந்தனையின் மையமாயிற்று. "கொலைக் குற்றமே பெரிய குற்றம். அதனால் பிறரைத்தான் துன்பப்படுத்துகிறோம். தற்கொலை என்பது அதைவிடப் பெரிய குற்றமல்லவா? தன்னை மறந்து பிறரைக் கொலை செய்ய முடியும். ஆனால், தான் என்பதை மனத்தில் கொண்டேயல்லவா தற்கொலை செய்ய வேண்டும்?........"

இப்படியாக எண்ணினான் எண்ணினான் எண்பது கோடி. எண்ணங்களின் முடிவு குழப்பமும் கலக்கமும்தான். குழம்பினான்; கலங்கினான். நண்பனின் துன்பியல் முடிவை எண்ணி மனம் கசிந்தான்.

## 5

சில நாள் கழித்துச் சுந்தரனுக்கு ஒரு கடிதம் வந்தது. திருநாதனின் கையெழுத்தைக் கண்டு ஆவலோடு படித்தான். சொற்களிடையே கண்ணைச் செலுத்திக் கருத்தை விழுங்கினான். திருநாதனின் கடிதம்:—

அன்புள்ள சுந்தரா,

வணக்கம். என்னைத் தேடியிருப்பாய்; தெரியும். நான் ஏன் அங்கில்லை என்பது உனக்கும் தெரியும். என்னைப் பற்றி என்னென்ன எண்ணியிருப்பாயோ, தெரியாது. ஆனால், நீ ஒருவனே என் குழப்பநிலை முழுவதையும் கவனித்து வந்தாய். ஆதலால், முடிவும் உனக்குத் தெரியவேண்டியதே.

நான் ஒரு கொலைகாரன். யாரைக் கொலை செய்தேன் என்று கேட்காதே. வெறும் உடலைக் கொலை செய்யும் கோழையல்ல நான். உடலைக் கொலை செய்தவனையே பெரிய குற்றவாளி என்று தூக்கிலிடுகிறது சமூகத்தின் சட்டம். உள்ளங்களைக் கொலை செய்துவிட்டு நிமிர்ந்த நெஞ்சுடன் திரிகின்ற திருவாளர்கள் எத்தனையோ பேர்களுண்டு இந்தச் சமூகத்திலே. அந்தப் பெருமக்களின் கூட்டத்திலே நானும் சேர்ந்துவிட்டேன்.

ஒரு கன்னிப் பெண்ணின் உள்ளத்தைக் கொன்றுவிட்டேன். அழகான வாழ்க்கைக் கோட்டையை விண்ணகத்திலே சமைத்துத் தரும் ஆற்றல் பெற்ற ஓர் உள்ளத்தைக் கொன்றுவிட்டேன். அந்த உள்ளம் செத்துவிட்டது. நான் கொலைகாரன். அழகிய ஓர் உள்ளம் என் வெறிக்கு இரையாகிவிட்டது.

புலிக்குத் திடீரென்று விலங்குணர்ச்சி பெருகிவிட்டது. 'மானைக் கடித்தால் என்ன'

என்ற எண்ணம் எழுந்தது. கொன்றுவிட வேண்டியதுதான் என்று முடிவு செய்தது. மான் அஞ்சவில்லை. காரணம், புலி கடிக்கும் என்று அது நம்பவேயில்லை. பின்னும், அது துள்ளிற்று. புலியின் மனம் கசிந்தது. ஆனால் மீண்டும் விலங்காயிற்று. திரும்பவும் கவ்விக் கடித்தது. மானுக்கு வலி பொறுக்கமுடிய வில்லை. புலியைத் திரும்பிப் பார்த்தது. பரி தாபம் அதன் கண்களில் அலைபாய்ந்தது; பரிவு பரந்து பரந்து வந்து புலியின் நெஞ்சையும் தாக்கிற்று. புலியின் கண்ணிலும் நீர் வந்தது. 'ஐயோ! என்ன காரியம் செய்தோம்! நம் அன்புக்குரிய மானைக் கடிக்கலாமா? இனி, அதைப் பிழைக்கவைக்க வழியில்லையா?' என் றெல்லாம் ஏங்கிற்று; இருந்து எண்ணிற்று. திடீரென்று எங்கிருந்தோ அந்தப் பழைய விலங்குணர்ச்சி எழுந்தது. ஒரே பாய்ச்சல், தொலைந்தது மானின் வாழ்க்கை. விலங்குச் சமூகத்திலே தோன்றி வளர்ந்த புலி மானுகி விடுமா? புலியும் மானும் ஒன்று சேர்வதை விலங்குச் சமூகம் பார்த்திருக்குமா? சேர விடுமா?

இன்று, உள்ளத்தைக் கொன்ற நான் இங்கே இருக்கிறேன். அங்கு வருவேன். சாகமாட்டேன். உடலை மாய்த்துக்கொள்ளலாம். துன்பச் சூழலிலிருந்து தப்பிக்கொள்ள அது கோழைகள் பின்பற்றும் வழி. அந்த வழியில் நான் போக முடியாது.

என் உள்ளம் ஒரு சுடலை போன்றது. அங்கே ஒரு பெருங் கொலைகாரனுக 'நான்' நின்று ஊழிக் காலத்துச் சிவன் போலக் கூத்தாடுகிறேன். என் முகத்தில் அமைதி இருக்கும். ஆனல், அது எல்லாம் அழிந்து விட்ட ஊழியின் அமைதி.

நான் முதலியார் சமூகத்தவன்; அவள் மறக்குல மங்கை-இந்தச் சமூகம் எங்களைச் சேர விடவில்லை. சேரவிடாது என்று உணர்ந்தது காரணமாக உள்ளக் கொலை நடந்தது. இது போல் இன்னும் எத்தனையோ கொலைகள் நடந் திருக்கும். இனியும் நடக்கலாம். இந்தக் கொலை —படுகொலை தொலைய வழி பிறக்குமா?

இது என் கடைசிக் கேள்வி. முன் கேட்ட கேள்விகளுக்கு நீ விடை தரவில்லை. இதற்கும் உன்னல் இப்போது விடை தர முடியாது. நான் எதிர்பார்க்கவுமில்லை. எதிர்மறையான விடையை என் மனம் ஏற்காது. உடன்பாடான விடையை உண்டாக்க வேண்டும். இந்தச் சமூகத்தையே அழித்தால்தான் நான் விரும்பும் விடை கிடைக்கும். ஏற்கெனவே கொலை செய்து பழகிய நான், இனி இந்தப் பெரிய கொலைத் தொழிலை மேற்கொள்ளப்போ கிறேன். உலக ஊழியில் இறைவன் ஆடுவான்; சமூகத்தின் ஊழியில் நான் ஆடுவேன்.

அன்பன்

**திருநாதன்**

இந்த நீண்ட கடிதத்தைச் சுந்தரன் திரும்பத் திரும்பப் படித்தான். ஒவ்வொரு முறையும் புதுப்புது உணர்ச்சியால் ஊக்கம் பெற்ருன்.

## 6

திடீரென்று ஒருநாள் திருநாதன் சுந்தரனின் அறைக்கு வந்தான். பழைய படம் அங்கே இருந்தது. அதையே உற்று நோக்கினுன்.

கடைசியில் அந்தப் படம் தனக்கு வேண்டுமென்று வலியக் கேட்டான். "முன்னே நீ பழித்த படமாயிற்றே" என்ருன் சுந்தரன்.

"இல்லை. இது உயர்ந்த படம். வாழ்க்கையின் எல்லாக் கோணங்களையும் நாம் கண்டதில்லை. இதை எழுதிய ஓவியன் கண்ட கூறு இப்போதுதான் எனக்குப் புரிகிறது. உனக்கு இது வெறும் வண்ணக் கலப்பு. எனக்கு இது வாழ்வின் விளக்கம்." -இது திருநாதன் உணர்வுரை.

அந்தப் படத்தைத் திருநாதன் தன் அறையில் கொணர்ந்து மாட்டினுன். 'இதய ஒலி' என்று அதன் கீழ் எழுதினுன்.

"சுடலையாண்டியின் படத்தின் கீழ் இதய ஒலி என்று ஏனப்பா எழுதினுய்?" இது நண்பனின் கேள்வி.

வெறும் வறண்ட புன்னகைதான் திருநா தனின் விடை.

அரவங்களாட அவன் ஆடிக்கொண்டிருந் தான். கரத்தில் அனலாட அவன் ஆடிக் கொண்டிருந்தான். அவிர்சடை நெருப் பொளியில் பளபளக்க அவன் ஆடிக்கொண் டிருந்தான். நச்சுக் கழுத்தில் நச்சரவம் நெளிந்து விளையாடியது; நாகப்பாம்பு இறுகிக் கிடக்க இடையிலே கொடும் புலியின் தோலாடை சுற்றிக் கிடந்தது. அவன் ஆடிக் கொண்டிருந்தான். சுடலையின் கொடுஞ் சூழலில்—அவனன்றி வேறென்றும் இல்லாத அந்தக் கொடிய பாழ்ஞ் சுடலையில் அவன் ஆடிக்கொண் டிருந்தான். அன்னையின் பசிய உடலம் செயலற்று அவன் தோள்மேல் துவண்டு கிடந்தது. அந்தப் பிணத்தைத் தூக்கிச் சுமந்து—தொம் தொம்மென்று ஆடிக் கொண் டிருந்தான் அந்தச் சுடலையாண்டி.

## முடிவல்ல, தொடக்கம்

மாலை வேளையின் முழு அழகும் குடி கொண்டிருக்கும் பூஞ்சோலை ஒன்றில், அழகிய ஒரு மலர் கீழே கிடந்தது. மனிதர்கள்—எத்தனையோ மனிதர்கள்—அவ்வழியே வருவதும் போவதுமா யிருந்தனர். வழியிலே கிடந்த, தரையை விளக்கம் செய்துகொண் டிருந்த அந்தப் பூவினை நோக்குவார் இல்லை; எடுத்து முகர்பவரும் காணோம். அழகுக்குக் குறை வில்லை. என்றாலும் அதை எடுப்பதற்கு எவரும் எண்ணவில்லை. எவர் கண்ணும் எவர் மனமும் அந்த அழகின் அவதாரத்தை, வீழ்ச்சியுற்ற மலர்த்திருவை நாடவில்லை.

மலர்கள் வேண்டுமென்றுதான் அத்தனை மக்களும் அங்கே கூடி வந்துள்ளனர். எனினும் இந்த மலரை ஏன் ஒருவரும் காணவில்லை ?.... செடிகளிலும் கொடிகளிலும் மலர்ந்து சிரித்துக் காட்சியளிக்கும் பூக்களையே அவர்கள் நாடினர். இந்தப் பூவைமட்டும் அவர்கள் ஏன் புறக் கணிக்க வேண்டும் ?

ஒரு சிறுவன் அந்த வழியே போனன். மலர்களைக் காணக் காண அவன் மனம் எக் களிப்புக் கொண்டது. பூவைச் சுற்றி வரும் வண்டுபோல் பூக்கள் இருந்த இடமெல்லாம் சுற்றிச் சுற்றி ஓடினன். மலர்களைப் பார்த்துக் கொண்டிருப்பதிலேயே அவனுக்கு எல்லை யில்லாத மகிழ்ச்சி.

ஓடுகின்ற வேகத்திலே--அவனுடைய கை வீச்சின் மும்முரத்திலே—செடியிலிருந்து ஒரு பூ கீழே விழுந்துவிட்டது. மலர் விழுகின்றபோது 'மௌன கீதம்' ஒன்று எழுந்தது; அந்த இசையைப் பையனுடைய கண்கள் 'கேட்டன'; திரும்பினன். விண்ணுலகில் சஞ்சரித்த அவன் மனம், பெரும் பளுவால் இழுக்கப்பட்டது. கனத்தைத் தாங்க முடியாமல் கீழே உட்கார்ந்து விட்டான். மலரின் வாழ்வைக் குலைத்துவிட்டதை அவனுடைய குழந்தை மனம் எப்படியோ உணர்ந்து விட்டது. கண் நீரைப் பொழிந்தது; பின் அதுவும் நின்றது. மலரைக் கூர்ந்து நோக்கிய வண்ணம் அசைவற்று உட்கார்ந்து

விட்டான். அப்பொழுது அந்த மலர் எண்ணிற்று :— நம் வாழ்க்கையை இவன் குலேத்து விட்டான் என்பது உண்மைதான். செடியிலிருந்தாலல்லாமல் இந்த மக்கள் நம்மைக் கண்ணெடுத்தும் பார்க்கமாட்டார்கள். இது உண்மைதான். ஆனல், இந்தச் சிறுவனுடைய அசைவற்ற நிலேமை இப்படியே நீடித்துவிடுமோ ?— சிறுவனுடைய உள்ள நிலே பூவையும்கூட இரங்கச் செய்துவிட்டது.

"என்ன'டா, எவ்வளவு நேரம் அங்கேயே இருப்பது ? சினிமாவுக்குப் போகவேண்டாமா ?" என்று கேட்டுக்கொண்டே வந்தாள் அவனுடைய தாய். அவள் சொன்னதொன்றும் அவன் காதில் விழவில்லே. தாயார் வந்தாள் ; குழந்தையைத் தூக்கி வீட்டுப் பக்கமாகத் திரும்பினுள். சிறுவனே, அன்னேயின் தோளில் சாய்ந்து பின்புறமாகத் திரும்பி மலரையே பார்த்துக் கொண்டிருந்தான்.

அந்தப் பூதான், கவனிப்பாரற்று வழியிலே கிடந்தது.

* * *

சந்திரசேகரன் செல்வர் வீட்டுப் பிள்ளே. செல்லமாக வளர்ந்தவன். கவலேயென்பதே படியாத இன்ப உள்ளம் ; அப்படியே களங்கத்தின் சாயல் படராத நல்ல உள்ளம். உலகத்திலே துன்பம் இருக்கும் என்பதுகூட அவனுக்குத் தெரியாது. கல்லூரிப் படிப்பு முடிந்தது.

எம். ஏ. பரீட்சை அவனுக்கு மாகாண முதன் மையைக் கொடுத்துச் சென்றது.

மெட்ரிக்குலேஷன் தேர்வு எழுதியாய்விட்ட தென்றாலே, பணக்கார வீட்டுப் பிள்ளைகளைப் பெண் பெற்று வைத்திருப்பவர்கள் விடுவதில்லை. எத்தனையோ படையெடுப்புகளையும் தாக்குதல் களையும் வெற்றிகரமாகக் கடந்து வந்து, சந்திர சேகரன் எம். ஏ. பட்டத்தையும் வாங்கிவிட்டான். இனிமேல் படையெடுக்கிறவர்கள் சாதாரண மாகவா வருவார்கள் ?

எத்தனையோ பேர்கள் சந்திரசேகரனுக் குப் பெண் கொடுக்க வந்தார்கள். பலர் ‘தவங் கிடந்தனர்’ என்று சொன்னாலும்கூட மிகையா காது. என்றாலும் சந்துருவின் தந்தை இராமசாமி ஐயருக்குத் தம் நண்பர் குமாரசாமி ஐயரின் மகள்பேரில்தான் நாட்டமெல்லாம் இருந்தது. சந்துருவின் தாயார் எத்தனையோ பெண்களைப் பற்றி அவனுக்கு எடுத்துச்சொன்னாள். அவள் கவனமெல்லாம் இன்னும் அதிகமான ஆடம்பர வாழ்க்கைக்கு, நாலு பேர் மெச்சும்படியான வழிக்குத்தான் சென்றது. சந்துருவோ ஒரு பெண்ணையும் குறிப்பிட்டுச் சொல்லவில்லை. எவளோ ஒருத்தியின்மேல் காதல் கொண்டு விட்டதால்தான் இம்மாதிரி இருந்தான் என்று சொல்லமுடியாது. அவனுடைய மனத்திலே இதுவரை இத்தகைய உணர்ச்சிகள் எழவில்லை யென்பது இதன் பொருளல்ல. இல்லறம், மனைவி என்பவை யெல்லாம் அவனுக்குப் புரியாமலிருக்க

வில்லை. ஆனால் காதல், பிரேமை என்ப தொன்றும் அவன் மனத்திலே அரும்பவில்லை. அவனுடைய நண்பர்கள் இதுபற்றி அவனைக் கேலி செய்வதுண்டு. அவன் நிலை அவனுக்கே விளங்காமலிருந்தது.

எத்தனையோ தை மாதங்கள் பிறந்து பிறந்து போனமாதிரி அந்த வருஷத்திலும் ஒரு தை மாதம் வந்தது. ஒரே ஒரு மாறுதல், சந்திரசேகரனுடைய வாழ்க்கையைப் பொறுத்த வரையில் அந்த மாதத்தில் நடந்தது. வேறென்ன மாறுதல்! செல்வி-சரஸ்வதி குமாரசாமி, திருமதி சரஸ்வதி சந்திரசேகரனாக மாறியது அந்த மாதத்திலேதான். சந்துருவின் அம்மாவுக்கும் பிடித்த இடமாகப் போய்விட்டதால் ஒரு வகையான குறைவுக்கும், தடைக்கும் இடமில்லாமல் திருமணம் நடந்தேறியது.

எல்லாவிதப் பொருத்தங்களும் இருந்த அந்த வாழ்க்கையைப்பற்றி, அதைப் படைத்த பிரமனுக்கே சந்தேகம் வந்துவிட்டது. நல்ல அருமையான கவிதையைப் இயற்றிவிட்டு 'நாமா இவ்வளவு அருமையாகப் பாடிவிட்டோம்' என்று சந்தேகப்படும் கவிஞனைப் போலப் பிரமனும் சந்தேகப்பட்டான். கவிஞன் தன் நண்பன் ஒருவனிடம் தான் பாடிய பாட்டைக் காட்டினான். காட்டியதன் பயன், கவிதையின் வாழ்வு . முடிவடைந்துவிட்டது. 'அது பிழை, இது பிழை, ஒன்றும் சாரமில்லை' என்று சொல்லி அந்த நண்பன் கிழித்து

எறிந்துவிட்டான். கவிஞன் கண்ணீர்விட்டான்; விட்டுக்கொண்டே யிருந்தான்.

சந்துருவின் உடல் நிலையில் ஏதோ கோளாறு. எப்படியோ அது வளர்ந்தது.... பெருக்குவது ஏன்? அவன் சரசுவின் முகத்தை நோக்கவும் அஞ்ச வேண்டிய காலம் நெருங்கி விட்டது. அவளை மனக்கண்ணால் பார்த்துப் பார்த்துப் புறக்கண்ணால் அருவியாக நீர் பொழிந்துகொண்டே யிருந்தான். மனக்கவலை அவனை அரித்துவிட்டது. துன்பத்தின் வெங் கதிர் கண்ணீரை வற்றச் செய்துவிட்டது. சரசுவை வெறித்த கண்கொண்டு நோக்குவான்; மூடிக்கொள்வான். அந்த வெறிச்சென்ற பார்வையில் எத்தனையோ துன்ப அலைகள் வீசின. ஆனால், வெளியே தெரியவில்லை. தாய் தந்தையருக்கு அந்தப் பார்வையின் பொருள் புலப்படவே யில்லை. ஒரு குறைவுக்கும் இடம் வைக்காமல் வளர்த்த பிள்ளை, வாழ்க்கை முழு வதுக்கும் பெரிய குறையாக வைத்துவிட்டுப் போய்விடுவான் என்று அந்தப் பெற்ற மனங்கள் எண்ணவேயில்லை. சரஸ்வதியின் மனத்திலேமட்டும் அந்தக் கண்ணலையின் வெம்மை சிற்சில சமயங்களில் தாக்கிற்று. ஆனால், அந்தச் சமயங்களில், பொங்கியெழும் கண்ணீரை இமையை விட்டு மீறி வந்துவிடாமல் நிறுத்திவிடுவாள். எப்படித்தான் நிறுத்தி னாளோ, தெரியவில்லை. ஒரு பெருமூச்சு, அதுவும் அடுத்து இருக்கும் மாமன் மாமி

யருக்குத் தெரியாமல் வரும்; உடனே அங்கு நிற்காமல் போய்விடுவாள்.

ஒருநாள் மாலை; இராமசாமி ஐயரின் வீட்டில் குத்து விளக்கு அணைந்தது. சரஸ்வதியின் வாழ்க்கையிலே இருள் கவிந்தது. இருளின் செறிவிலே அவள் குங்குமத்தை யாரோ அழித்து விட்டார்கள். தாலிக் கயிற்றையும், கூந்தலின் மலரையும் சரசு இழந்தாள். இருளைக் கண்டதும் வெளிறிய அவள் முகத்தில் பழைய மஞ்சள் நிறம் வருவதற்குத் தைரியத்தை இழந்தது. இருளிலே பேரிரைச்சல்; சரசுவின் மனத்திலே பெரும் புயல். இரைச்சலெல்லாம் 'விதவை' என்றது; புயலெல்லாம் 'துன்பம், கொடுந் துன்பம்,' 'பாலை, பெரும் பாலை' என்று கூச்சலெழுப்பியது....

பிரமன் தன் சந்தேகத்தைத் தீர்க்கக் காலனை அணுகினான். அவன் 'கவிதை'யைக் கிழித்தெறிந்தான். பிரமனின் கண்ணீர் காலனைப் பழித்தது.

தை பிறந்தது; இன்னொரு தை. இதற்கு முன் வந்த தையில்தான் சந்திரசேகரனும் சரஸ்வதியும் ஒன்றாகத் தைக்கப்பட்டார்கள். மறு தை வருமுன் தையல் விட்டுவிட்டது. தையல் மோசம் போனது. தையல் இலையில் ஓர் இலை எங்கோ பறந்துவிட்டது; மற்றொன்று தைத்த வீட்டிலேயே கவனிப்பாரற்றுத் தனியே ஒரு மூலையில் கிடக்கிறது.

பணத்துக்குக் குறைவில்லை; செல்வாக்குக்குக் குறைவில்லை. பெரிய பங்களா, வேலைக்காரர்கள், கார்....எல்லாம் இருந்தன. உணவின்போது எதிரொலி செய்யும் கலகலப்பு, 'சரசு' என்று தனியான இனிமை பெற்ற ஒரு குரல்—இவைதாம் அந்த வீட்டில் இல்லை. எத்தனையோ உறவினர்கள் வீட்டிலே கலகலப்பாய் வந்து சரசுவோடு இருக்கிறார்கள். எத்தனையோ பேர் அவளைப் பரிவோடு அழைக்கிறார்கள். ஆனால்—அவள் உள்ளம் பாலையாகத் தான் இருக்கிறது. மஞ்சளும் பூவும் போனபின், குங்குமம் இழந்தபின், எத்தனை பேர் வந்தென்ன? ஏதாவது பயனுண்டா? ஒரே ஒரு மஞ்சள் கயிறு நீங்கியபின் எத்தனை தங்க நகைகள் இருந்தும் பயனுண்டா? கவலை அவள் மனத்தை அரித்தது.

குமாரசாமி ஐயர் தம் மகள் முகத்தைப் பார்க்கவும் விரும்பவில்லை. மனத்திலே எழுந்த கொந்தளிப்பு அவரைத் தலைகுனியச் செய்தது. 'சந்துரு ஐ. ஏ. எஸ். எழுதப் போகிறான். பிறகு திரும்பி வருவான். அடடா, நம்மகள் எவ்வளவு செல்வாக்குடனும் செல்வத்துடனும் வாழ்வாள்' என்றெல்லாம் எண்ணிப் பத்தாவது படித்தது போதுமென்று படிப்பை நிறுத்திக் கலியாணத்தைச் செய்துவைத்தார். மேலும் மேலும் படிக்க நினைத்த சரசுவிடம் "குழந்தை, உனக்கு ஒன்றும் தெரியாது. சந்துருவைப் போல வரன் வரும்போது விடக் கூடாது" என்று என்னென்

னவோ சொல்லி மகளைப் பங்களா வாழ்க்கைக்கு அனுப்பிவிட்டார். அந்தப் பங்களாவிலே நெருப்புப் பற்றப்போகிறது என்பது அவருக்கு அப்போது எப்படித் தெரியும்! அங்கே பிடித்த நெருப்பு குமாரசாமி ஐயரின் அடிவயிற்றிலும் பிடித்துக்கொண்டது. சரசுவின் வாழ்க்கையில் தோன்றிய பாலையின் துன்பம் அவள் தாய்க்குத் துயரக் கடலின் ஆழத்தைக் காட்ட முனைந்தது.

இராமசாமி ஐயரும் அவர் மனைவியும் அன்று சரசுவின் மேல்கொண்ட அன்பை யெல்லாம் பகைமையாக மாற்றிவிட்டனர். அவர்கள் என்ன செய்வார்கள்? மகன் சாவினால் ஏற்பட்ட துன்ப வெறியிலே 'புருஷனை விழுங் கிய பாதகி' 'கணவனை உருட்டிய காதகி' என்றெல்லாம் பட்டங்கள் கொடுத்துப் பிறந்த வீட்டுக்கு அனுப்பிவிட்டனர்.

இரண்டு ஆண்டுகள் கழிந்துவிட்டன. யார் எப்படி யெப்படி இருந்தாலும் காலண்டரின் தாள்கள் கிழிந்துகொண்டுதானே இருக் கின்றன!

குமாரசாமி ஐயருக்கு ஒரு யோசனை தோன்றியது. சரசுவதியைக் கல்லூரிக்கு அனுப்பினால் என்ன? தம் மனைவியோடு ஆலோசனை செய்தார். 'புக்ககத்தி லிருக்கும் மாமனும் மாமியும் பழிப்பார்களே, ஊரி லுள்ளோர் தூற்றுவார்களே' என்றெல்லாம் உலகப் பாடம் படித்தாள், சரசுவின் தாய்.

புக்ககத்திலிருந்து தம் அருமை மகளை விரட்டியடித்த சம்பந்திகளைப்பற்றிக் குமாரசாமி ஐயர் கவலைப்பட வில்லை. "அவர்கள் பணம் இங்கு வந்து ஆகவேண்டியது ஒன்றுமில்லை. நம்மிட மிருக்கும் சொத்துச் சரசுவுக்குப் போதும்" என்று சொல்லிவிட்டார். ஊராருக்கு என்ன, அவர்கள் எப்போதும் ஏதாவது சொல்லிக் கொண்டுதான் இருப்பார்கள்!"

சரசுவுக்கும் கல்லூரிக்குப் போகலாம் என்றுதான் பட்டது. படிப்பிலே மனத்தைச் செலுத்த நினைத்தாள்; அதிலே கவலையைக் கரைக்க எண்ணினள். சரசுவதி கல்லூரியில் சேர்ந்துவிட்டாள். படிக்கிறாள்....

* * *

கீழே விழுந்து கிடந்த மலர் என் கண்ணில் பட்டது. குனிந்தேன்; எடுத்துக் கண்ணில் ஒற்றினேன். உடன் படிக்கும் நண்பன் கூட இருந்தான். "செடிகளிலே எத்தனையோ மலர்கள் பூத்துக் குலுங்கி இருக்க, கீழே கிடக்கும் பூவைப் போய் எடுத்தாயே, பயித்தியம்!" என்று 'காரண காரிய'ப் பேச்சுப் பேசினன்.

மலர் சொல்லிற்று: "உலகம் அப்படித் தான். அதைப்பற்றி நினைக்க வேண்டாம். நான் உன் அன்புக்குரிய மலர்; நீ என் மணத்துக் குரிய அன்பன்....ரசிகன்."

---







